

# நாளுக்கு நாள்

## அதிக தெளிவான

## எழிலோங்கும் சருமம்



ரெக்ஸோனுவிலுள்ள **கேடில்** இந்த அற்புத

வேலையைச் செய்யட்டும்



ரெக்ஸோனுவின் கேடில் கலந்த நுரையை உங்கள் சருமத்தில் மெதுவாகத் தேய்த்து, பிறகு கழுவுங்கள். உங்கள் சருமம் நாளுக்கு நாள் அதிக மழமழப்பும் தெளிவும் பெறுவதைக் காண்பீர்கள்.




# ரெக்ஸோனு

## கேடில் கலந்த சோப் இது ஒன்றே

* சருமத்திற்கு ஊட்டமளித்து மிருதுவாக்கும் எண்ணெய்களின் பிரத்தியேகக் கலவையின் ரெஜிஸ்டர் செய்யப்பட்ட பெயர்.

RP 107-50 TM

ரெக்ஸோனு ப்ரொப்ரைட்டரி லிமிடெடுக்காக இந்தியாவில் தயாரித்தது.

# கல்கி
# பொருளடக்கம்


மலர் 13 இதழ் 4 | 1953 ஆகஸ்டு 23 | விஜய ௵ ஆவணி 7உ




"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்கள்; சம்பவங்களும் கற்பனையே.

# நீங்கள் பணத்தை மிச்சப்படுத்தலாம்

# பயர்ஸ்டோன்

# Firestone டயர்களினுல்



நீங்கள் பயர்ஸ்டோன் டயர்களை வாங்கும்போது உங்களுக்கு பயர்ஸ்டோனின் உலகப்பிரசித்தி பெற்ற அதிக பந்தோபஸ்து மற்றும் சேவை — அதிகப்படிச் செலவின்றி கிடைக்கிறது. எனவே நீங்கள் பயர்ஸ்டோன் வாங்கும்போது பணத்தை மிச்சப் படுத்துகிறீர்கள்.

**நீடித்த உழைப்பு**

புதிய, பிரத்யேக பிடிக் கவலைகள் தேய்வுக்கு எதிர்ப்பளித்து, அபாயமற்ற பிடிப்பிடிப்புச் கவடுகளில் தொடர்ந்து ஓடுவதாலும், பயர்ஸ்டோனின் கம் - டிப்பிங் முறையினுல் குளிர்ச்சியாக ஓடும் அமைப்பை உடையதால் இவையனைத்தும் ஒருங்கு சேர்ந்து உங்களுக்கு நீடித்த சேவையை அளிக்கிறது.

**அதிக பந்தோபஸ்து**

கம் - டிப்டு கயிற்று உடல், சேதங்கள் மற்றும் டயர் வெடித்தலை எதிர்க்கும் வண்ணம் மிக உறுதியாயும் அபாயமற்று மிருக்கிறது. நிச்சயமாக அபாயமின்றி அமைந்துள்ள பிடிகளையும் கயிற்று உடலையும் பிரிக்க முடியாததொரு இணைப்பாகச் செய்து மேலும் அதிக பந்தோபஸ்தை அளிக்கிறது. 5,000க்கு மேற்பட்ட கூர்மையான கோண-மூலைகள் வழுக்கலுக்கு உங்களுக்கு அதிகப் பாதுகாப்பை அளிக்கிறது.

நீங்கள் கொடுக்கும் பணத்திற்கு சீப்பமாக வெகு நாள் நீடித்து உழைக்கும் டயர் பயர்ஸ்டோன் — அத்துடன் ......

அதை வாங்க <u>இப்போதே</u> சமயம் !

பயர்ஸ்டோன் டயர் அண்டு ரப்பர் கம்பெனி ஆப் இந்தியா லிமிடெட்



மலர் 13 | தமிழ்த் திருநாடு தன்னைப் — பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா. —பாரதியார் | இதழ் 4

# அனல் காற்றும் அரசியல் கொதிப்பும்

இந்தியாவை அடுத்துள்ள ஈரான் தேசத்திலிருந்து சில தினங்களுக்கு முன் பயங்கரமான ஒரு செய்தி வந்தது.

அந்த நாட்டில் எப்போதுமே கோடை காலத்தில் வெய்யில் மிகவும் உக்ரமாக இருக்கும். இந்த வருஷத்திலோ வெனில், இதற்கு முன் எக்காலத்திலும் ஏற்பட்டிராதவாறு அனல் காற்று சகிக்க முடியாததாகி விட்டதாம்.

அங்கு சிற்சில இடங்களில் குறைந்த பட்ச உஷ்ணம் 120 டிகிரியாகவும் அதிக பட்ச உஷ்ணம் 180 டிகிரியாகவும் இருந்ததாம்.

மேற்படி அனல் காற்றின் கொடுமை தாங்க முடியாமல் நூற்றுக் கணக்கான ஜனங்கள் மடிந்ததாகப் பத்திரிகைச் செய்திகள் கூறின.

அங்குள்ள கால நிலையைப்போல் அரசியல் நிலைமையும் இதற்கு முன் இராதவாறு மிகுந்த கொதிப்பு அடைந்திருக்கிறது என்று இப்போது கிடைத்துள்ள பத்திரிகைச் செய்திகளிலிருந்து தெரிகிறது.

பாரசீக எண்ணெய் விவகாரத்தை ஒட்டி, சென்ற இரண்டு ஆண்டுகளாக ஈரான் பிரதம மந்திரி முஸாதிக்கிற்கும் பிரிட்டிஷ் சர்க்காருக்கும் ஏற்பட்ட போராட்டம் இன்னும் முடிவடையவில்லை.

பிரிட்டனுடன் சமரசம் செய்து கொள்வதற்கு, முஸாதிக்கின் மூர்த்தண்யமான எதிர்ப்பும் பிடிவாதமுமே முட்டுக்கட்டையாக இருக்கின்றன என்று ஈரானில் உள்ள முக்கிய தலைவர்களில் சிலர் கருதுகின்றனர்.

எனினும் முஸாதிக்கின் கையே நாளுக்கு நாள் ஓங்கி வருகிறது.

முஸாதிக்கைப் பகிரங்கமாக எதிர்த்த பிரபல பாரசீகத் தலைவர்கள் பொது மக்களிடையே செல்வாக்கு இழந்து அஞ்ஞாதவாசம் செய்யும்படி நேர்ந்து விட்டது.

இதைத் தவிர, தமது நோக்கத்துக்கு முட்டுக்கட்டையாக இருந்த ஈரான் பார்லிமென்டையே ஒழித்துவிட முஸாதிக் கைக்கொண்ட முறை பூரண வெற்றியைக் கொடுத்துள்ளது.

ஏற்கெனவே முஸாதிக் தமக்கு இடையூறாக இருந்த ஈரான் செனேட் சபையை ரத்து செய்தது நினைவிருக்கலாம்.

ஆனால் அவர் இதுவரையில் தமது இஷ்டப்படி பல காரியங்களைச் சாதித்துக் கொண்டுள்ளார். அப்படியிருந்தும் அவர் ஜனநாயக ஒழுங்கு முறைகளை மீறி எதுவும் செய்யாததுபோல் தோன்றுவது வயோதிகரான முஸாதிக்கின் ராஜதந்திரத்தையே நிரூபிக்கிறது.

பிரதம மந்திரி முஸாதிக் முன்னர் ஈரான் பார்லிமென்டின் சம்மதத்தைப் பெற்றே செனேட் சபையை ஒழித்தார்.

இப்போதோ, ஈரான் மக்களின் பூரணமான சம்மதத்தைப் பெற்று பார்லிமென்டு சபையையே கலைத்து விட்டார்.

அவ்விஷயமாக ஈரானியர்களிடையே வாக்கு எடுத்தபோது, பெருவாரியான மக்கள் பார்லிமென்டு கலைக்கப்படுவதை ஆதரித்து வோட்டுக் கொடுத்தனர்.

இதிலிருந்து, ஈரான் மக்களிடையே முஸாதிக்கிற்கு உள்ள அபரிமிதமான செல்வாக்கை உணர்ந்து கொள்ளலாம்.

இப்போதுள்ள பார்லிமென்டைக் கலைத்து விட்டு, புதிதாகத் தேர்தல் நடத்த வேண்டும் என்பதே முஸாதிக்கின் உத்தேசம்.

அவ்வாறு ஏற்படும் புதிய பார்லிமென்டில் தமது கட்சிக்குப் பெரும்பான்மையான ஸ்தானங்கள் கிடைக்கும் என்பது அவரது நம்பிக்கை.

அவ்விதம் பார்லிமென்டில் பெருவாரியான ஸ்தானங்கள் கிடைத்து விட்டால், பிறகு முஸாதிக் யாதொரு இடையூறுமின்றி ஆட்சி நடத்தலாம் அல்லவா?

# சிக்கல் தீருமா?




இந்தியாவுக்கும் பாகிஸ்தானுக்கும் ஏற்பட்டுள்ள பிரச்னைகளைச் சுமுகமாகத் தீர்த்துக் கொள்ளப் பாகிஸ்தான் பிரதமர் முகம்மது அலி புது டில்லிக்கு விஜயம் செய்துள்ளார்.

---

இந் நிலைமையில் ஈரான் அரசியல் கொந்தளிப்பு மற்றொரு நெருக்கடியான கட்டத்தை அடைந்திருக்கிறது.

ஈரான் மக்களின் அபிமானத்துக்குப் பாத்திரராக இருந்து வந்ததாகச் சொல்லப்பட்ட ஈரான் மன்னர், பிரதம மந்திரி மூஸாதிக்கை எதிர்த்ததன் விளைவாக நாட்டைத் துறந்து வெளி நாட்டுக்கு ஓடும்படி நேர்ந்திருக்கிறது.

அதாவது சென்ற சில மாதங்களாக ஈரான் மன்னருக்கும் மூஸாதிக்கிற்கும் நடந்து வந்த பலப் பரீட்சையில் மூஸாதிக் வெற்றி பெற்று விட்டார்.

சர்வாதிகாரம் கோரும் மூஸாதிக்கைக் கைது செய்து சிறைப்படுத்தி விட்டு அவரது ஆட்சிப் படலத்துக்கு முற்றுப் புள்ளி வைப்பதற்காக ஷா செய்த தந்திரம் பலிக்கவில்லை.

அதற்கு மாறாக, ஷா நாட்டைவிட்டு வெளியேறும்படி நேர்ந்திருக்கிறது.

அவருக்கு ஆதரவாக இருந்த பிரமுகர்களும் இராணுவத் தலைவர்களும் கைதியானார்கள்.

ஷாவின் வெளியேற்றம் பிரதம மந்திரி மூஸாதிக்கிற்கு மற்றொரு பெரும் வெற்றியாகவே தற்போது காணப்படுகிறது.

எனினும், தமது மனைவியுடன் தற்காலிகமாக இத்தாலி தேசத்தில் அடைக்கலம் புகுந்துள்ள ஷா தாம் முடி துறக்கவில்லை என்று அறிவித்திருப்பதால், ஈரான் உள்நாட்டுப் பிரச்னை மேலும் சிக்கலாகி யிருக்கிறது.

இவ்வாறு ஈரான் வெளிநாட்டு விவகாரங்களிலும் உள் நாட்டிலும் ஏற்பட்டுள்ள சிக்கல்களை மூஸாதிக் திறமையுடனும் திருப்திகரமாகவும் தீர்க்க வேண்டும். இன்றேல், அவர் இதுவரை அடைந்த வெற்றிகள் பாதிக் கிணறு தாண்டிய கதையாகவே முடியும்!

# கோதாவரியின் கோபாவேசம்

பல ஆண்டுகளாக மழை பெய்யாததன் விளைவாகச் சென்ற வருஷம் ஆந்திரப் பிரதேசத்தைச் சேர்ந்த சில பகுதிகளில் கொடிய பஞ்சம் ஏற்பட்டது. அதனால் ஆந்திர மக்கள் சொல்லொணாக் கஷ்டத்துக்கு உள்ளாயினர். அவர்களுடைய கஷ்ட நிவாரணத்துக்காகத் தமிழ் மகாஜனங்கள் தாராளமாக நன்கொடை வழங்கினார்கள். சென்னை சர்க்காரும் அதற்காகச் சற்றேறக் குறையப் பத்து கோடி ரூபாய் செலவு செய்ய வேண்டியதாயிற்று.

இப்போது ஆந்திரப் பிரதேசம் மற்றொரு விதமான கஷ்டத்துக்கு இலக்காகி யிருக்கிறது. கோதாவரி நதியில் வெள்ளப் பெருக்கு ஏற்பட்டு ராஜமகேந்திரவர நகரின் பல பகுதிகளும் நூற்றுக் கணக்கான கிராமங்களும் பாழாகி விட்டன. கால்நடைகளுக்கும் சொத்துக்களுக்கும் மகத்தான சேதம் ஏற்பட்டுள்ளது. தென்னிந்தியாவிலேயே மிகப் பெரிய ராஜமகேந்திரவரம் ரயில்வே பாலத்தில் தென்னை மர உயரத்துக்கு, அறுபத்தைந்து அடிக்கு மேல் தண்ணீர் நின்றிருந்ததெனில், வெள்ளத்

தின் அளவைக் கற்பனை செய்து கொள்ளலாம். சென்ற ஐம்பது ஆண்டுகளில் ஒருபோதும் இத்தகைய பயங்கரமான வெள்ளம் ஏற்பட்டதில்லை என்று கூறப்படுகிறது.

கோதாவரியின் கோபாவேசத்துக்கு இலக்காகி அல்லல்படும் ஆந்திர சகோதர சகோதரிகளுக்கு நமது அனுதாபத்தைத் தெரிவித்துக் கொள்கிறோம். வெள்ளத்தினால் வீடு வாசல்களையும் சொத்துக்களையும் இழந்து தவிக்கும் அவர்களுக்கு உதவி புரியப் பொது மக்களும் சர்க்காரும் தாமதமின்றி முன் வருவார்கள் என்று நம்புகிறோம்.

* * *

பாரத நாட்டில் உள்ள பெரும் நதிகளில் கோதாவரியும் ஒன்று. எனவே அதில் அடிக்கடி வெள்ளம் ஏற்படுவதைத் தடுக்கும் சக்தி மனிதனுக்கு இல்லை. ஆனால் மேற்படி வெள்ளத்தைக் கட்டுப்படுத்தி, அதனால் சேதம் உண்டாகாமல் பாதுகாக்கும் சக்தி ஜனங்களுக்கு இருக்கிறது. அத்தகைய வெள்ளம் மனிதரையும் ஆடுமாடுகளையும், நிலங்களையும் வீடுகளையும் சூறையாடாமல் தடுப்பதுடன், அதனால் மக்களுக்குச் சுபிட்சம் ஏற்படும் படியும் செய்யலாம். அவ்விதம் செய்யவில்லையெனில், அது மனிதனின் குற்றமேயன்றி இயற்கையின் குற்றமல்ல.

உதாரணமாக, அமெரிக்காவில் டென்னெஸி என்று ஓர் பெரிய ஆறு இருக்கிறது. அந்த ஆற்றில் அடிக்கடி வெள்ளம் உண்டாகி ஆயிரக் கணக்கில் உயிர்ச் சேதமும் அபரிமிதமான சொத்து நஷ்டமும் ஏற்பட்டு வந்தன. இறுதியில் அணைக்கட்டு நிர்மாணித்து அமெரிக்கர்கள் அதைக் கட்டுப்படுத்தி விட்டார்கள்.

அதன் பலனாக, அடிக்கடி ஏற்பட்டுவந்த கஷ்ட நஷ்டங்கள் நின்றதுடன், ஜனங்களின் சுபிட்ச வாழ்க்கைக்கும் வழி உண்டாயிற்று. இன்று டென்னஸி நதியில் வரும் வெள்ளம் நாற்பதாயிரம் சதுர மைல் பிரதேசத்துக்குப் பாய்வதுடன், ஐம்பது லட்சம் ஜனங்களின் ஆனந்த வாழ்வுக்குக் காரணமாக இருக்கிறது. மற்றும் அதிலிருந்து அங்குள்ள ஏராளமான தொழிற்சாலைகளுக்குக் குறைந்த கட்டணத்தில் மின்சார வசதியும் கிடைத்திருக்கிறது.

அந்த உதாரணத்தைப் பின்பற்றியே இப்போது இந்தியாவில் தாமோதர் நதிக்கும் அணை கட்டி வருகிறார்கள்.

தாமோதர் நதியிலும் அடிக்கடி வெள்ளம் உண்டாகி மிகுந்த உயிர்ச்சேதமும் சொத்து நஷ்டமும் ஏற்பட்டு வந்தன. தாமோதர் நதியில் நிர்மாணிக்கப்பட்டு வரும் அணைக்கட்டு பூர்த்தியானதும், பத்து லட்சம் ஏக்கர் நிலங்களில் விவசாயம் செய்வதற்குப் போதிய தண்ணீர் வசதி கிடைக்கும். மேற்படி நிலங்களிலிருந்து நாலு லட்சம் டன் உணவுப் பொருள் உற்பத்தியாகுமென்று மதிப்பிட்டிருக்கிறார்கள். அதிலிருந்து மின்சார வசதி கிடைக்கவும் வழி இருக்கிறது.

அதுபோலவே கோதாவரி, கிருஷ்ணா நதிகளின் தண்ணீரையும் அணை கட்டிக் கட்டுப்படுத்தி, சரியான பாசனத்துக்கு ஏற்பாடு செய்ய வேண்டும். அவ்விதம் செய்தால், ஆந்திர மாகாணத்தில் மாத்திரமல்ல, தமிழ் நாட்டில் உள்ள செங்கல்பட்டு முதலிய ஜில்லாக்களில் அடிக்கடி ஏற்படும் தண்ணீர்ப் பஞ்சமும் உணவுப் பஞ்சமும் பஞ்சாகப் பறந்துவிடும் என்பதில் சந்தேகமில்லை. ஆனால் ஆந்திர சகோதரர்களின் தற்போதைய மனநிலை அதற்கு இடம் கொடுக்குமா என்று எண்ணவேண்டியிருக்கிறது. கோதாவரி வெள்ளத்தினால் தங்களுக்கு எவ்வளவு கஷ்ட நஷ்டங்கள் வேண்டுமாயினும் ஏற்படட்டும்; அந்த வெள்ளத்தைத் தடுத்துத் தேக்க அணைக்கட்டு நிர்மாணிப்பதினால் தமிழ் நாட்டுக்கு நன்மை உண்டாவதாயின், அதைத் தாங்கள் சகிக்க முடியாது என்னும் எண்ணத்தை ஆந்திர சகோதரர்கள் சிலர் சமீபத்தில் வெளியிட்டிருக்கிறார்கள்.

புதிய ஆந்திர இராஜ்யம் ஏற்பட்டு நல்ல முறையில் சிலகாலம் ஆட்சி நடந்த பிறகேனும், மேற்கூறிய குறுகிய மனோபாவம் நம் ஆந்திர சகோதரர்களை விட்டுப் போய் விடும் என்று எதிர்பார்ப்போமாக.

# பாகிஸ்தான் பிரதமர் கண்ட காட்சி

கோட்டைச் சுவரிலே தேள் கொட்டியதாம்
குட்டிச் சுவரிலே நெறி கட்டியதாம்!

சென்ற சில தினங்களாகப் பாகிஸ்தானில் நடந்து வரும் ஆர்ப்பாட்டமும் துவேஷப் பிரசாரமும் மேலே குறிப்பிட்ட விநோதப் பழமொழியையே ஞாபக மூட்டுகின்றன.

பாகிஸ்தான் பத்திரிகைகளும் மந்திரிகளில் சிலரும் மேற்படி துவேஷப் பிரசாரத்தில் நேரடியாகக் கலந்து கொண்டுள்ளனர்.

அவர்கள், சமீப காலமாக இந்தியாவுக்கும் பாகிஸ்தானுக்கும் ஏற்பட்டுள்ள சுமுகமான உறவு சீர்குலைவதற்கான காரியங்களைச் செய்து வருகின்றனர். தங்களுடைய அவசர புத்தியால் எத்தகைய விபரீதங்கள் விளையக்கூடும் என்பதை அவர்கள் உணர்ந்ததாகத் தெரியவில்லை.

காஷ்மீர் பிரதம மந்திரியாக இருந்த ஷேக் அப்துல்லா கைது செய்யப்பட்டதும், அங்கு புதிய மந்திரி சபை ஏற்பட்டதும் காஷ்மீரின் உள்நாட்டு விஷயமாகும்.

அங்கு நிகழ்ந்த மேற்படி சம்பவங்களுக்கும் இந்தியாவுக்கும் எவ்வித சம்பந்தமும் இல்லை. இந்தியத் தலைவர்கள் அதில் பங்கு எடுத்துக் கொள்ளவில்லை. அச்சம்பவங்கள் நிகழ்ந்தபோது, காஷ்மீரிலுள்ள இந்தியப் படைகள் தங்களுடைய முகாம்களை விட்டே வெளிக் கிளம்பவில்லை.

காஷ்மீர் பிரச்னை விஷயத்தில் இந்தியா அவ்வளவு நீதி நெறியுடனிருந்தும், பாகிஸ்தான் தலைவர்கள் காஷ்மீர் சம்பவங்களுக்கு இந்தியா மீது குற்றம் சாட்டுவது நியாயமற்ற காரியம்.

ஆனால் பாகிஸ்தான் பிரதம மந்திரி ஜனாப் முகமது அலி காஷ்மீர் சம்பவங்களால் நிதானத்தை இழந்து விடாமல், ஜவாஹர்லால் நேருவுடன் சமரசப் பேச்சு நடத்துவதற்காகப் புது டில்லிக்கு விஜயம் செய்தது போற்றத் தக்கது.

ஜனாப் முகமது அலி தம்பதிகளுக்கும் பாகிஸ்தான் வெளிநாட்டு மந்திரி ஜனாப் ஜபருல்லா கானுக்கும் புது டில்லி மக்கள் அளித்துள்ள மகத்தான வரவேற்பிலிருந்து, பாகிஸ்தான் மீது இந்தியாவுக்கு உள்ள நல்லெண்ணத்தையும் நட்பு உணர்ச்சியையும் மேற்படி தலைவர்கள் சந்தேகமின்றித் தெரிந்து கொண்டிருக்கலாம்.

காஷ்மீர் பிரச்னையை ஒட்டி ஜவாஹர்லால்ஜி இந்தியா பார்லிமெண்டில் பேசியபோது பாகிஸ்

தான் தலைவர்களும் பிரசன்னமாயிருந்தார்கள். ஜனாப் முகமது அலி பார்லிமெண்டுக்கு விஜயம் செய்த போது, அங்கத்தினர்கள் சம்பிரதாய விதியையும் மீறி, கரகோஷம் செய்து அவரை ஆரவாரத்துடன் வரவேற்றார்களாம்.

எனவே பாகிஸ்தான் தலைவர்கள் புது டில்லியிலே கண்ட காட்சிகள், பாகிஸ்தான் கொண்டுள்ள அனுவசியமான பீதிக்குச் சிறிதும் ஆதாரம் இல்லை என்பதைக் காட்டியிருக்கின்றன.

பார்லிமெண்டில் நேருஜியின் பேச்சு அவர்களுடைய சந்தேகத்தை அறவே அகற்றியிருக்கும்.

இந்தியா-பாகிஸ்தான் பிரச்னைகளைச் சமாதானமாகத் தீர்த்துக் கொள்ள இந்தியா உறுதி கொண்டிருக்கிறது என்று ஜவாஹர்லால்ஜி அறிவித்தார்.

பாகிஸ்தானில் இப்போது எழுந்துள்ள தப்பெண்ணமும் துவேஷப் பிரசாரமும், ஜவாஹர்லால்ஜியின் மேற்படி உறுதிமொழியைக் கேட்ட பிறகாவது மறையும் என நம்புவோமாக!

# மற்றொரு புதுமை!

உலகிலேயே கத்தியின்றி இரத்தமின்றிச் சுதந்திரம் ஈட்டிய பெருமை முதன் முதலாக இந்தியாவுக்குத்தான் கிடைத்தது. இதுவரையில் உலகம் கண்டிராத மற்றொரு புதுமையும் சென்ற வாரம் சென்னைமா நகரில் நிகழ்ந்தது. பாரதநாடு சாத்விகமாகச் சுதந்திரம் பெற்ற வரலாற்றைப் போல், சென்னையில் நிகழ்ந்த சம்பவமும் சரித்திரத்தில் நிரந்தரமான இடம் பெறும் என்பது நிச்சயம்.

கொரியாவில் போர் நின்று சமாதான ஒப்பந்தம் ஏற்பட்டிருப்பது உலகம் அறிந்த விஷயம். அந்த ஒப்பந்தத்துக்கு இணங்க, இரு கட்சிகளும் பரஸ்பரம் யுத்தக் கைதிகளை அனுப்புவதன் சம்பந்தமாகச் சில நிபந்தனைகள் ஒப்புக் கொள்ளப்பட்டிருக்கின்றன. மேற்படி நிபந்தனைகள் சரிவர நிறைவேறும்படி பார்த்துக் கொள்வதற்காக இந்தியத் துருப்புகள் கொரியாவுக்குச் செல்ல வேண்டும் என்பது சமாதான ஒப்பந்தத்தின் ஷரத்துகளில் ஒன்று.

அதன்படி மேஜர் ஜெனரல் தோரட் தலைமையில் ஆயிரத்து இரு நூறு இந்தியத் துருப்புகள் அடங்கிய முதல் கோஷ்டி சென்ற செவ்வாய்க்கிழமை சென்னையிலிருந்து கப்பலில் கொரியாவுக்குப் புறப்பட்டுச் சென்றது.

அவர்களுக்கு நல்விடை கூறி ஐலண்டு மைதானத்திலே நடந்த வைபவத்தில், ராஜாஜி அத்துருப்புகளுக்கு ஆசி வார்த்தைகள் கூறினார்.

உலக சரித்திரத்திலே இதுவரையில், ஒரு நாட்டைச் சேர்ந்த துருப்புகள் மற்றொரு நாட்டுக்குப் போர் நிமித்தமாகவே சென்றுள்ளன. ஆனால், சமாதானத்தைப் பாதுகாப்பதற்காகவும் இரு கட்சிகளுக்கும் பரஸ்பரம் நல்லுறவும் நல்லெண்ணமும் ஏற்படும்படி செய்வதற்காகவும் ஒரு தேசத்தின் படைகள் மற்றொரு தேசத்துக்குச் செல்லுவது சர்வ தேச சரித்திரத்திலேயே இதுதான் முதல் தடவை ஆகும்.

அத்தகைய மகோன்னதமான பொறுப்பை ஏற்றுக் கொண்டு அன்னிய தேசத்துக்குச் சென்றுள்ள நமது படைவீரர்கள், தங்களுடைய கடமையில் பூரண வெற்றிபெறப் பிரார்த்திக்கிறோம்.

# செங்கற்பட்டு மகாநாடு

'அலையை நினைத்து உரலை இடிப்பது' போன்ற காரியத்தைப் பலர் தற்சமயம் தமிழ் நாட்டில் செய்து வருகிறார்கள். காரியாலயத்தில் துரையின் மேல் வந்த கோபத்தை வீட்டிற்கு வந்து பெண்டு பிள்ளைகளின் பேரில் செலுத்தும் முறையை அவர்கள் கடைப்பிடித்து வருகிறார்கள். ராஜாஜி சர்க்கார் நல்ல முறையில் நடந்து வருகிறதே, வெற்றிக்குமேல் வெற்றியாக அடைந்து வருகிறதே என்று அவர்களுக்கு ஆத்திரம். அந்த ஆத்திரத்தைப் புதிய ஆரம்பக் கல்வித் திட்டத்தின் பேரில் காட்டுகிறார்கள். மேற்குக் கடற்கரையில் மழை வேறு ஏராளமாகப் பொழிந்து விட்டதா! நதிகளில் வெள்ளம் புரண்டோடுகிறதா! இனிமேல் விசேஷ பிரேத நிருபர்களை அனுப்பிப் பட்டினிச் சாவுப் படம் பிடித்துப் போடுவதற்குச் சூழ்நிலை சரியாக இராது. வஞ்சம், சலுகை முதலிய குற்றங்களைச் சொல்வதற்கில்லை. பொய்யும் புனை சுருட்டும் புனைந்து கூறினாலும் ஜனங்கள் நம்புவதில்லை. சொல்லுகிறவர்களின் யோக்யதை நன்றாகத் தெரிந்த விஷயமாதலால் அத்தகைய பொய் புனை சுருட்டுகளை யாரும் நம்புவதில்லை. ஆகவே, இப்படி நிராசை கொண்டவர்கள் எல்லாரும் புதிய கல்வித் திட்டத்தைப் பிடித்துக் கொண்டு வெளுத்து வாங்குகிறார்கள். குழந்தைக் குலத்தைக் காப்பாற்ற வந்த உயர்ந்த திட்டத்தைக் குழந்தைக் குலத்தை விழுங்க வந்த கோர ராட்சதன் என்று வர்ணனை செய்கிறார்கள். சாதிவேற்றுமையை நிலை நாட்டவந்த திட்டம் என்கிறார்கள். இன்னும் இல்லாத பொல்லாத குற்றங்களையெல்லாம் அதன்பேரில் சுமத்துகிறார்கள். தாழ்ந்த வகுப்புக் குழந்தைகளுக்குப் படிப்பில்லாமல் செய்யும் சூழ்ச்சி என்கிறார்கள்.

"பொய்யுடை ஒருவன் சொல்வன்மையினால்
மெய்போலும்மே மெய்போலும்மே"

என்பது முதுமொழி. "முழுப் பொய்யாக இருந்தாலும் அதைப் பத்து தடவை திருப்பிச் சொன்னால், அந்தப் பொய் மெய்யாகி விடும்" என்பது ஹிட்லரின் சித்தாந்தம். ஆனால் ஹிட்லர் சித்தாந்தம் அவனுடைய காலத்திலேயே பொய்யாகப் போய் விட்டது. பொய்யைச் சொல்வன்மையுடன் சிலகாலம் சொல்லி வந்தால் அது 'மெய் போலும்மே!' என்ற நமது முதுமொழியில் உண்மை உண்டு. ஆனால் அது மெய்போலத்தான் இருக்குமே தவிர, மெய்யாகி விடாது. சொல்வன்மையுடன் பத்து தடவை ஒரு பொய்யைச் சொல்வதினால் உண்டாகும் தீமையை, உண்மையை ஒருதடவை சாதாரணமாக எடுத்துச் சொல்வதினால் போக்கி விடலாம். ஆனால் அந்த ஒரு தடவையாவது மெய்யை எடுத்துச் சொல்ல யாராவது முன் வரவேண்டும் அல்லவா! சத்தியமே ஜயமடையும்; சந்தேகமில்லை. ஆனால் அந்த சத்தியத்தை எடுத்துச் சொல்லி உறுதியுடன் கடைப் பிடிக்க யாரேனும் முன் வர வேண்டும்,

புதிய கல்வித்திட்டத்துக்கு இவ்விதப் பணியைச் செய்யச் செங்கற்பட்டு சேவா சங்கத்தார் முன்

வந்திருப்பதைப் பாராட்டுகிறோம். புதிய ஆரம்பக் கல்வித்திட்டத்தின் ஆதரிப்பாளர் மகாநாட்டை நாளது ஆகஸ்டு 21ல் வெள்ளிக் கிழமை செங்கற்பட்டு நகரில் நடத்துகிறார்கள். கல்வி மந்திரி டாக்டர் எம். வி. கிருஷ்ணராவ் இம் மகாநாட்டுக்குத் தலைமை வகிக்கிறார். நிதி மந்திரி சி. சுப்ரமணியம் மகாநாட்டை ஆரம்பித்து வைக்கிறார். ஸ்ரீ வெருரான ரொமணியார், ஸ்ரீ ராஜாராம்நாயுடு, ஸ்ரீ கே. விநாயகம், ஸ்ரீ ஏ. ஜி. வெங்கடாச்சாரியார், ராஜாஜி முதலியவர்கள் புதிய கல்வித் திட்டத்தின் முக்கிய அம்சங்களைப் பற்றிப் பேசுகிறார்கள். செங்கற்பட்டு ஜில்லாவில் சமூகத் தொண்டில் ஈடுபட்டுள்ளவர்கள் பலரும் கல்வித்துறையில் பணி செய்பவர்களும் இம்மகாநாட்டில் கலந்து கொள்வார்கள் என்று தெரிகிறது. செங்கற்பட்டு ஜில்லாவின் மாபெரும் சமூகத் தலைவரான ஸ்ரீ வேதாசல முதலியார் அவர்கள் இந்த முயற்சியில் ஊக்கம் கொண்டு ஒத்துழைக்க முன் வந்திருக்கிறார் என்றும் அறிகிறோம்.

புதிய கல்வித் திட்டத்துக்கு ஆதரவான பிரசாரம் போதிய அளவு தமிழ் நாட்டில் நடைபெறவில்லை என்று ஒரு புகார் இருந்து வருகிறது. (ஆந்திர நாட்டில் புதிய திட்டத்துக்கு எதிர்ப்பே இல்லை யென்பது குறிப்பிடத் தக்கது.)

எதிர்ப் பிரசாரம்தான் அதிகமாக நடைபெறுகிறது. ஆனால் சென்ற சில தினங்களில் பல காங்கிரஸ் ஸ்தாபனங்கள் புதிய கல்வித் திட்டத்தை ஆதரித்துத் தீர்மானம் செய்திருப்பதுடன் பிரசார முயற்சியிலும் இறங்கி யிருக்கின்றன.

புதிய கல்வித் திட்டம் ஓர் அரசியல் பிரச்னை மட்டும் அல்ல. நம் வருங்கால சந்ததிகளுக்குப் புத்துயிரும் புதிய வாழ்வும் அளிக்கக் கூடிய சமூக புனருத்தாரணத் திட்டம். எந்த அரசியல் கட்சி அதிகாரத்துக்கு வந்தாலும், யார் மந்திரி பதவி வகித்தாலும், இந்தப் புதிய ஆரம்பக் கல்வித் திட்டத்தை நல்ல முறையில் நடத்தி நாட்டுக்கு நல் வாழ்வை அளிக்கலாம்.

ஆகையால் இத்திட்டத்தை ஆதரித்துப் பிரசாரம் செய்வதற்கும், இதனால் விளையக் கூடிய நலன்களை எடுத்துச் சொல்வதற்கும் செங்கற்பட்டு சேவா சங்கத்தைப் போன்ற சமூகத் தொண்டு செய்யும் ஸ்தாபனங்கள் மகாநாடு நடத்த முன் வருவது பெரிதும் பாராட்டத் தக்கதாகும்.

ஒவ்வொரு ஜில்லாவிலும் உள்ள சமூக ஊழியர்கள் ஒத்துழைத்து இம்மாதிரி ஒரு மகாநாடு கூட்டி வெற்றிகரமாக நடத்த ஏற்பாடு செய்வது மிகப் பொருத்தமா யிருக்கும்.

# தலைமை நீதிபதியின் சாட்சியம்

மாதம் எண்பது ரூபாய் சம்பளமும் பதினெட்டு ரூபாய் கிராக்கிப்படியும் பெற்று ஏதோ வாழ்க்கையை ஒருவாறு சமாளித்துக் கொண்டு வரும் தந்தையிடம் அவருடைய குமாரன் ஒரு நாள் பின்வரும் ஜாபிதாவைக் கொண்டு வந்து நீட்டினான் :

| | | |
|---|---|---|
| கணக்கு நோட்டு | 400 | பக்கம் |
| இங்கிலீஷ் நோட்டு | 300 | பக்கம் |
| தமிழ் நோட்டு | 300 | பக்கம் |
| ஸயன்ஸ் நோட்டு | 250 | பக்கம் |
| சமூக அறிவு நோட்டு | 250 | பக்கம் |
| சமூக அறிவு (பிராக்டிகல்) | 250 | பக்கம் |
| டிராயிங் நோட்டு | ... | |
| டெஸ்ட் நோட்டுகள் தமிழ் | 200 | பக்கம் |
| ,, இங்கிலீஷ் | 200 | பக்கம் |
| ,, ஹிந்தி | 200 | பக்கம் |

இந்த இடத்தில் மேற்படி தகப்பனார் மூர்ச்சை போட்டு விழுந்து விட்டார்.

பையன் நாலாவது பாரம் படிக்கிறான். முப்பது ரூபாய்க்குப் புத்தகங்கள் போன மாதம் வாங்கியாகிவிட்டது. இப்போது இவ்வளவு நோட்டுப் புத்தகங்கள் வாங்க வேண்டும். விலை போட்டுக் கூட்டிப் பார்த்தால், புத்தகம் வாங்கிய செலவுக்கு வந்து விடுகிறது. அந்த ஏழைத் தகப்பனார் பணத்துக்கு எங்கே போவார்! எனவே, அவர் மூர்ச்சையடைந்து விழுந்து விட்டதில் வியப்பு என்ன! அவருடைய கதி அப்படி யிருக்கட்டும்.

சில தினங்களுக்கு முன்பு சென்னைக்கு விஜயம் செய்திருந்த இந்தியாவின் தலைமை நீதிபதி ஸ்ரீ பதஞ்சலி சாஸ்திரியார் இக்காலத்துப் பள்ளிக்கூடங்களைப் பிடித்திருக்கும் நோட்டுப் புத்தக வியாதியைப் பற்றிக் குறிப்பிட்டுப் பேசினார். "எங்கள் காலத்தில் நாங்கள் ஸ்லேட்டுப் பலகையில் எழுதிப் படித்தோம்!" என்றார். ஸ்ரீ பதஞ்சலி சாஸ்திரியாரின் காலத்திலும் அவருக்கு முந்தைய காலத்திலும் மாணுக்கர்கள் அனைவரும் ஸ்லேட்டுப் பலகையில் எழுதித்தான் படித்தார்கள். அத்துடன் ஆசிரியர்கள் சொல்வதைத் தங்கள் மனமாகிய பலகையிலும் எழுதி வைத்துக் கொண்டார்கள். இதன் காரணமாக, அறிவுத் துறை ஒவ்வொன்றிலும் மேதாவிகளும் மகான்களும் தோன்றினார்கள். ஸர் ஸி. வி. ராமன் போன்ற விஞ்ஞான மேதைகளும், ஸர் எஸ். சுப்பிரமண்ய ஐயர் போன்ற பிரபல நீதிபதிகளும் உயர்தரப் பள்ளிக்கூடங்களில் ஸ்லேட்டுப் பலகையிலும், மனப் பலகையிலும் எழுதிக் கொண்டு பாடம் படித்தவர்கள்தான்.

இந்த நாளில் "கல்வித்தரம் குறைந்துவருகிறது" என்ற கூக்குரலை அடிக்கடி கேட்டு வருகிறோம். நோட்டுப் புத்தகங்களும், 'நோட்ஸ்' புத்தகங்களும் பெருகப் பெருக, கல்வித் தரம் குறைந்து கொண்டு வருவதில் வியப்பு ஒன்றுமில்லை. பிள்ளைகள் இக்காலத்தில் எதையும் மனத்தில் வாங்கிக் கொள்வதில்லை. பாட புத்தகங்களைத் தவிரச் சுமார் 12 நோட்டுப் புத்தகங்கள் வாங்கிக் கொள்கிறார்கள். பள்ளிக்கூடங்களில் ஆசிரியர்கள் சொல்வதை நோட்டுப் புத்தகங்களில் எழுதுவதிலேயே அவர்களுடைய சக்தி முழுதும் செலவழிந்து விடுகிறது. பிறகு, பரீட்சை எழுதும் சமயத்தில், சகல ரோக சஞ்சீவி மருந்துகளைப்போல் வெளியாகும் சகல பரீட்சை வினாவிடை 'நோட்ஸ்' புத்தகங்களை எடுத்துப் படித்து மூளையை வறட்டிக் கொள்கிறார்கள். இந்த முறையினால் பிள்ளைகளின் தேககத்துக்கு நேரும் கேட்டைப் பற்றிச் சொல்ல வேண்டியதில்லை. பாட புத்தகங்களையும் நோட்டுப் புத்தகங்களையும் தூக்கிச் செல்வதற்கே அவர்கள் கையில் 'திராணி' இருப்பதில்லை.

ஆரம்பக் கல்வித் திட்டத்துக்கு வந்திருப்பது போன்ற புரட்சிகரமான மாறுதல் நம் ஹைஸ்கூல் கல்வித் திட்டத்துக்கும் வரவேண்டும். அந்தப் புரட்சிகரமான மாறுதலில் முதற் காரியமாக நோட்டுப் புத்தகங்களும், 'நோட்ஸ்' புத்தகங்களும் ஒழிக்கப்பட வேண்டும்.

# அசல் காங்கிரஸ்காரர்கள்தான்!

“தமிழரசுக் கழகத்தைக் காங்கிரஸி லிருந்து விலக்கி விடுவதென்று த. நா. கா. கமிட்டி தீர்மானித்தது தமிழ மக்களின் எண்ணத்தைப் பிரதிபலிக்கவில்லை. அத்தீர்மானம் தமிழ் நாட்டிலுள்ள எல்லா தேசிய வாதிகளையும் துக்கத்தி லாழ்த்தியுள்ளது.

அத்தீர்மானம் வெளியாகிய பின் 'கல்கி' இதழ்கள் இரண்டு வெளி வந்திருக்கின்றன. ஆனால் ஒன்றில்கூட அத்தீர்மானத்தைப்பற்றி எதுவும் எழுதப்பட வில்லை என்பதைப் பார்க்க என்னைப் போன்ற எண்ணற்ற 'கல்கி' நேயர்கள் மிகவும் வருந்துகின்றனர்.

சேலம்
12-8-53 அ. முத்துசாமி.”

மேற்கண்ட முறையில் எழுதப்பட்ட பல கடிதங்கள் நமக்கு வந்திருக்கின்றன. கடிதம் எழுதாத ஆயிரக் கணக்கான நேயர்களின் உள்ளத்தில் இத்தகைய எண்ணங்கள் ஏற்பட் டிருக்கும்.

தமிழரசுக் கழகத் தலைவர் ஸ்ரீ சிவஞான கிராமணியார் அகில இந்தியக் காங்கிரஸ் கமிட்டிக்கு அப்பீல் செய்திருப்பதை நேயர்கள் அறிவார்கள். அதன் முடிவு தெரியும் வரையில் நாம் ஒன்றும் எழுதாம லிருப்பதே நல்லது என்று எண்ணித் தான் எழுதவில்லை. தமிழரசுக் கழகத்தார் நாளைக்கு மாகாணக் காங்கிரஸ் அமைப்புடன் சேர்ந்து ஒத்துழைத்துப் பணி செய்யும்படி நேரலாம். இடை நடுவில் மனக் கசப்பு வளரும்படியான காரியம் நடைபெறாம லிருப்பது நலம்.

ஒன்று மட்டும் நாம் நிச்சயமாகக் கூற முடியும். தமிழரசுக் கழகத்தார் காங்கிரஸ் அமைப்பை விட்டுப் போகும்படி நேர்ந்தாலும் அவர்கள் நூற்றுக்கு நூறு அசல் காங்கிரஸ் வாதிகளாகவும் தேச பக்தர்களாகவும் இருந்து தொண்டாற்றி வருவார்கள். பொது மக்களும் அவர்களை உண்மைக் காங்கிரஸ்வாதிகளாகவே கருதி வருவார்கள்.

# வேலை கிடைத்துவிட்டது!

வேலை ஒன்றும் கிடைக்காத காரணத்தினால் உயிரை விட்டுவிடத் தோன்றுகிறது என்று நம் வட்ட மேஜையில் எழுதியிருந்த அணக்குடி ஸ்ரீ எம். கண்ணன் தமக்குப் பம்பாயில் வேலை கிடைத்துவிட்டது என்ற செய்தியை மகிழ்ச்சியுடன் அறிவித்திருக்கிறார். அவரைப் பற்றிப் பெரிதும் கவலை கொண்டு நமக்கு அடிக்கடி எழுதி விசாரித்து வந்த சகோதர சகோதரிகள் இனிக் கவலை நீங்கி அவரவர்களுடைய வேலையில் ஈடுபடலாம் என்று தெரிவித்துக் கொள்கிறோம்.

## அட்டைப்பட விளக்கம்

“மாங்காய்ப் பால் உண்டு மலைமேல் இருப்போர்க்குத்
தேங்காய்ப் பால் ஏதுக் கடி?”

என்பதாகச் சித்தர் பாடல் ஒன்று கேட்டிருக்கிறோம். இதற்கு உட் பொருள் ஏதோ இருப்பதாகவும் சொல்வார்கள். அது ஏதேனும் இருந்துவிட்டுப் போகட்டும். மாங்காயோ, மாங்கனியோ சாப்பிட்டுக் கொண்டு மரக் கிளையின்மேல் உட்கார்ந்திருக்கும் சிறுவனுக்கு உலகில் வேறு எதுவுமே வேண்டியதில்லை என்றுதான் தோன்றும்!

ஆனால் ஒரு யோசனை மட்டும் அத்தகைய பிள்ளையின் உள்ளத்தில் சில சமயம் உண்டாகக் கூடும். “இந்த மரம் இவ்வளவு இனிய மாங்கனிகளைத் தருகிறதே? இது எத்தனை காலத்துக்கு முன்னால் வைக்கப்பட்ட மரம்? எவ்வளவு காலம் இதற்குத் தண்ணீர் ஊற்றிப் பாதுகாத்து வளர்த்திருக்க வேண்டும்? மரம் நட்ட மகானுபாவன் யார்? தண்ணீர் விட்டுக் காப்பாற்றி வளர்த்த புண்ணிய புருஷன் யார்? அவர்கள் பல ஆண்டுகளுக்கு முன்னால்,—நாம் பிறப்பதற்குப் பல வருஷங்களுக்கு முன்னால்,—விதை ஊன்றிச் செடி நட்டு நீர் ஊற்றி வளர்த்ததினால் அல்லவோ, நாம் இன்று இந்த இனிப்பான மாம்பழத்தைச் சாப்பிட முடிகிறது?” என்னும் எண்ணங்கள் மரக்கிளையில் அமர்ந்து மாம்பழம் சாப்பிடும் சிறுவன் மனத்தில் உதயமாகக் கூடும். அதிலிருந்து, “நமக்குப் பின்னால் வருகிறவர்களுக்கு உபயோகமாகும் பொருட்டு நாமும் சில மரங்கள் இந்தப் பூமியில் நட்டுப் பயிராக்க வேண்டும் அல்லவா?” என்னும் எண்ணமும் அவனுக்குத் தோன்றலாம் அன்றோ?

சிறுவர்களுடைய மனத்தில் ஒரு யோசனை உதித்தால், பெரியவர்களைப்போல் மீனமேஷம் பார்த்துக் கொண்டிருக்க மாட்டார்கள். உடனே அதைக் காரியத்திலும் நிறைவேற்றுவார்கள். மாமரத்தில் ஏறி மாம்பழம் பறித்துத் தின்ற அம்பிப் பயல் தன் தங்கையையும் நண்பர்களையும் அழைத்துக் கொண்டு தோட்டத்தில் மாஞ் செடி வைத்துத் தண்ணீர் ஊற்றும் காட்சியை நம் அட்டைப் படத்தில் காணலாம். இந்தச் சின்னஞ் சிறு குழந்தைகளின் குஞ்சுக் கைகளினால் வைத்து வளர்க்கப்படும் செடி, வருங் காலத்தில் மரமாக ஓங்கி வளர்ந்து, பூவும் பிஞ்சும் காயும் கனியும் குலுங்கி, இன்னும் பல பிள்ளைகளுக்கும் கிள்ளைகளுக்கும் ஆனந்தக் கொண்டாட்டத்தை அளிக்கட்டும்!

# பொன்னியின் செல்வன்

## கல்கி

அத்தியாயம் 37

## இரும்பு நெஞ்சு இளகியது!

வேட்டை மண்டபத்துக்குள் வந்தியத்தேவனையும் மணிமேகலையையும் பார்த்து விட்டு நந்தினியும் சிறிது திகைத்துப் போனாள்.

"ஓஹோ! நீங்கள் எப்படி இங்கே வந்தீர்கள்?" என்று கேட்டாள்.

"தேவி! தங்கள் கட்டளை என்று தங்கள் தோழி கூறியபடியால் வந்தேன். பெண் புத்தியைக் கேட்டிருக்கக் கூடாது என்று இங்கு வந்த பிறகு தெரிந்து கொண்டேன்" என்றான் வந்தியத்தேவன்.

"அக்கா! நான் இவருக்குப் புத்தி கூறவில்லை; என்னுடன் தங்களைப் பார்க்க வரும்படி வேண்டிக் கொண்டேன்!" என்றாள் மணிமேகலை.

நந்தினி தனக்கு முதலில் உண்டான திகைப்பைச் சமாளித்துக் கொண்டு புன்னகை புரிந்தாள்.

"என் அருமைத் தோழி! பெண்களாகிய நாம் புருஷர்களை வேண்டிக் கொண்டால், அது புத்தி கூறுவது போலத்தான்!" என்றாள்.

"புத்தி கூறுவது போல மட்டுமா? கட்டளையிடுவது போல என்று சொல்லுங்கள். தேவி! தாங்கள் என்னை அழைப்பதாகச் சொல்லி இளவரசி என்னைக் கைப் பிடியாகப் பிடித்து இழுத்துக் கொண்டு வந்தாள். அதன் பலன் நான் இந்தக் கொலைகாரர்களிடம் சிக்கிக் கொள்ள வேண்டியதாயிற்று!" என்றான் வந்தியத்தேவன்.

"ஐயா! இங்கே நடந்திருப்பதைப் பார்த்தால், இவர்கள் கொலைகாரர்கள் என்று தோன்றவில்லையே? நான் இப்போது இங்குவந்திராவிட்டால், தாங்கள் அல்லவோ இவர்களையெல்லாம் கொன்று தீர்த்திருப்பீர்கள் போலிருக்கிறது!"

"அக்கா! இவர்கள் கொலைகாரர்கள் தான்! சற்று முன் இவர்கள் இவரை வாலில்லாக் குரங்குடனே சேர்த்துக் கட்டி விட்டார்கள்!......"

நந்தினி இலேசாகச் சிரித்த வண்ணம் "மணிமேகலை! முன்னொரு சமயம் இவர் இந்த வாலில்லாக் குரங்கின் பின்னால் ஒளிந்து கொண்டிருந்தார் என்று சொன்னாய் அல்லவா? அது இவர்களுக்கு எப்படியோ தெரிந்திருக்கிறது!" என்றாள்.

"எப்படியோ இல்லை, அக்கா! நீங்கள் வருவதற்கு முதல் நாள் இந்த வேட்டை மண்டபத்தில் நான் பார்த்ததாகச் சொன்னேனே, அந்த மனிதர்கள் தான் இவர்கள்! அன்றைக்கே இவரைத் துரத்திக் கொண்டு வந்தார்கள். நல்ல வேளையாக இவர் அவர்களிடமிருந்து தப்பித்து ஓடி விட்டார்!......"

"மறுபடியும் இன்றைக்கு இவரை நீயே இவர்களிடம் கொண்டு வந்து

சேர்த்தது ஏன், மணிமேகலை? இந்த வழியில் எதற்காக இவரை அழைத்துக் கொண்டு வந்தாய்?"

"அக்கா! சற்று முன் என் தமையன் கந்தமாறன் தங்களைப் பார்க்கப் போகிறேன் என்று சொல்லிக் கொண்டிருந்தான். அவன் கண்ணில் படவேண்டாம் என்பதற்காக இந்த வழியில் அழைத்து வந்தேன். அதுவே நல்லதாய்ப்போயிற்று. இல்லாவிட்டால், இந்தக் கொலைகாரர்கள்......"

"தங்காய்! இவர்கள் கொலைகாரர்கள் அல்ல. இவர்கள் இவரைக் கொல்லவும் வரவில்லை. இரண்டு மூன்று தடவை இவர் இவர்களிடம் தனியாக அகப்பட்டுக் கொண்டிருக்கிறார். ஆனாலும் உயிரோடு விட்டிருக்கிறார்கள். இதன் உண்மையை நீ இவரைக் கேட்டே தெரிந்து கொள்ளலாம்."

"அப்படியானால், இவர்கள் யார், அக்கா! சற்று முன்னால் இவர்கள் கூறியதுதான் உண்மையா? இவர்கள் தங்களுக்குத் தெரிந்தவர்களா? தங்களை அழைத்துக் கொண்டு போவதற்காக வந்தவர்களா?" என்று மணிமேகலை வியப்புடன் கேட்டாள்.

"ஆம், தோழி! என்னைக் காப்பாற்றி அழைத்துப் போக வந்தவர்கள். எல்லாம் விவரமாகச் சொல்கிறேன். நீங்கள் இருவரும் என்னுடன் அடுத்த அறைக்கு வாருங்கள்! இவர்கள் இங்கேயே இருக்கட்டும்!" என்றாள் நந்தினி.

பிறகு ரவிதாஸனைப் பார்த்து "மந்திரவாதி! இந்த இருவரில் ஒருவருக்கு நீங்கள் ஏதேனும் தீங்கு செய்தால், அதை எனக்குச் செய்த தீங்காகவே கருதுவேன். இவர்களை நீங்கள் இனி எந்த நிலைமையில் எங்கு சந்திக்க நேர்ந்தாலும் மிக்க மரியாதையாக நடத்த வேண்டும்!" என்றாள்.

ரவிதாஸன், "தேவி! மன்னிக்க வேண்டும். இந்த வாலிபனுக்கு நம்முடைய சங்கேதக் குரல் தெரிந்திருக்கிறது. சற்று முன் ஆந்தைக் குரல் கொடுத்தது இவனே தான்!" என்றான்.

"அதிலிருந்தே இந்த வீரன் நம்மைச் சேர்ந்தவன் என்று தெரியவில்லையா? மந்திரவாதி! உன்னுடைய புத்திக் கூர்மை எங்கே போயிற்று? போனது போகட்டும். இனி, நான் மறுபடியும் தெரியப்படுத்தும் வரையில் இங்கே சத்தம் ஏதுவும் கேட்கக் கூடாது! ஜாக்கிரதை!" என்றாள் நந்தினி.

பிறகு, நந்தினியும் மணிமேகலையும் வந்தியத்தேவனும் யானைமுக வாசல் வழியாக நந்தினியின் அறைக்குள்ளே பிரவேசித்தார்கள். கதவும் உடனே அடைத்துக் கொண்டது.

• • •

"தங்காய்! நீ மிக்க புத்திசாலி! இவரை வேட்டை மண்டப வழியாக அழைத்து வந்தது நல்லதாய்ப்போயிற்று. உன் தமையன் இப்போதுதான் இங்கிருந்து போகிறான். ஆதித்த கரிகாலரை அழைத்து வருவதாகச் சொல்லிப் போயிருக்கிறான். அதற்குள் உங்களை நான் அனுப்பிவிட வேண்டும். உங்களிடம் விடை பெற்றுக் கொள்ளவும் வேண்டும்!" என்றாள் நந்தினி.

"அக்கா! இது என்ன? தங்கள் கணவரைப் பற்றி உண்மையை அறிந்து வர இவரை அனுப்பப் போவதாக வல்லவோ சொன்னீர்கள்? தாங்கள் விடை பெற்றுக் கொள்வதாகச் சொல்கிறீர்களே?" என்றாள் மணிமேகலை.

"உன் தமையனிடம் பேசிய பிறகு அந்த எண்ணத்தை மாற்றிக் கொண்டு விட்டேன், தங்காய்! பழுவேட்டரையர் உயிரோடு இருந்தாலும், இல்லாவிட்டாலும் நான் இனி இங்கே தங்க முடியாது. இந்த வீரரும் இனி இங்கே இருப்பது அபாயந்தான். ஐயா! தாங்கள் உடனே இங்கிருந்து கிளம்பிச் செல்லுங்கள். தங்கள் உயிரின்மேல் தங்களுக்கு ஆசை இல்லாவிட்டாலும், இந்தப் பெண்ணை உத்தேசித்தாவது உடனே போய் விடுங்கள்!" என்றாள் நந்தினி.

"அக்கா! இவர் போகிறதாயிருந்தால், என்னையும் கூட அழைத்துப் போகச் சொல்லுங்கள். நீங்களும் இவரும் போன பிறகு இந்த அரண்மனைச் சிறையில் அடைந்து கிடக்க என்னால் முடியாது!" என்றாள் மணிமேகலை.

"இளவரசி! பழுவூர் ராணியின் கருத்தைத் தாங்கள் அறிந்து கொள்ளவில்லை. நான் இங்கிருந்து போய் விட்டால், தாங்கள் ஆதித்த கரிகாலரை மணந்து தஞ்சை சாம்ராஜ்யத்தின் பட்டமகிஷியாக விளங்கலாம் என்று சொல்கிறார்கள்!" என்றான் வல்லவரையன்.

"இல்லை, நான் அவ்விதம் சொல்லவில்லை. ஆதித்த கரிகாலரை மணக்கும் துர்ப்பாக்கியம் எந்தப் பெண்ணுக்கும் ஏற்படுவதை நான் விரும்ப மாட்டேன். அதிலும், என் உயிர்க்குயிராகி விட்ட

மணிமேகலைக்கு அந்தக் கதி நேரவேண்டுமா? ஐயா! தாங்கள் வேண்டுமென்று என் கருத்தைத் திரித்துக் கூறுகிறீர்கள். தாங்கள் இப்போது தப்பித்துச் சென்றால், பிறிதொரு காலத்தில் இந்தப் பெண்ணைக் கைப்பிடித்து மணந்துகொள்ளும் பாக்கியத்தைப் பெறக் கூடும்! மணிமேகலை! உனக்கு இவர் மீதுள்ள அன்பு உண்மையான அன்பு என்றால், உடனே இவரை இங்கிருந்து போகச் சொல்லு!" என்றாள் நந்தினி.

"ராணி! நான் போகச் சித்தமாயிருக்கிறேன். தங்களிடம் உள்ள ஒரு பொருளை யாசிக்கிறேன். அதைக் கொடுத்தால், உடனே போய் விடுகிறேன்!" என்றான் வந்தியத்தேவன்.

"ஐயா! என்னிடம் தாங்கள் கோரிப் பெறக் கூடிய அத்தகைய பொருள் என்ன இருக்கிறது? சொல்லுங்கள்!"

"மீன் அடையாளம் பொறித்த வாள் ஒன்று தங்களிடம் இருக்கிறது. அதைக் கொடுத்தால் போய் விடுகிறேன். என்னுடைய வாளைக் கொள்ளிடத்து வெள்ளத்தில் விட்டு விட்டேன் என்பதுதான் தங்களுக்குத் தெரியுமே?" என்றான் வந்தியத் தேவன்.

"ஐயா! வேட்டை மண்டபத்தில் எத்தனையோ வாள்களும் வேல்களும் இருக்கின்றன. வேண்டியவற்றை எடுத்துக் கொண்டு தாங்கள் இந்தக் கணமே புறப்படலாமே? பெண்பாலாகிய நான் என் உயிரைக் காப்பாற்றிக் கொள்ள வைத்திருக்கும் அந்த ஓர் ஆயுதத்தை ஏன் கேட்க வேண்டும்?"

"தேவி! தங்களுடைய உயிரைக் காப்பாற்றிக் கொள்ள மட்டுந்தானா அந்த வாளை வைத்துப் பூஜை செய்து வருகிறீர்கள்? உண்மையைச் சொல்லுங்கள்!"

"என் உயிருக்கும் மேலான கற்பைக் காப்பாற்றிக் கொள்ளவுந்தான் அந்தக் கத்தியை வைத்திருக்கிறேன்."

"தேவி! வேறு நோக்கம் ஒன்றுமில்லையா?"

"வேறு நோக்கம் எனக்கு என்ன இருக்கக் கூடும்?"

"வீர பாண்டியருடைய மரணத்துக்குப் பழிக்குப் பழி வாங்குவதற்காகவும் இருக்கலாம் அல்லவா?"

"மணிமேகலை இருக்கும்போது நீர் அந்தப் பேச்சை எடுக்க மாட்டீர் என்று நினைத்தேன். நானும் இனி மறைக்க வேண்டிய அவசியம் இல்லை. தங்காய்! நீயும் தெரிந்து கொள். நான் இந்தக் கடம்பூர் அரண்மனைக்கு வந்ததின் நோக்கம் என்னவென்று தெரிந்து கொள்!"

இவ்வாறு சொல்லிய வண்ணம் நந்தினி தேவி பக்கத்தில் கட்டிலின் மீது வைத்திருந்த மீன் அடையாளமிட்ட வாளைக் கையில் எடுத்துக் கொண்டாள்.

"சோழ சாம்ராஜ்யத்தின் உட் கலகத்தைத் தீர்த்து வைப்பதற்காக நான் இங்கு வரவில்லை. மதுராந்தகத் தேவருக்கும் ஆதித்த கரிகாலருக்கும் இராஜ்யப் பிரிவினை செய்து வைப்பதற்காகவும் நான் இங்கே வரவில்லை. கடம்பூர் அரண்மனையில் விருந்துண்டு களிப்பதற்காகவும் வரவில்லை! தங்காய்! உனக்குத் திருமணம் முடித்து வைப்பதற்காகவும் வரவில்லை. வீர பாண்டியரின் தலையைக் கொய்த பாதகனைப் பழிக்குப் பழி வாங்கவே வந்தேன். இது பாண்டிய குலத்து வாள்! இதன்மேல் ஆணை யிட்டு நான் சபதம் செய்திருக்கிறேன். அந்தச் சபதத்தை முடிக்கவே வந்தேன். இன்றிரவு ஒன்று என் சபதத்தை முடிப்பேன்; அல்லது என் உயிரை முடிப்பேன்!" என்று நந்தினி ஆவேசம் வந்தவள்போல் பேசி நிறுத்தினாள்.

"அதற்கு நான் தடையாக இருப்பேன் என்றுதானே என்னைப் போகச் சொல்லுகிறீர்கள்? என் உயிருக்கு ஆபத்து வரும் என்று பயமுறுத்தப் பார்க்கிறீர்கள்?" என்றான் வந்தியத்தேவன்.

"ஆகா! என் பழியை முடிப்பதற்கு நீர் தடை செய்யப் போகிறீரா? நல்ல காரியம்! யார் வேண்டாம் என்றார்கள்? உம்முடைய நண்பரிடம் சென்று இதையெல்லாம் சொல்லி இங்கே அவரை வராமல் தடுத்து விடுவதுதானே?"

"தேவி! அவரிடம் சொல்லித் தடை செய்ய முடியாது என்றுதான் தங்களிடம் வந்தேன். தங்களுடைய காலில் விழுந்து கெஞ்சிக் கேட்டுக் கொண்டாவது தங்களை இந்தப் பாவ காரியம் செய்யாமல் தடுப்பதற்கு வந்தேன்......"

"ஆகா! பாவ காரியமா? எது பாவ காரியம்? என் தோழியிடம் கேட்டுப் பார்க்கலாம். மணிமேகலை! நீ சொல்! நீ உன் நெஞ்சை ஒருவருக்கு அர்ப்பணம் செய்திருக்கிறாய். அவர் காயம்பட்டு நிராதரவா யிருக்கும்போது அவருடைய பகைவன் அவரைக் கொல்ல வருகிறான். நீ அப்பகைவன் காலில் விழுந்து உன் காதலரைக் கொல்ல வேண்டாமென்று

வேண்டிக் கொள்ளுகிறாய். அவன் அப்படியும் கேட்காமல் கொன்று விட்டுப் போகிறான். அப்படிப்பட்ட கிராதகனைப் பழி வாங்குவது பாவம் என்று நீ சொல்லுவாயா, என் கண்ணே!"

"ஒரு நாளும் சொல்ல மாட்டேன், அக்கா! ஆனால் உங்களைப் போல் நான் அவன் காலில் விழுந்து கெஞ்சியிருக்கவும் மாட்டேன். நானே கத்தி எடுத்து அவனை முன்னாலேயே கொன்றிருப்பேன்!" என்று சொன்னாள் மணிமேகலை.

வந்தியத் தேவன் மணிமேகலையை நோக்கி, "இளவரசி! அந்தப் பகைவன் ஒருவேளை தங்களுடைய சொந்தச் சகோதரன் என்று ஏற்பட்டு விட்டால்?..." என்று கேட்டான்.

"சகோதரனாயிருந்தாலும், யாராயிருந்தாலும் எனக்கு ஒன்றுதான்!" என்றாள் மணிமேகலை.

"அப்படிச் சொல்லடி, என் கண்ணே!" என்றாள் நந்தினி.

"இளவரசி தாம் சொல்லுவது இன்னதென்று யோசியாமல் சொல்லுகிறார். இவருடைய தமையன் கந்தமாறன் என்னதான் இவருக்கு விரோதமாகக் காரியம் செய்தாலும், அவனைக் கொல்ல இவருக்கு மனம் வருமா?" என்று வல்லவரையன் கேட்டான்.



நந்தினியும் மணிமேகலையும் ஒருவரையொருவர் பார்த்துக் கொண்டார்கள்.

பின்னர் நந்தினி வந்தியத்தேவனைப் பார்த்து, "இது என்ன வீண் கேள்வி? நான் என் கூடப் பிறந்த சகோதரனைக் கொல்லப் போவதில்லை. முதன் முதலில் நீர் என்னைச் சந்தித்தபோது என் தமையன் திருமலையின் பெயரைச் சொன்னீர். அதனாலேதான் உம்மிடம் எனக்கு அபிமானம் உண்டாயிற்று. ஆழ்வார்க்கடியானுடைய நண்பர் என்பதற்காகவே நீர் பல முறை அபாயத்திலிருந்து தப்பிச் செல்வதற்கு உதவி செய்தேன். ஐயா! இன்று நான் என் சபதத்தை முடிக்காமல் என் உயிரை விடும்படி நேர்ந்தால், திருமலையிடம் என்னை மன்னிக்கும்படி கேட்டுக் கொண்டதாகத் தெரிவிக்க வேண்டும். அவனுடைய சொற்படி நான் நடக்கா விட்டாலும், அவனை அடியோடு மறந்துவிடவில்லை என்பதாகச் சொல்ல வேண்டும்!" என்றாள்.

"அம்மணி! இந்தக் கபட நாடகம் இன்னும் ஏன்? ஆழ்வார்க்கடியான் தங்கள் தமையன் அல்ல; தாங்கள் அந்த வீர வைஷ்ணவனுடைய சகோதரியும் அல்ல......"

"பின் யார் என் தமையன்? யாருடைய சகோதரி நான்?"

"தங்கள் தமையனார் ஆதித்த கரிகாலர்தான். ஆகையினாலேயே தாங்கள் சகோதரஹத்தி தோஷத்துக்கு ஆளாக வேண்டாம் என்று வேண்டிக் கொள்கிறேன். வீரபாண்டிய குலத்துக் கொலை வாளை தயவு கூர்ந்து என்னிடம் கொடுத்து விடும்படி மன்றாடுகிறேன்!"



"கரிகாலரும் நானும் உடன் பிறந்தவர்கள் என்ற அபூர்வ கற்பனையைத் தாங்கள் இளவரசரிடம் சொல்லியிருக்கிறீர்கள் அல்லவா? அதை அவர் நம்பினாரா?" என்று நந்தினி ஏளனப் புன்னகையுடன் கேட்டாள்.

"நம்பியதாகத் தான் தோன்றியது. ஆனால் அவர் மனத்தில் உள்ளதை நான் ஒன்றும் அறியேன்......"

"அவர் மனத்தில் உள்ளதை நான் அறிவேன். அந்தப் பழையாறை மோகினியின் கற்பனா சக்தியைப் பற்றி அவர் பெரிதும் வியக்கிறார்......"

"அம்மணி! நான் கூறியது கற்பனையல்ல. பழையாறை இளைய பிராட்டியின் கற்பனை அல்லவே அல்ல. ஈழ நாட்டில் நான் என் கண்ணால் பார்த்தேன்......"

"என்னத்தைப் பார்த்தீர்?"

"வாயினால் பேசும் சக்தி அற்ற ஒரு பெண் தெய்வத்தைப் பார்த்தேன். என்னையும் ஆழ்வார்க்கடியானையும் அருள்மொழிவர்மரையும் அந்தத் தெய்வ மகள் பேரபாயத்திலிருந்து காப்பாற்றினார். அநுராதபுரத்தின் வீதிகளில் நள்ளிரவில் நாங்கள் ஒரு பழைய மாளிகையின் ஓரமாகப் போய்க் கொண்டிருந்தபோது அவர் வீதியின் எதிர்ப் பக்கத்தில் நின்று எங்களைச் சமிக்ஞையினால் அழைத்தார். அருள்மொழிவர்மரும் நாங்களும் அவரை நோக்கி நகர்ந்ததும் நாங்கள் சற்று முன் நின்றிருந்த வீட்டின் முகப்பு இடிந்து விழுந்தது. பொன்னியின் செல்வர் அந்தப் பெண்ணரசியைத் தம் குலதெய்வம் என்று போற்றி வணங்கினார்......"

"ஐயா! இந்தக் கதைக்கும் எனக்கும் என்ன சம்பந்தம்? அருள்மொழிவர்மரைச் சோழ சிங்காதனத்தில் அமர்த்த விரும்பும் இளைய பிராட்டியிடம் இதையெல்லாம் நீங்கள் கூறியிருக்கலாம்; அவளும் வியந்து மகிழ்ந்திருப்பாள். என்னிடம் ஏன் சொல்கிறீர்?......"

"அதற்குக் காரணம் இருக்கிறது. அநுராதபுரத்து வீதிகளில் மங்கலான நிலவு வெளிச்சத்தில் அந்தப் பெண்ணரசியை நான் சற்றுத் தூரத்திலிருந்து பார்த்த போது, 'தஞ்சாவூரில் நாம் விட்டுப் பிரிந்து வந்த பழுவூர் இளைய ராணி இங்கே எப்படி வந்து சேர்ந்தார்?' என்று வியப்படைந்தேன். அம்மணி! தங்களுக்கும் அவருக்கும் உருவத் தோற்றத்தில் அணுவளவும் வித்தியாசம் இல்லை. தங்கள் ஆபரண அலங்காரங்களை நீக்கிவிட்டுக் கூந்தலைப் பிரித்துப் போட்டுக் கொண்டால் தத்ரூபமாக அவரைப் போலவே இருப்பீர்கள்......"

"நீர் சொல்லுவதை நான் ஏன் நம்ப வேண்டும்? தாங்கள் கற்பனா சக்தி அதிகமுடையவர் என்பதை நான் அறிவேன். இதுவும் ஏன் உமது அபூர்வ கற்பனைகளில் ஒன்றாயிருக்கக் கூடாது?"

"தேவி! சத்தியமாகச் சொல்கிறேன்."

"நீர் எவ்வளவுதான் ஆணையிட்டுச் சொன்னாலும் என்னால் நம்ப முடியாது!"

"ராணி! 'நம்ப முடியாது' என்று தாங்கள் சொல்வது பொய்! நான் சொல்வது உண்மை என்பது தங்களுக்கே தெரியும். நாங்கள் தெரிந்து கொள்வதற்கு முன்பே தங்களுக்குத் தெரியும். அந்த உண்மையைத் தங்கள் காரியத்துக்கு உபயோகப் படுத்திக்கொண்டு மிருக்

கிறீர்கள். முதன் முதலில் தங்களைத் தஞ்சை அரண்மனையில் நான் சந்தித்துப் பேசிக் கொண்டிருந்தபோது இந்த மந்திரவாதி ஆந்தையைப் போல் கத்திக் கொண்டு வந்தான். என்னை அப்பால் போய் இருக்கச் சொன்னீர்கள். தற்செயலாகத் திறந்திருந்த பொக்கிஷ நிலவறைக்குள் நான் போய் ஒளிந்து கொண்டிருந்தேன். அப்போது சில விந்தையான காட்சிகளை நான் பார்க்கும்படி நேர்ந்தது......"

"ஆகா! அவை என்ன அபூர்வ காட்சிகள்?"

"கந்தமாறன் மதுராந்தகத் தேவரோடு அந்த நிலவறைப் பாதை வழியாகப் போவதைப் பார்த்தேன்..."

"அதனால் என்ன?"

"சிறிது நேரத்துக்கெல்லாம் அதே நிலவறையில் தாங்களும் பெரிய பழுவேட்டரையரும் போவதைப் பார்த்தேன். அப்போது நீங்கள் எங்கே போகிறீர்கள் என்பது தெரிந்திருக்கவில்லை. பிறகு தான் ஊகித்துத் தெரிந்துகொண்டேன். தங்கள் அன்னையின் ஆவி வடிவத்தைப் போல் நடித்துச் சக்கரவர்த்தியைத் துன்புறுத்துவதற்காகப் போகிறீர்கள் என்று தெரிந்து கொண்டேன்......"

இத்தனை நேரம் திடமாக நின்று பேசிக்கொண்டிருந்த நந்தினி இப்போது திடீரென்று சோர்வடைந்து அங்கே கிடந்த ஆசனம் ஒன்றில் அமர்ந்தாள்.

"ஐயா! இன்னும் என்ன தெரிந்து கொண்டீர்கள்?"

"தாங்களும் பெரிய பழுவேட்டரையரும் நிலவறைப் பாதையில் போய்க் கொண்டிருந்தபோது, மதுராந்தகரை அழைத்துச் சென்ற கந்தமாறன் திரும்பி வந்து கொண்டிருந்தான். பழுவேட்டரையரிடம் அவன் ஏதோ கூறினான். அவர் அவனுடன் தீவர்த்தி பிடித்துக் கொண்டு வந்த காவலனிடம் ஒரு சமிக்ஞை செய்தார்......"

"அது என்ன சமிக்ஞை?"

"தங்களுக்கு அது தெரிந்தேயிருக்க வேண்டும். கந்தமாறனை முதுகில் குத்திக் கொன்று விடும்படி பழுவேட்டரையர் கட்டளையிட்டார். அதை நான் தடுத்துக் கந்தமாறன் உயிரைக் காப்பாற்றினேன். அதன் பயனாக, அவனுடைய முதுகில் கத்தியால் குத்திய பழி என் பேரில் விழுந்தது......"

நந்தினி மணிமேகலையைத் திரும்பிப் பார்த்து விட்டு, "ஐயா! ஏதேதோ சொல்லி இந்தப் பெண்ணின் மனத்தை ஏன் கலக்குகிறீர்கள்?" என்றாள்.

"தேவி! இத்தனை காலமும் இதையெல்லாம் பற்றி நான் யாரிடமும் சொல்லவில்லை. உங்கள் கையில் வைத்திருக்கும் வாளை என்னிடம் தாங்கள் கொடுத்து விட்டால், இனியும் யாரிடமும் சொல்லவில்லை......"

"வாளைக் கொடுக்க முடியாது, ஐயா! எதற்காகக் கொடுக்க வேண்டும்? யாரிடம் வேண்டுமானாலும் சொல்லிக் கொள்ளுங்கள். இன்னும் ஏதாவது கற்பனை சேர்த்து வேணுமானாலும் சொல்லிக் கொள்ளுங்கள். ஏன்? இப்போதே கரிகாலரிடம் சென்று, அவர் இங்கு வருவதை நிறுத்தி விடுங்கள்! என்னை ஏன் தொந்தரவு செய்கிறீர்கள்? போங்கள்!" என்று நந்தினி கூறியபோது, அவளுடைய கண்களில் நீர் ததும்பியது.

"அம்மணி! இளவரசருடைய சுபாவம் எனக்கு நன்றாய்த் தெரியும். அவரைத் தடுக்க என்னால் முடியாது. தடுக்க முயன்றால் அவருடைய பிடிவாதம் அதிகமாகும். ஆகையினால்தான் தங்களை வேண்டிக் கொள்ள வந்தேன்......"

"என்னை வேண்டிக் கொள்ள உமக்கு என்ன உரிமை? நீர் கூறியதெல்லாம் உண்மையாகவே இருக்கட்டும். ஈழ நாட்டில் என்னைப் பெற்றெடுத்த அன்னையை நீர் பார்த்ததாகவே இருக்கட்டும். அதற்காக நான் ஏன் என் சபதத்தைக் கைவிட வேண்டும்? என் அன்னைக்குச் சக்கரவர்த்தி பெரிய துரோகம் செய்திருக்கிறார். அவர் மேலும் அவருடைய மக்கள் மேலும் நான் ஏன் இரக்கம் காட்ட வேண்டும்? பழி வாங்குவதற்கு வேண்டிய காரணம் இன்னும் அதிகமல்லவோ ஆகிறது?"

"இல்லை, அரசி! இல்லை! தங்களுடைய பழி வாங்கும் எண்ணத்தைத் தங்கள் அன்னை சரியென்று ஒப்புக் கொள்வாரா என்று யோசித்துப் பாருங்கள். சக்கரவர்த்தியின் மக்களை அந்த மூதாட்டி தம் உயிருக்கு உயிராகக் கருதியிருக்கிறார். அவர்களில் ஒருவரைத் தாங்கள் தங்கள் கையினால் கொல்லுவதை அவர் விரும்புவாரா என்று யோசித்துப் பாருங்கள்? ஒருநாளும் விரும்ப மாட்டார். தங்களுடைய செயலை அறிந்தால் அவர் தங்களை வெறுப்பார். அவர் உயிரோடிருக்கும் வரையில் தங்களைச் சபித்துக் கொண்டிருப்பார். இறந்த பிறகு கூட, ஆவி வடிவத்திலே வந்து தங்

களைச் சுற்றி வருத்திக் கொண்டிருப்பார். வாயினால் அவர் பேச முடியாது. ஆனால் அவருடைய கண் பார்வையே தங்களை என்றென்றைக்கும் நரகத்திலும் கொடிய வேதனையில் ஆழ்த்திக் கொண்டிருக்கும்......"

நந்தினியின் கண்களில் இப்போது கண்ணீர் பெருகிக் கொண்டிருந்தது. கண்ணீரைத் துடைத்துக் கொண்டு மேல் நோக்காகப் பார்த்தாள். அங்கு ஏதோ துயர மயமான காட்சியைப் பார்த்தவள் போல் அவள் முகம் வேதனை அடைந்து காட்டியது. "அம்மா! அம்மா! வீர பாண்டியருடைய தலையும் உடலும் தனித் தனியே வந்து என் பிராணனை வதைத்து எடுப்பது போதாதா? நீ வேறே வந்து என்னைச் சுற்ற வேண்டுமா?" என்று சொல்லிக் கொண்டே, அந்தக் காட்சியைப் பார்க்கச் சகிக்காதவள்போல் கண்களைக் கையினால் மூடிக் கொண்டாள். சிறிது நேரம் அந்த அறையில் நந்தினியின் விம்மல் சத்தம் மட்டுமே கேட்டது.

மணிமேகலை வந்தியத் தேவனைப் பார்த்து, "ஐயா! தாங்கள் இவ்வளவு குரூரமானவர் என்று எனக்குத் தெரியாமல் போயிற்று!" என்றாள்.

இதைக் கேட்ட நந்தினி உடனே தன் கண்களைப் பொத்தியிருந்த கரங்களை எடுத்து விட்டு "அவர் பேரில் குற்றம் ஒன்றுமில்லை, தங்காய்! என்னுடைய நன்மைக்காகத்தான் சொல்கிறார். என்னைப் பெரும் பாதகத்திலிருந்து காப்பாற்றுவதற்காகத்தான் சொல்லுகிறார்! ஆனாலும் அது என்னை இப்படித் துன்புறுத்துகிறது!" என்றாள்.

பின்னர், கண்ணீர் ததும்பிய கண்களினால் வந்தியத்தேவனை நோக்கி, "ஐயா! இதுவரையில் யாரும் சாதிக்க முடியாத காரியத்தை நீர் சாதித்து விட்டீர். என்னுடைய இரும்பு நெஞ்சையும் இளகச் செய்து விட்டீர். இதோ உமது விருப்பத்தின்படி இந்த வாளை உம்மிடமே கொடுத்து விடுகிறேன். பெற்றுக் கொள்ளும்!" என்று வாளை நீட்டினாள்.

வந்தியத்தேவன் அதைப் பெற்றுக் கொள்ளக் கையை நீட்டியபோது நந்தினி மறுபடியும் பின்வாங்கினாள்:—

"கொஞ்சம், பொறுங்கள்! வாளை எடுத்துக் கொள்வதற்கு முன் எனக்கு ஓர் உதவி செய்ய முடியுமா என்று சொல்லுங்கள். என் சபதத்தை நிறைவேற்றாமல் நான் இங்கிருந்து கிளம்பினால் வேட்டை மண்டபத்தில் உள்ளவர்கள் என்னைச் சும்மா விடமாட்டார்கள். உயிரோடு சிதையில் வைத்து நெருப்பு மூட்டிக் கொளுத்தி விடுவார்கள். அதற்குக்கூட நான் அஞ்சவில்லை. ஆனால் நான் சாவதற்கு முன்னால் என் தாயை ஒரு முறை சந்திக்க விரும்புகிறேன்......வாணர்குல வீரரே! நீர் கூறியதையெல்லாம் நான் நம்பவில்லையென்று சொன்னேன். அது தவறு! ஈழநாட்டுக் காடுகளில் தலைவிரி கோலமாகத் திரிந்து கொண்டிருக்கும் என் அன்னையைப் பற்றி நீர் சொல்லியதையெல்லாம் நான் நம்புகிறேன். ஒவ்வொரு வார்த்தையையும் நம்புகிறேன். நானே அவரைப் பார்த்ததும் உண்டு..."

"எப்போது? எப்படி?" என்று கேட்டான் வந்தியத்தேவன்.

"குழந்தைப் பிராயத்தில் நான் படுத்துத் தூங்கும்போது சில சமயம் திடுக்கிட்டுக் கண் விழித்துக் கொள்வேன். அப்போது ஒரு பெண்ணுருவம் என் முகத்தினருகில் குனிந்து என்னைக் கண் கொட்டாமல் பார்த்துக் கொண்டிருக்கக் காண்பேன். நான் கண் விழித்ததும் அந்த உருவம் மறைந்து விடும். எனக்கு இது அதிசயத்தையும் அச்சத்தையும் அளித்து வந்தது. கண்ணாடியில் என் முகத்தைப் பார்த்துக் கொள்வதில் எனக்கு அப்போதிருந்து ஆசை நிரம்ப உண்டு. ஆகையால் என் முகத்தோற்றம் என் மனத்தில் நன்கு பதிந்திருந்தது. நான் தூங்கும் போது என்னைக் குனிந்து உற்றுப்பார்த்த உருவம் என்னைப் போலவே இருப்பது பற்றி வியந்திருக்கிறேன். என் முகமும் என்னை உற்றுப் பார்த்துக் கொண்டிருந்த உருவத்தின் முகமும் ஒரே மாதிரி இருக்கும். கூடு விட்டுக் கூடு பாய்வது பற்றிய கதைகளை நான் கேட்டிருந்தேன். என் உயிரே என் உடம்பைவிட்டுப் பிரிந்து தனியாக மேலே நின்று என் முகத்தை உற்றுப் பார்த்துக்கொண்டிருக்கிறதோ என்று சந்தேகப்படுவேன். சில சமயம், நான் இறந்து போய்விட்டேனோ, படுத்திருப்பது என் உயிரற்ற உடம்போ என்று எண்ணித் திடுக்குறுவேன். இதெல்லாம் உண்மையாக நடப்பதா, கனவில் நடப்பதா, அல்லது என் மனப் பிரமையா, எனக்குச் சித்தக் கோளாறு ஏற்பட்டு விட்டதா என்றெல்லாம் எண்ணி வேதனைப்படுவேன். எனக்குப் பிராயம் வந்த பிறகு, அப்படி நான் கண்டதெல்லாம் உண்மை

யான தோற்றமேதான் என்று பல காரணங்களினால் எனக்கு நிச்சயமாயிற்று. முக்கியமாக, சுந்தர சோழர் என்னைப் பார்த்து அடைந்த குழப்பத்தைக் கவனித்து அந்த நிச்சயம் அடைந்தேன். வேறு பல அறிகுறிகளினாலும், ஆழ்வார்க்கடியான் சில சமயம் தவறிக் கூறிய வார்த்தைகளினாலும், என்னைப் போன்ற உருவம் படைத்த என் அன்னை ஒருத்தி இருக்க வேண்டும் என்று நிச்சயம் அடைந்தேன். அவரை ஒரு தடவை பார்க்க வேண்டும், அவருடைய மடியிலே படுத்து விம்மி அழ வேண்டும் என்று என் உள்ளத்தில் தாபம் குடி கொண்டது. ஐயா! இன்று தாங்கள் கூறிய வார்த்தைகளினால் அந்தத் தாபம் பன்மடங்கு அதிகமாகி விட்டது. என்னை என் தாயாரிடம் நீர் அழைத்துப் போவதாயிருந்தால், என் பழிவாங்கும் நோக்கத்தை விட்டு விடுகிறேன்! இந்தப் பாண்டிய குலத்து வாளை உம்மிடம் இப்போதே கொடுத்து விடுகிறேன்!" என்று விம்மிக் கொண்டே கூறினாள் நந்தினி.

வந்தியத் தேவன் சிந்தனையில் ஆழ்ந்தான். "இது என்ன வம்பு? கிணறு வெட்டப் பூதம் புறப்பட்டு விட்டதே?" என்று எண்ணினான்.

மணிமேகலை "ஐயா! நானும் தங்களை வேண்டிக் கொள்கிறேன். அக்காவின் விருப்பத்தை நிறைவேற்றி வைப்பதாக வாக்குக் கொடுங்கள்" என்றாள்.

வந்தியத்தேவன் மிக்க தயக்கத்துடன், "என்னால் முடிந்தால் பார்க்கிறேன்!" என்று சொன்னான்.

"அப்படியானால், உடனே நாம் கிளம்ப வேண்டும். ஆதித்த கரிகாலர் இங்கு வருவதற்குள் கிளம்பி விடவேண்டும். இங்கிருந்து எப்படிப் புறப்பட்டுச் செல்வது? வாசல் வழி அபாயகரமானது. எதிரே கந்தமாறனும் கரிகாலனும் வந்தாலும் வருவார்கள்!" என்றாள் நந்தினி.

"வேட்டை மண்டபத்துக்குள் ளிருக்கும் சுரங்கப் பாதை வழியாக அழைத்துப் போகிறேன், வாருங்கள்!" என்றான் வந்தியத் தேவன்.

"அக்கா! நானும் வந்து விடுகிறேன். என்னையும் அழைத்துப் போங்கள்!" என்றாள் மணிமேகலை.

நந்தினி அதைக் கவனிக்காமலே, "வேட்டை மண்டபத்துக்குள் போக நான் விரும்பவில்லை. ரவிதாஸனும் அவனுடைய ஆட்களும் நம்மை உயிரோடு விட மாட்டார்கள்......" என்றாள்.

"அம்மணி! தங்கள் கையில் உள்ள வாளை மட்டும் என்னிடம் கொடுங்கள். அவர்கள் நாலு பேரையும் நான் சமாளித்துக் கொள்கிறேன்!" என்றான் வந்தியத் தேவன்.

"வேண்டாம்! அதனால் பல சங்கடங்கள் உண்டாகும். மணிமேகலை! இங்கிருந்து வெளியேறுவதற்கு வேறு வழி ஒன்றும் இல்லையா?" என்று கேட்டாள் நந்தினி தேவி.

மணிமேகலை புருவத்தை நெறித்துக் கொண்டு சிறிது யோசித்தாள். "அக்கா! எனக்கு வேறு வழி இருப்பதாகத் தெரியவில்லை. ஆனால் இவரையே கேளுங்கள். முன்னொரு சமயம் இவர் இந்த அறையிலிருந்து மாயமாக மறைந்து போனார். எப்படிப் போனார் என்று கேளுங்கள்!" என்றாள்.

நந்தினி வந்தியத் தேவன் முகத்தைப் பார்த்தாள்.

வந்தியத் தேவன், "ஆம், அம்மணி! வேறு ஒரு வழி இருக்கிறது. தற்செயலாக அதை நான் கண்டு பிடித்தேன். ஆனால் அதன் வழியாகப் போவது எளிதன்று. மச்சுக்கு மச்சு, மாடத்துக்கு மாடம் தாவிக் குதிக்க வேண்டும். அப்புறம் மதிள் ஏறியும் குதிக்க வேண்டும். தங்களால் முடியுமா என்று சந்தேகிக்கிறேன். அதைக் காட்டிலும் மந்திரவாதியையும் அவனுடைய ஆட்களையும் ஒரு கை பார்த்து விட்டுச் சுரங்கவழி போவது எளிது!" என்று சொன்னான் வந்தியத்தேவன்.

அப்போது மணிமேகலை, "ஐயோ அவர்கள் வருகிறார்கள் போலிருக்கிறதே!" என்று திடுக்கிட்டுக் கூறினாள்.

இருவரும் உற்றுக் கேட்டார்கள்.

ஆம்; அப்போது அரண்மனை முன் கட்டிலிருந்து அந்த அறைக்குள் யாரோ வரும் காலடிச் சத்தம் கேட்டது.

"ஐயா! சீக்கிரம் வேட்டை மண்டபத்துக்குள் போய் விடுங்கள்!" என்றாள் நந்தினி தேவி.

"மறைந்து கொள்ள எனக்கு வேறு ஒரு நல்ல இடம் இருக்கிறது. தேவி! அந்த வாளை இப்படிக் கொடுங்கள்!" என்றான் வந்தியத் தேவன்.

நந்தினி அவனிடம் வாளைக் கொடுப்பதற்காக அதை முன்னால் நீட்டினாள். அப்போது அவளுடைய கைதவறி, வாள் தரையில் விழுந்து, ஜணஜண கணகண வென்னும் ஒலியை எழுப்பியது.

# Kalki *Leads in Circulation*

## Net paid sale exceeds 71,000 Copies per issue

The most eloquent tribute to the popularity of any publication, journal or a newspaper, is the extent of its circulation. The circulation of KALKI is larger than that of any other single edition newspaper publication in India—English or Vernacular, Daily or Weekly. In the fourth estate of the realm, KALKI leads in circulation with 71,366 copies per issue as per latest A.B.C. Certificate.

# Kalki

**For further particulars please write to:**
The Advertisement Manager, KALKI, Kilpauk, MADRAS-10.

# கவர்னரின் மகன் கூலிவேலை செய்கிறான்!

ரா. கி.

எதற்காகத் தெரியுமா? கவர்னரின் மகன் கூலி வேலை செய்து பணம் சம்பாதிப்பது என்னத்திற்காக வென்று தெரியுமா? காலேஜ் படிப்புக்குச் சம்பளம் கொடுப்பதற்காகத் தான்!

அந்த அதிசயம் எங்கே நடக்கிறது? இந்தியாவில் நிச்சயமாக நடைபெறாது என்பது நேயர்களுக்குத் தெரியும். பின்னர், எங்கே நடக்கும்? உலகத்திலேயே செல்வம் மிக்க குபேர நாடாகிய அமெரிக்காவிலே தான்!

அமெரிக்காவிலுள்ள நாற்பத்தெட்டு மாகாணங்களில், காலிபோர்னியா செல்வம் கொழிக்கும் மாகாணம். அங்கே தங்கச் சுரங்கங்கள் உள்ளன; தங்கக் கனிகள் தரும் ஆரஞ்சுத் தோட்டங்கள் உள்ளன; இன்னும் பலவித இயற்கைச் செல்வங்களும் உண்டு. அந்த மாகாணத்தில் உள்ளதுதான் ஸான் பிரான்ஸிஸ்கோ என்னும் புகழ்பெற்ற நகரம்.

காலிபோர்னியாவின் தற்போதைய கவர்னரின் பெயர் எரல் வாரன். அவருடைய மனைவியின் பெயர் நீனா வாரன். இவர்களுக்குப் புதல்வர் புதல்விகள் எட்டுப் பேர். எரல் வாரன் காலிபோர்னியாவின் கவர்னர் பதவிக்கு வந்து பத்து வருஷம் ஆகிறது. இந்தியாவிலே நடப்பது போல் அமெரிக்காவில் மாகாண கவர்னரை மத்திய அரசாங்கம் நியமிப்பதில்லை. ஒவ்வொரு மாகாண கவர்னரும் நாலு வருஷத்துக்கு ஒரு முறை தேர்ந்தெடுக்கப்பட வேண்டும். எரல் வாரன் மூன்றாவது முறையாக அந்தப் பதவிக்கு ஜனங்களால் தேர்ந்தெடுக்கப்பட்டவர்.

"அமெரிக்கன் மெகஸைன்" என்னும் பிரபல அமெரிக்கப் பத்திரிகையின் 1953 ஜூன் இதழில் கவர்னர் வாரனின் குடும்ப வாழ்க்கையைப் பற்றி ஒரு விசேஷ கட்டுரை வெளியாகி யிருக்கிறது. மேற்படி குடும்பத்தைக் "காலிபோர்னியாவின் முதற் குடும்பம்" (First Family) என்று அந்தப் பத்திரிகை குறிப்பிட் டிருக்கிறது. சுகபோக வசதிகள் நிறைந்த பிரம்மாண்டமான அரசாங்க மாளிகையில் இக் குடும்பத்தார் வசிக்கிறார்கள் என்று சொல்லி விட்டு, ஆனால் அங்கே அவர்கள் எத்தகைய எளிய வாழ்க்கை நடத்துகிறார்கள் என்பதை விவரிக்கிறது.

மேற்படி கட்டுரையில் முக்கியமாக என்னுடைய கவனத்தைக் கவர்ந்தது அவர்களுடைய புதல்வர் - புதல்விகளின் கல்வியைப் பற்றிய பகுதியே யாகும். இந்தக் கவர்னர் தம்பதிகளின் மூத்த மகனாகிய ஜிம் வாரன், மூன்றாவது மகனாகிய எரல் வாரன் என்பவர்களைப் பற்றி அக்கட்டுரை சொல்வதைக் கீழே படியுங்கள் :—

"Jim helped pay for his college education at the University of California by ditch-digging at three dollars a day for a contractor. At 18, he put in a full day's work with grown men. At the end of the job, he had become a senior employee as others dropped out when the heat and hard work got them. Last summer Earl Jr. had several plushier jobs offered him, but he signed on as a dollar-an-hour manure-pitching farm hand on a Vacaville, Calif., ranch because he wants to learn farming 'from the ground up.'"

"ஜிம் (வாரன்) காலிபோர்னியா சர்வ கலாசாலையில் படித்துக் கொண்டிருந்த போது, கல்லூரிப் படிப்புக்கான செலவைச் சமாளிப்பதற்காக ஒரு கண்டிராக்டரிடம் தினசரி 3 டாலர் சம்பளத்துக்குப் பள்ளம் தோண்டும் வேலையில் அமர்ந்தான். அவன் தன்னுடைய பதினெட்டாவது வயதில் மற்ற வயதான மனிதர்களைப் போல் நாள் முழுதும், முழு ஆள் வேலை செய்து வந்தான். உஷ்ணத்தினாலும் வேலையின் கடுமை காரணமாகவும் மற்றவர்கள் அவ் வேலையிலிருந்து விலகிக் கொண்டு விட்டார்கள். ஆனால் ஜிம் மாத்திரம் முடிவு வரை உறுதியுடனிருந்து அனுபவம் வாய்ந்த முதல்தரத் தொழிலாளி ஆனான். சென்ற கோடை காலத்தின்போது எரல் வாரன் ஜூனியருக்கு (மூன்றாவது மகனுக்கு)த் தேக உழைப்பில்லாத பல சொகுசான வேலைகள் கொடுக்கப்பட்டன. ஆனால் அவன் அவற்றில் எதையும் ஏற்றுக் கொள்ளாமல், ஒரு மணிக்கு ஒரு டாலர் சம்பளத்தில் காலிபோர்னியாவைச் சேர்ந்த வகாவில் என்ற இடத்தில் உள்ள விவசாயப் பண்ணையில் நிலங்களுக்கு எரு அடிக்கும் வேலையில் அமர்ந்தான். ஏனெனில் விவசாய சம்பந்தமான சகல அலுவல்களையும் கீழே இருந்து கற்றுக் கொள்ள வேண்டும் என்பது அவன் விருப்பம்."

செல்வத்திற் சிறந்த அமெரிக்காவில் ஒரு பெரிய மாகாணத்துக் கவர்னரின் குமாரர்கள் குழி தோண்டும் வேலையும் வயல்களில் எருக்கொண்டு போடும் வேலையும் கூலிக்குச் செய்கிறார்கள். எதற்காக? தங்கள் காலேஜ் படிப்பின் செலவுக்குத் தாங்களே சம்பாதித்துக் கொள்வதற்காகத்தான்.

நமது இந்தியா தேசத்தில் கவர்னரின் மகன், கலெக்டரின் மகன், ஹைகோர்ட் ஜட்ஜின் மகன் இவர்களைப் பற்றிப் பேசவே வேண்டாம்; — ஒரு என். ஜீ. ஓ. குமாஸ்தாவின் மகன் இவ்விதம் தன் காலேஜ் படிப்புச் செலவுக்காகக் கூலிவேலை செய்வானா என்று யோசித்துப் பாருங்கள். அப்படி



ஜீன் - ஜாக்குலின் தம்பதிகள் விறகுவெட்டும் தொழிலில் ஈடுபட்டிருக்கும் போது அவர்களுடைய மூன்று வயதுக் குழந்தை பின் வேலையைக் கூர்ந்து கவனிக்கிறான். *Courtesy :* Ladies' Home Journal

யாராவது செய்கிறவன் இருந்தால், அந்த அதிசயமான பிள்ளையின் வரலாற்றையும் புகைப் படத்தையும் தயவு செய்து அனுப்பி வையுங்கள்! "அதிசயம்; ஆனால் உண்மை!" என்ற தலைப்பில் அந்தக் காலேஜ் மாணவனின் படத்தை வெளியிட்டு அவனைச் சிறப்பிக்கத் தயாரா யிருக்கிறோம்.

ஆனால் அமெரிக்காவில் இது பிரமாதமான அதிசயம் என்று கருதப்படுவதில்லை. ஒரு மாகாண கவர்னரின் புதல்வர்கள் கூலி வேலை செய்கிறார்கள் என்பது ஓரளவு அதிசயிக்கத் தக்கதாக எழுதி யிருக்கிறது. மற்றப்படி, அமெரிக்காவில் காலேஜில் படிக்கும் மாணாக்கர்களில் 100 க்கு 50 பேருக்கு மேல், படிக்கும்போதே வேலைசெய்து கல்விச் செலவுக்கு வேண்டிய பணம் தேடிக் கொள்கிறார்கள். இது எவ்வளவு சர்வ சாதாரணம் என்பதை நிரூபிக்க இன்னும் ஓர் உதாரணம். இது "ரீடர்ஸ் டைஜஸ்ட்" 1953 ஜூன் இதழில் வெளியாகியுள்ள "Sixteen sticks in a Bundle" என்னும் கட்டுரையில் காணப்படுகிறது. ஜான் எங், லீ எங் என்னும் தம்பதிகளுக்குப் பதினாறு குழந்தைகள். இந்தத் தம்பதிகள் எப்படிக் குடும்ப வாழ்க்கை நடத்துகிறார்கள், பதினாறு குழந்தைகளையும் எப்படிச் சம்ரட்சித்துக் கல்வி அளிக்கிறார்கள் என்பது பற்றி அக்கட்டுரை கூறுகிறது. இதைக் கேளுங்கள்:—

"Soon came secondary school and the matter of school bus fares. At *25* cents per pupil and with five going, it meant raising *1.25* dollars (about eight shillings) every week. Poppa talked it out with sons Otis and Eearlie. He had just *58* dollars to his name, but that was enough for a down payment on a second-hand truck. Were they willing to tackle a tough job? They were.

So he bought the truck and every morning before daybreak the two boys cut a load of oak to sell, hauled it *24* miles to market before school, and returned after school to cut and haul firewood......"

"அவர்களுடைய குழந்தைகள் ஆரம்பக் கல்வியை முடித்து மேலே ஸெகண்டரி பள்ளிக்கூடம் போக வேண்டிய காலம் வந்தது. அக்குழந்தைகள் மேற்படி கல்விச் செலவையும் போகவர ஆகும் பஸ் செலவையும் சமாளிப்பது எப்படி என்று கேள்வி எழுந்தது. ஒரு குழந்தைக்கு வாரத்துக்கு 25 சென்ட் வீதம் பஸ் கட்டணத்துக்குக் கொடுக்க வேண்டும். எனவே அக் குடும்பத்தைச் சேர்ந்த ஐந்து குழந்தைகளுக்குமாக ஒவ்வொரு வாரமும் 1 டாலர் 25சென்ட் (8 ஷில்லிங்) வேண்டும். அவர்களுடைய தகப்பனார் அவ் விஷயமாக ஓடிஸ், எர்லி என்ற தம்முடைய இரு புதல்வர்களுடன் கலந்து ஆலோசித்தார். அப்போது அவருடைய பாங்கிக் கணக்கில் இருந்த பணம் எல்லாம் 58 டாலர் தான். ஆனால் அத்தொகையைக் கொண்டு பழைய மோட்டார் டிரக் ஒன்று வாங்கலாம். டிரக் வாங்கினால் அதைக் கொண்டு கடுமையாக உழைக்க வேண்டும். அவ்விதம் உழைப்பதற்கு அச் சிறுவர்கள் தயாரா என்று கேட்டார். "தயார்" என்றார்கள் சிறுவர்கள்.

எனவே, அவர்களுடைய தந்தை டிரக் வாங்கினார். ஒவ்வொரு நாளும் பொழுது புலர்வதற்கு முன் மேற்படி சிறுவர்கள் விறகு வெட்டி டிரக்கில் ஏற்றிச் சென்று 24 மைல் தூரத்திலுள்ள மார்க்கெட்டிக் கொண்டுபோய் விற்று வருவார்கள். பள்ளிக்கூடத்திலிருந்து திரும்பி வந்ததும் மறுபடியும் விறகு வெட்டிச் சேர்த்து வைப்பார்கள்...."

கேட்டீர்களா? அமெரிக்கா தேசத்தில் மேற்கண்டவாறு பிள்ளைகள் விறகு வெட்டிக் கொண்டு போய் விற்பனை செய்து விட்டு வந்து தங்களுடைய பள்ளிக்கூடச் செலவுக்கும் தங்கள், தம்பி - தங்கைகளின் பள்ளிக்கூடச் செலவுக்கும் உதவுகிறார்கள்.

இந்தியாவிலோ ஒரு நடுத்தர வகுப்புக் குடும்பத்தைச் சேர்ந்த பையன் காலேஜ் படிப்புக்கும் ஹாஸ்டல் வாழ்வுக்குமாக

மாதம் நூறு ரூபாய் வரையில் செலவு செய்கிறான்! அவன் காலேஜ் படிப்பு முடிவதற்குள் அவன் குடும்பமே 'இன்ஸால்வெண்ட்' ஆகி விடுகிறது. இவ்வளவுக்குப் பிறகு அவனுக்கு அதிர்ஷ்டம் இருந்து உத்தியோகம் கிடைத்தால், சம்பளம் மாதம் ரூபாய் எண்பது! கிராக்கிப்படி ரூபாய் பதினெட்டு!

* * *

அமெரிக்காவின் மற்றொரு பிரசித்தமான மாதப் பத்திரிகை—நாற்பது லட்சம் பிரதிகள் விற்பனையாகும் பத்திரிகை—"லேடீஸ் ஹோம் ஜர்னல்" என்பது. இந்தப் பத்திரிகையின் ஜூன் மாத இதழில் இன்னொரு அமெரிக்கக் குடும்பம் வாழ்க்கை நடத்தும் விதம் பற்றிய விவரம் வெளியாகி யிருக்கிறது. "With Love - and Lumber" என்பது கட்டுரையின் தலைப்பு. ஜீன் பீகன் வால்டு, ஜாக்குலின் பீகன் வால்டு என்னும் இளம் தம்பதிகளுக்குக் குடியிருப்பதற்கு வீடு கிடைக்கவில்லை. வாடகைக்கு வீடு தேடித் தேடி அலுத்துப் போய்ச் சொந்தமாகவே வீடு கட்டிக்கொள்ளத் தீர்மானித்தார்கள். கூலிவேலைக்கு ஒரு ஆளைக்கூடத் தேடாமல் புருஷன்-மனைவி இருவருமே வேலைசெய்து முதலில் ஒரு வீடு கட்டினார்கள். அதை லாபத்துக்கு விற்றுவிட்டு, இன்னொரு வீடு கட்டினார்கள். அதையும் லாபத்துக்கு விற்று விட்டு, இப்போது தாங்கள் வசிப்பதற்கென்று இன்னும் கொஞ்சம் பெரிய வீடாகக் கட்டுகிறார்கள். வீடுகட்ட ஆரம்பித்த பிறகு இவர்களுக்கு இரண்டு குழந்தைகள் பிறந்திருக்கிறார்கள். ஜாக்குலின் இப்போது மறுபடியும் கர்ப்பமாகி யிருக்கிறாள். ஆனாலும் வேலை செய்வதை நிறுத்தவில்லை. மூன்று வயதுக் குழந்தை பில், ஒன்றரை வயதுக் குழந்தை ரண்டி இவர்கள் தங்கள் பெற்றோர் செய்யும் வேலையைச் சில சமயம் பார்த்துக் கொண் டிருக்கிறார்கள்; சில சமயம் உதவி செய்கிறார்கள்; சில சமயம் விஷமமும் செய்கிறார்கள். ஆனால் குழந்தைகளை இடைஞ்சலாகக் கருதவில்லை.

இந்தத் தம்பதிகள் எழுதப் படிக்கத் தெரியாதவர்கள் அல்ல. இவர்களுடைய மாதாந்திர குடும்ப பட்ஜெட் கணக்குத் தரப்பட்டிருக்கிறது. அதில் மாதந்தோறும் 'என்ஸைக்ளோபீடியா'வுக்கு 11 டாலரும், பத்திரிகைகள் – சஞ்சிகைகளுக்கு 15 டாலரும் செலவு செய்வதாகக் குறிப்பிட்டிருக்கிறது!



*கணவர் :— என்னடா, ரொம்ப விரட்டறே! இந்த வீட்டுக்கு எஜமான் நீயா? இல்லை விட்டால் உன் அம்மாவா?*

நம் நாட்டில் படித்த நடுத்தரக் குடும்பத்தைச் சேர்ந்த இளந் தம்பதிகள் இம்மாதிரி கூலிக் காரர்களின் உதவியில்லாமல் தாங்களே ஒரு வீடு கட்டி முடிக்கக் கூடும் என்று நாம் கனவிலேனும் எண்ண முடியுமா!

இந்தியா தேசத்தை நூற்றைம்பது வருஷம் அரசாண்ட பிரிட்டிஷ் அதிகார வர்க்கத்தார் குமாஸ்தா வேலைக்கு மட்டும் தயார் செய்யக் கூடிய ஒரு கல்வி முறையை ஏற்படுத்தி இந் நாட்டின் படித்த வகுப்பாரை – சமுதாயத்தின் முதுகெலும்புக்கு ஒப்பான மத்திய வகுப்பாரை – குமாஸ்தா வேலைக்குத் தவிர வேறெதற்கும் கையினாலாகாத வர்க்கமாகச் செய்து விட்டார்கள்.

அந்தக் குடிகெடுக்கும் கல்வி முறையை, சமூக நாசம் உண்டாக்கும் கல்வி முறையை, அடிப் படையிலிருந்து மாற்றி யமைப்பதற்குத் தீர்க்க தரிசனம் வாய்ந்த மகான் ஒருவர் புதிய ஆரம்பக் கல்வித் திட்டம் ஒன்றை வகுத்துக் கொடுத் திருக்கிறார்.

அரசியல் காரணங்களுக்காகவும் வேறு பல சுயலக்காரணங்களுக்காகவும் அந்தத் திட்டத்தை எதிர்ப்பவர்கள் பலர் இருப்பதில் ஆச்சரியம் ஒன்றுமில்லை. அது எதிர்பார்க்கக் கூடியதுதான்.

ஆனால் நமது கல்வி முறையில் உள்ள கேடுகளை நன்றாய் அறிந்திருக்க வேண்டியவர்கள்,—அமெரிக்கா முதலிய நாடுகளைப் பற்றி அங்கிருந்து வரும் நூல்கள் - சஞ்சிகைகளில் படித்துக் கொண்டிருப் பவர்கள்,— புதிய திட்டத்தை எதிர்ப்பதைப் பற்றித்தான் நாம் வியப்பும் கவலையும் அடைய வேண்டியிருக்கிறது. "அடாடா! பிரிட்டிஷ் கல்வி முறை இவ்வளவு பெரிய 'கற்றறி மூடச்' சமூகத்தையா இந்தியாவில் படைத்துவிட்டது!" என்று அங்கலாய்க்க வேண்டி யிருக்கிறது.

## யோகாசன சிகிச்சை

*யோகாசன நிபுணர் ஸ்ரீ வி. என். குமாரசாமி அவர்கள் எழுதும் "யோகாசன சிகிச்சை" என்னும் தொடர் கட்டுரைகள் விரைவில் ஆரம்ப மாகும்.*



# இளவரசி பிரபா

சீதா

## 6. கனவு

வானத்தில் பூரண சந்திரன் எழும்பி, பால் நிலவைப் பொழிந்து கொண்டிருந்தான். ஆனால் அந்தக் காட்டில் அடர்த்தியாக வளர்ந்திருந்த மரங்களும், அம் மரங்களின் கிளைகளும் இலைகளும் அந்த நிலவைத் தரையில் விழ வொட்டாமல் தம்மாலியன்ற மட்டும் தடுத்துப் பார்த்தன. ஆனால் நிலவின் கிரணங்கள், இலைகளின் இடையில் எல்லாம் புகுந்து காடு முழுதும் சின்னஞ்சிறு நிலா வட்டங்களைச் செய்திருந்தன. அதை யாராகிலும் அசப்பில் பார்த்தால் தங்க நாணயங்கள்தான் பூமி முழுதும் சிதறிக் கிடக்கின்றனவோ என்ற எண்ணம்தான் அவர்கள் மனத்தில் எழும்.

அந்த வேளை நந்தகுமாரனிட மிருந்து விடை பெற்று வந்து கொண்டிருந்த பிரபா இதையெல்லாம் நினைக்க வில்லை. அவள் நிலவைப் பார்க்கவில்லை; நிலா வட்டங்களையும் பார்க்க வில்லை. மந்திரவாதிக் கிழவன் தன்னைப் பார்த்தவுடன் என்ன சொல்வானோ, என்ன செய்வானோ என்ற நினைவுதான் அவள் உள்ளத்தில் அலை பாய்ந்து கொண்டிருந்தது. உள்ளத்தில் பயமிருக்கிற போது வேறு எந்த நல்ல உணர்ச்சிதான் உண்டாகும்! பயத்தைப் போல் மனிதனின் முன்னேற்றத்தைத் தடுப்பது வேறு ஒன்றில்லை.

பிரபா வீட்டுக்குச் சென்றதும் மந்திரவாதிக் கிழவன் வாசலிலேயே நின்று கொண்டிருப்பதைப் பார்த்தாள். அவள் நெஞ்சம் இன்னும் வேகமாகத் 'திக்' 'திக்' என்று அடித்துக் கொண்டது. அவள் தன் காலை வீட்டு வாயிற்படியில் எடுத்து வைக்கக் கூடத் துணிய வில்லை.

அந்தச் சமயம், "பிரபா, எங்கே போய் விட்டாய்? வழி தவறி எங்கேயாகிலும் போய் விட்டாயா என்ன? ஏன் இத்தனை நேரம்?" என்று அன்பு கனியக் கேட்டான் மந்திரவாதி.

"தாத்தா, இது என்ன கேள்வி? ஏன் ஒன்றும் தெரியாதவர் போல் பாசாங்கு செய்கிறீர்கள்? நான் எங்கே போகிறேன் என்று தெரிந்து தானே பெரிய பள்ளம் உண்டாக்கி என்னை மேற்கொண்டு போக விடாமற் தடுத்தீர்கள்? என்னை என்ன ஒன்றும் தெரியாத ஜடம் என்று கருதினீர்களா? எத்தனை நாள் இப்படி என்னைச் சிறைப் படுத்தி வைக்கப் போகிறீர்கள்? அரண்மனையிலிருந்து அழைத்து வந்து என் ஆயுட்காலம் முழுதும் இங்கேயே அடைந்து கிடக்கச் செய்ய வேண்டும் என்பதே தங்கள் எண்ணமா? ஏன், என்னை இப்படி வதைக்கிறீர்கள்? இதற்குப் பதிலாக என்னை ஒரே அடியாய்க் கொன்று தீர்த்து விடுவதுதானே?" என்று கோபமாக மொழிந்தாள். ஆம், இத்தனை நேரம் பயத்தில் நடுங்கிக் கொண்டிருந்த பிரபா, எப்படியோ கடுங் கோபம் கொண்டவளாக மாறிப் பெண் சிங்கத்தைப்போல் சீறினாள்.

"பிரபா, கோபித்துக் கொள்ளாதே, அம்மா! உனக்கு ஒரு நல்ல ராஜகுமாரனைப் பார்த்துக் கல்யாணம் செய்து வைக்கிறேன். அவசரப் படாதே!" என்று கூறினான். அப்போது அந்த மந்திரவாதியின் குரலில் கனிவிருந்தது.

"ஏன் தாத்தா கேலி பண்ணுகிறீர்கள்? இந்தக் காட்டிலிருக்கிற அநாதைப் பெண்ணுக்கு ராஜகுமாரன் கணவனாக வாய்க்கப் போகிறானாக்கும்!" என்று பிரபாவும் கேலியாகச் சொன்னாள்.

"நீ பார்த்துக் கொண்டே யிரேன். ஆனால் இப்போது நேரமாகி விட்டது போய்ப் படுத்துத் தூங்கு பிரபா!" என்றான் மந்திரவாதிக் கிழவன்.

பிரபா தன் படுக்கையில் போய்ப் படுத்துக் கொண்டாள். கொஞ்ச நேரம் வரைக்கும் அவளுக்குத் தூக்கம் வரவில்லை. என்ன வெல்லாமோ எண்ணங்கள் அவள் மனத்தில் அலை பாய்ந்து கொண்டிருந்தன. நந்த குமாரனைப் பற்றியே ரொம்ப நேரம் யோசித்துக் கொண்டிருந்தாள். அவன் எங்கே போனானோ? என்ன செய்கிறானோ?



தன்னை விட்டுப் பிரிந்ததில் அவன் எவ்வளவு வருத்தமும் ஏமாற்றமும் அடைந்தானோ, பாவம்! அவனுக்கு ஆறுதல் யார் சொல்லக் கூடும்? இப்படியெல்லாம் எண்ணினாள். கடைசியில் அவளுக்குச் சொல்லாமல் நித்ரா தேவி வந்து அவளை ஆட்கொண்டு விட்டாள்! அது மட்டுமல்ல. அவளை வேறொரு உலகத்துக்கே அழைத்துச் சென்று விட்டாள். அதுதான் கனவு உலகம்.

கனவு உலகத்தில் சஞ்சரித்தபோது, பிரபாவுக்குத் தான் ஒரு முன் பின் பார்க்காத உலகத்துக்குச் சென்றாற் போலவே தோன்றவில்லை. அதற்கு மாறாகத் தனக்கு நன்கு அறிமுகமான ஓர் இடத்துக்கு வந்தாற்போலவே அவளுக்குத் தோன்றியது. அதுவும் அந்தத் தாமரை தடாகத்தைப் பார்த்தபோது, 'அடாடா, நம்ம அரண்மனைத் தடாகம் அல்லவா?' என்று எண்ணினாள். அந்த மலர்ந்த தாமரைகளைப் பார்த்தபோது, அந்த மலர்கள் அக மலர்ந்து தன்னை வரவேற்பது போல் தோன்றியது. ரோஜா மலர்கள் புன்னகை பூத்து வரவேற்பதுபோல் அவளுக்குத் தோன்றியது. மல்லிகை மொட்டு வெண் பற்களைத் தெரியச் சிரித்துநல்வரவு கூறினாற்போல் அவளுக்குத் தோன்றியது. இதையெல்லாம் பார்த்துக் கொண்டே மேலே மேலே நடந்தாள். அங்கொரு மாபெரும் கட்டடம் தெரிந்தது. "அடாடா! இது நம்ம அரண்மனை அல்லவா?" என்று நினைத்து மிகவும் பழக்கமானவள் போல் உள்ளே சென்றாள். நீள நீளமான தாழ்வாரங்களையும் கூடங்களையும் கடந்து, மச்சுப் படிகள் ஏறிக் கிழக்கே திரும்பினாள். கொஞ்ச தூரம் சென்ற பிறகு சற்று மேற்கே திரும்பி நடந்து, பின்னர் வலப்புறம் திரும்பிச் சென்று ஒரு அறைக்குள் மெள்ள அடி எடுத்து வைத்தாள். யாரோ வரும் காலடிச் சத்தத்தைக் கேட்டு, பிராயம் முதிர்ந்த ஒரு அம்மையார், "என்ன பிரபா, இத்தனை நாழிகையாக எங்கே போய் விட்டாய்? கல்யாண முகூர்த்தம் நெருங்கிக் கொண்டிருக்கிறது. இச் சமயம் பார்த்து எங்கேயோ போய் விட்டாயே!" என்று கூறிக் கொண்டே அவளைக் கட்டி அணைத்தாள். முத்தமிட்டாள். திருஷ்டி கழித்தாள்.

பின்னர் சேடியர் சிலர் தலைவாரிப் பின்னினர்; தாதியர் சிலர் ஆபரணங்கள் எடுத்து அணிவித்தனர்; தோழியர் சிலர் கண்ணுக்கு மையும், நெற்றிக்குத் திலகமும் இட்டனர். இப்படியெல்லாம் அலங்கரித்து அவளை மணவறைக்கு மேள தாள வாத்திய முழக்கங்களிடையே அழைத்துச் சென்றனர். பிரபா தலை குனிந்த வண்ணம் சென்றாள். மணவறையை அடைந்ததும் பிரபா சற்றுத் தலை நிமிர்ந்து, தன்னை மாலையிடப்போகும் மணாளன் யார் என்று பார்த்தாள். அவளுக்கு ஏற்பட்ட வியப்பு கொஞ்ச நஞ்சமல்ல — "நந்தகுமாரா!" என்று கூக்குரலிட்டு விடுகிறாள். பலமாகவே கூச்சலிட்டு விடுகிறாள். அவள் தூக்கம் கலைந்து போகிறது. படுக்கையில் எழுந்து உட்கார்ந்தாள். அவ்வளவும் கனவு என்று அறிந்து உளம் சோர்ந்தாள்.

பிரபா போட்ட சத்தத்தில் நித்திரை கலைந்து "என்ன பிரபா! ஏன் ஏதாகிலும் கெட்ட சொப்பனம் கண்டாயா?" என்று கேட்டான் மந்திரவாதி.

"இல்லை, நல்ல சொப்பனம்தான்!" என்றாள் பிரபா.

அந்தச் சமயத்தில் யாரோ கதவு தட்டும் சத்தம் கேட்டது. "பிரபா, நீ படுத்துக் கொள்! இந்த விடியற்காலை வேளை யாரோ என்னைக் கூப்பிடுகிறார்கள். நீ அவர்கள் கண்ணில் படாதே. நன்றாகப் போர்த்திக் கொண்டு படுத்துக் கொள்!" என்று கூறிவிட்டு வாசற்புறம் சென்றான் மந்திரவாதி.

பிரபாவின் அறையில் ஒரு ஜன்னல் உண்டு. அந்த ஜன்னலிலிருந்து எட்டிப் பார்த்தால் வெளியில் நடப்பது எல்லாம் நன்றாகத் தெரியும். ஆகவே, மந்திரவாதி சொன்னதைக் கேட்காமல் நேரே ஜன்னலின் அருகில் வந்து நின்று வெளியில் எட்டிப் பார்த்தாள். யாரோ ஏழெட்டுப் பேர் வந்திருந்தனர். அவர்கள் ஏதோ சொல்லிக் கொண்டிருந்தார்கள் மந்திரவாதியினிடம். ஆனால் அவர்கள் கூறியது என்னவென்பது பிரபாவின் காதுகளில் சரியாக விழவில்லை. அதனால் அவர்கள் என்ன பேசுகிறார்கள் என்று கேட்பதில் கவனம் செலுத்துவதை விட்டு விட்டு வந்திருப்பவர்களைக் கவனிக்கலானாள். அவர்களில் ஒருவன் தன்னையே கூர்ந்து பார்ப்பதைப் பிரபா கவனித்தாள். (தொடரும்)

பல் கூச்சத்தினால் கூசும் பல்லால் அவதியுறுகிறீர்களா?



காலஹரணம்செய்யாதீர்கள் ... இன்றே நீங்கள் பல் வைத்தியரைக் காணுங்கள்; வீடு திரும்புகையில் ஒரு ட்யூப் 'பினாகாவும்' வாங்குங்கள்.

சாஸ்திரிய முறையில் தயாரிக்கப்பட்ட "பினாகா" பற்பசை, பற்சிதைவு, பலமற்ற ஈறுகள், வாய் நாற்றம் (பயோரியா) இவற்றிற்குக் காரணமாயுள்ள அபாயகரமான கிருமிகளை எதிர்த்து அறவே ஒழிக்கிறதென்பது பல தடவைகளில் செய்யப்பட்ட வைத்தியப்பரீக்ஷையினால் நன்கு நிரூபிக்கப்பட்டுள்ளது.

## பினாகா (ரோஸ்)

சக்தி வாய்ந்த "ஸல்போரிஸினோலியட்" என்னும் பொருள் கொண்டது.

## பினாகா க்ரீன்

இயற்கையின் ஆச்சரியதுர்க்கந்த நாசினியான சுத்தி செய்த க்ளோரோபில்லும் கொண்டது.




ரேடியோ சிலோனில் பிரதி திங்கட்கிழமை மாலை 8 மணிக்கு பினாகா ஹிட் பரேட்டையும் பிரதி ஞாயிறு மாலை 8 மணிக்கு பினாகா தேமாலையையும்கேளுங்கள்.



"ஸீபா" வின் விசேஷ குணம் பொருந்திய ஒரு பற்பசை.

CBK 11073 TAMIL




எஸ். வி. எஸ்.

திருவாளர் திருஞானம் பிள்ளை, தபால்–தந்தி இலாக்காவில் மிகவும் உயர்ந்த பதவியிலிருந்து ஓய்வு பெற்றவர். அவர் உயர்ந்த பதவி வகித்ததாலேயே, நம் நாட்டில் பல மாகாணங்களில் எல்லாம் சிற்சில ஆண்டுகளிருந்து வேலை செய்யும் வாய்ப்பும் அவருக்குக் கிடைத்தது. வெவ்வேறு மாகாணத்தவரிடையே பழகும் சந்தர்ப்பமும், அவர்களுடைய தனிப்பட்ட குண விசேஷங்களை அறியவும் முடிந்தது. அதனால் இந்த ஓய்வு பெற்ற காலத்தில் அவருடன் பேச்சுக் கொடுத்தால், அதை ஒட்டினாற் போல் தாம் பீஹார் மாகாணத்திலோ, பஞ்சாப் மாகாணத்திலோ இருந்த போது நடந்த சம்பவம் ஏதாகிலும் ஒன்றைச் சொல்லுவார். பேச்சு மிக ரஸமாக இருக்கும்!

இதைச் சுவாரஸ்யமாகக் கருதாதவர்களும் உண்டு. அவர்கள், திருஞானம் பிள்ளை என்றால் காததூரம் ஓடி விடுவார்கள். "அவர் ஒரு பெரிய 'போர்' அல்லவா!" என்று கூறி விலகப் பார்ப்பார்கள்.

ஒருநாள் மாலை நான் திருஞானம் பிள்ளை அவர்கள் வீட்டுக்குப் போயிருந்தேன். நான் போயிருந்தபொழுது. அவர் வீட்டிலில்லை. ஆனால் அவருடைய வேலைக்காரன், "ஐயா நீங்கள் வந்தால் இருக்கச் சொன்னாங்க! 'கொஞ்ச நேரத்தில் வந்துடறேன்' என்று சொல்லிவிட்டுப் போனாங்க" என்றான்.

"சரி" என்று கூறி அந்த வீட்டு ஹாலில் போடப்பட்டிருந்த பிரம்பு நாற்காலியில் அமர்ந்தேன். அதன் எதிரில் பல பத்திரிகைகள் கிடந்தன. சில தமிழ் நாட்டுப் பத்திரிகைகள், வேறு சில வட நாட்டுப் பத்திரிகைகள்! இவைகளையெல்லாம் ஒன்றன் பின் ஒன்றாகப் புரட்டிக் கொண்டிருந்தேன். அந்த வேளையில் ஒரு பத்திரிகையில் வந்துள்ள விஷயத்தையும் படிக்க மனம் இடம் தரவில்லை. போட்டோ படங்கள், சித்திரங்கள் இவற்றைத்தான் பார்த்துக் கொண்டிருந்தேன். சற்று நேரத்தில் அலுத்துப் போய் ஏதோ பலத்த யோசனையில் ஆழ்ந்து விட்டேன். அப்போது ஸ்ரீமான் திருஞானம் பிள்ளை வீட்டுக்குள் நுழைந்தார்.

"என்ன மிஸ்டர், பலமான யோசனை நடக்கிறாப் போலிருக்கிறதே — எந்த நவாப்பின் கோட்டையைப் பிடிக்க இவ்வளவு யோசனை?" என்று சிரித்துக் கொண்டே கேட்டார் திருஞானம்.

"கோட்டையைப் பிடிக்க ஆலோசிக்கவில்லை; கொத்தளத்தைப் பிடிக்கும் உத்தேசமும் இல்லை. இதோ, இந்தப் பத்திரிகையில் வெளியாகியிருக்கும் வர்ணச் சித்திரத்தைப் பார்த்தேன். எனக்கு ஒன்றும் புரியவில்லை. மனுஷ உருவமாகவும் இல்லை, மிருக உருவமாகவுமில்லை. ஏதோ கோழி தரையில் கீறுவது போல் ஏகப்பட்ட கோடுகள் இருக்கின்றன. ஆனால் அது ஓர் அற்புதமான சித்திரம் என்றும், இதைத் தீட்டியவர் பிரெஞ்சு தேசத்துப் பிரபல சித்திரக்காரர் என்றும் எழுதியிருக்கிறது. இதில் என்ன அற்புதம் இருக்கிறது என்பது ஒன்றும் புரியவில்லை. அதைப் பற்றித்தான் யோசித்துக் கொண்டிருக்கிறேன்" என்றேன்.

"ஒன்றும் புரியாமலிருப்பதுதான், அற்புதம்" என்று சிரித்துக் கொண்டே கூறிவிட்டு உள்ளே போனார் திருஞானம்.

தமது சட்டை, அங்க வஸ்திரம் எல்லாம் கழற்றி வைத்து விட்டு, ஒரு வெள்ளைத் துண்டைப் போர்த்திக் கொண்டு ஹாலுக்கு வந்து என் நாற்காலியின் எதிரிலிருந்த நாற்காலியில் அமர்ந்தார். அப்படி உட்காரும் போதே, "நான் கல்கத்தாவிலிருந்த போது, வங்காளத்தில் ஒரு சைத்ரிகர்..." என்று கூறினார்.

"வங்காளத்தில் ஒரு சைத்ரிகர் என்ன? எத்தனையோ சைத்ரிகர்கள் உண்டே."

"இல்லை...இல்லை... நான் சொல்லுகிற சைத்ரிகர் ஏறத்தாழ இந்த மாதிரிதான்! அவருடைய சித்திரங்கள் எனக்கு ஒன்றும் புரிவதில்லை! அந்தச் சித்திரக்காரர் பெயரைச் சொன்னால், உங்களுக்குக் கூட அவர் சித்திரங்களைப் பார்த்த நினைவு வரலாம்!" என்று சற்று நேரம் நெற்றிப் பட்டையைத் தேய்த்து அவர் பெயரை நினைவு படுத்திக் கொள்ள முயன்றார். கடைசியில், "என். கே. எல். ராய் ஆம், அதேதான்– இந்தப் பெயரைக் கேள்விப் பட்டிருப்பீர்களே!" என்றார் பிள்ளை.

"இல்லை, எனக்கு இந்தப் பெயரைக் கேட்டதாக ஞாபகமில்லை" என்றேன்.

"ஆனால் ராயை நான் பார்த்த சம்பவம் ரொம்ப சுவாரஸ்யமாக இருக்கும்" என்று கூறினார், சிரித்துக் கொண்டே. அந்தச் சம்பவத்தின் நினைவே அவருக்கு அவ்வளவு சிரிப்பூட்டியது என்றால் நிஜமாகவே அது மிக சுவாரஸ்யமான சம்பவமாகத்தானே இருக்க வேண்டும் என்று நினைத்துக் கொண்டேன்.

* * *

திருஞானம் பிள்ளை வேலை பார்த்து வந்த இலாக்காவில் அவருடைய மேல் அதிகாரி, ஒரு வங்காளிக்காரர். அவர் பெயர் ரகுவீர் முகர்ஜி என்பது. எல்லோரும் அவரை "முகர்ஜி" "முகர்ஜி" என்று தான் அழைப்பார்கள். முகர்ஜிக்குக் காரியாலய வேலைகளை விட இலக்கியம், கவி, சங்கீதம், நாட்டியம், சித்திரம் முதலிய லளித கலைகளில் ரொம்ப ஈடுபாடு. ஈடுபாடு சுவானுபவத்துடன் நின்றால் பரவாயில்லை. "யான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்" என்ற பரந்த மனப் பான்மை வேறு. அதனால் யாராயினும் ஒரு குமாஸ்தா ஒரு பைலைத் தூக்கிக் கொண்டு, அல்லது ஆபீஸ் கடிதங்களை 'டைப்' அடித்துக் கொண்டு மேல் அதிகாரி முகர்ஜியின் கையெழுத்துக்காக வந்தானானால் அவ்வளவுதான், அந்த ஆசாமி தொலைந்தான்! ஆம், கட்டாயம் முக்கால் மணி நேரம் வால்மீகி ராமாயண விமர்சனம், அல்லது காளிதாஸனுடைய மேக தூதத்தைப் பற்றிய முகர்ஜியின் மேலான விமரிசனம், அல்லது மில்டனுடைய 'இழந்த சுவர்க்க' த்தைப் பற்றிய புலமை சான்ற ஆராய்ச்சி- இப்படி எதையாகிலும் ஒன்றைக் கேட்டு ஆக வேண்டும். பொறுமையுடன் கேட்டு ஆக வேண்டும். அவர் கூறும் மேலான கருத்துகளுக்கெல்லாம் உடன் பாடு தெரிவித்தே ஆக வேண்டும். சற்று மாறு பட்ட அபிப்பிராயத்தைத் தெரிவித்தால், ஒன்றும் விபரீதம் நேர்ந்து விடாது. இன்னும் ஒரு முக்கால் மணி நேரம் கால் கடுக்க நின்று தவஞ் செய்ய வேண்டியிருக்கும். இதற்குப் பயந்து முகர்ஜி கூறுவது எல்லாம் வெறும் உளறல் என்று தோன்றினாலும் வெளியில் ஒரு வார்த்தை சொல்லாமல் கேட்டுக் கொண்டிருப்பார்கள். இந்தப் பிரசங்கத்தைக் கேட்டு விட்டு முகர்ஜியின் அறையிலிருந்து வெளியே வரும் குமாஸ்தாவை, மற்றக் குமாஸ்தாக்கள் "இன்றைக்கு என்னப்பா ராமாயணப் பிரவசனமா?" என்று குசலம் கேட்பார்கள். "இல்லை; இல்லை! ஓமர் கய்யாம் பாடல்கள் இன்று நடந்தது!" என்பார்.

இந்த வேடிக்கைகளையெல்லாம் பார்த்துக் கொண்டு ஸ்ரீமான் திருஞானம் பிள்ளை வாய்மூடி மௌனியாக இருப்பார். அவருக்கு முகர்ஜியிடம் ஓரளவு அனுதாபம் உண்டு. இலக்கியம், கலை இவற்றில் வெறி பிடித்து அலைபவர்கள் மிக மிகச் சொற்பப் பேர் அல்லவா? அந்தச் சொற்பப் பேர்களில் ஒருவராக முகர்ஜி விளங்குகிறாரே என்று ஓர் அனுதாபம். முகர்ஜியும் மற்றப் பேர்களைக் கண்டால் சள சளவென்று பேசத் தொடங்கி விடுவார்; தமது அரிய பெரிய உயரிய, அகண்டாகாரமான கருத்துக்களை அடித்து விடுவார். ஆனால் திருஞானம் பிள்ளையைக் கண்டால் மட்டும், வாய் மூடிக் கொண்டு காதைத் திறந்து வைத்துக் கொண்டிருப்பார். ஏனெனில் முகர்ஜி குறுகிய மாகாணவாதியல்ல. அவருக்கு நன்முகத் தெரியும் தமிழகம் கலை மடந்தை உறையும் கலையகம் என்பது. ஆகா, தமிழ் நாட்டிலுள்ள கோபுரங்கள் போதுமே, தமிழர்கள் கலை யுணர்ச்சி மிக்கவர்கள் என்பதை நிரூபிக்க என்று கூறுவார். திருஞானமும் தமிழ் நாட்டுச் சிற்பங்கள், நால்வரின் பாடல்கள், கம்பனின் கவிதைச் சுவையெல்லாம் ஓய்வு நேர்ந்த போதெல்லாம் எடுத்துக் கூறுவார். இப்படி இவர்களுக்குள் ஒரு நெருங்கிய தொடர்பு ஏற்பட்டிருந்தது.

இந்தச் சமயத்தில்தான் என். கே. எல். ராயின் சித்திரங்கள் வங்க நாட்டுப் பத்திரிகைகளில் வெளி வரலாயின. முகர்ஜி அந்தச் சித்திரங்களைக் கண்டு தலைகுப்புற விழலானார். வந்தவர் போனவர் யாவரிடமும் புகழலானார். திருஞானத்திடமும் கூறலானார். திருஞானம் அந்தச் சித்திரங்களில் இவ்வளவு பாராட்டுதற்குரிய விஷயம் என்ன இருக்கிறது என்று தெரியாமல் விழிக்கலானார். ஆனால் தமது இந்த அபிப்பிராயத்தை வாய் விட்டுச் சொல்ல முடியவில்லை. 'என்ன ஐயா, கோழி கிறுக்கினாற் போலிருக்கிறது. இதைப் போய்ச் சித்திரம் என்கிறீர்களே' என்று கேட்க முடியுமா? அவர் மேல் அதிகாரியாயிற்றே! மேலும், கலைகளில் எல்லாம் ரொம்பவும் ருசியுள்ளவராயிற்றே. அவருடைய மனம் புண்படும்படி ஒன்றும் சொல்லக் கூடாதல்லவா? இதை முன்னிட்டே திருஞானம் மௌனம் சாதித்து வந்தார்.

திருஞானத்தின் மௌனத்தை ஸ்ரீமான் முகர்ஜி, வேறு விதமாக அர்த்தம் செய்து கொண்டார். அதாவது திருஞானம், தமது






கொள்கைகளையும் அபிப்பிராயத்தையும் அங்கீகரித்து விட்டார் என்றே நினைத்தார்.

என். கே. எல். ராயின் சித்திரங்களில் ஸ்ரீமான் மூகர்ஜியின் ஈடுபாடும் நாளுக்கு நாள் அதிகமாகி வந்தது. அதன் விளைவாக, என். கே. எல். ராயுடன் நேரிடைத் தொடர்பும் வைத்துக் கொள்ளலானார். அடிக்கடி ராயின் வீட்டுக்குச் சென்று வந்தார். அவர் தீட்டும் சித்திரங்களெல்லாம் அற்புதம் என்று பாராட்டி வந்தார். அவருக்குப் பிரமாதமான விருந்து நடத்தினார்.

இவ்வளவு செய்தும், மூகர்ஜிக்குத் திருப்தி ஏற்பட வில்லை. திருஞானத்தை அழைத்து வந்து, சைத்ரிகர் ராய்க்கு அறிமுகப் படுத்த வேண்டும் என்று உள்ளூற ஆசைப் பட்டுக் கொண்டிருந்தார். ஆனால் திருஞானம் வெகு சாமர்த்தியமாகத் தட்டிக் கழித்து வந்தார். ஏனெனில் சித்திரக்காரர் எதிரில் போய் நின்று 'உங்கள் சித்திரம் பிரமாதமாக இருக்கிறது' என்ற பச்சைப் பொய்யை அவரால் சொல்ல முடியாது. ஆனால் பொய் போல ஏதாகிலும் சொல்ல வேண்டியிருக்கும். அதில் பொய்யை விட மெய் உள்ளுக்குள்ளிருந்து, சித்திரக்காரரை எட்டிப் பார்த்துச் சிரிக்கும்! அது அந்தச் சித்திரக்காரர் மனத்தைப் புண் படுத்தும்! ஆகவே, இந்த ஆபத்திலிருந்தெல்லாம் விடுபட ஒரே வழி, ராயைப் பார்க்காம விருப்பதுதான் என்று நன்குணர்ந்திருந்தார் திருஞானம். ஆனால் மூகர்ஜி அவரை விடுவதாக இல்லையே?

ஒரு நாள் மூகர்ஜி திருஞானத்தை மிகவும் வற்புறுத்திக் கையைப் பிடித்து அழைத்துக் கொண்டு போனார். இவர்கள் சென்ற வேளை ராய் ஏதோ ஒரு சித்திரம் வரைந்து கொண்டிருந்தார். அதைப் பார்த்த உடனேயே, "ஆகா! அற்புதம்! அற்புதம்!!" என்று கூறி மூகர்ஜி வியக்கத் தொடங்கி விட்டார்.

"ஆச்சரியமாக இருக்கிறதே!" என்றார் ஸ்ரீமான் திருஞானம்.

ராய், "உங்கள் நண்பர்கூட என் சித்திரத்தைப் பாராட்டுவதைக் கண்டு பெருமையடைகிறேன்" என்றார்.

இதைக் கேட்டவுடனே, திருஞானம் திடுக்கிட்டார். "இல்லை, இல்லை! நீங்களும் கையில் பிரஷ் பிடித்துக் கொண்டு, வரைகிறீர்கள் என்பது ஆச்சரியமாக இருக்கிறது!" என்று தமது கருத்தை விளக்கினார் திருஞானம்.

இத்தனை நேரம் வேலையிலே மூழ்கியிருந்த சித்திரக்காரர். மெள்ளத் தலையை, நிமிர்த்தித் திருஞானத்தைப் பார்த்தார். திருஞானத்தின் பார்வையும் ராயின் பார்வையும் ஒன்றையொன்று ஒரு கணம் சந்தித்தன!

இதை மூகர்ஜி கவனிக்க வில்லை. அவர் சொல்லிக் கொண்டு போனார்: "ஒரு கை என்ன? பத்து லட்சம் கைகள் இருந்தால்கூட அந்தப் பத்து கைகளினாலேயும் அற்புத அற்புதமான சித்திரங்களைத் தீட்டித் தேசத்தை ஆச்சரியக் கடலில் மூழ்கடித்து விடுவார்..."

## சுதந்திர தின விழா

★

ஆகஸ்டு மாதம் 15ந் தேதி சென்னை மாநகரின் பல பகுதிகளிலும் சுதந்திர தினம் அமோகமாகக் கொண்டாடப் பட்டது. முத்தியாலுப்பேட்டை இளைஞர் காங்கிரஸாரும், சென்னை தேசிய வாலிபர் காங்கிரஸாரும் ஏழைகளுக்கு அன்னம் அளித்துச் சுதந்திர தினம் கொண்டாடினார்கள். முத்தியாலுப்பேட்டை இளைஞர் காங்கிரஸ் நடத்திய அன்ன மளிப்புத் தொண்டைச் சபாநாயகர் ஸ்ரீ சிவசண்முகம் பிள்ளை தொடங்கி வைப்பதை இப் படங்களில் காணலாம்.

★



உடனே சித்திரக்காரர் ராய் குறுக்கிட்டு "மிஸ்டர் முகர்ஜி! கடவுளுக்கு முதலில் நான் நன்றி செலுத்த வேண்டும் - எனக்குப் பத்துக் கைகள் வைக்காமலிருந்ததற்கு. பத்துக் கைகளுடன் நான் வரையும் சித்திரங்களைத் தங்களைப் போன்ற ரஸிகர்கள் பார்த்து மகிழலாம். தங்கள் நண்பரைப் போன்ற ஒரு நண்பர் கூடப் பத்துக் கைகள் கொண்ட அவலட்சண உருவத்துடன் தொடர்புகொள்ள மாட்டார்கள் அல்லவா?" என்று கூறி உரக்கச் சிரித்தார்.

"ஆமாம்! ஆமாம்!" என்று முகர்ஜியும் சேர்ந்து சிரித்தார்

திருஞானம், சிரிப்பதா வேண்டாமா என்று தெரியாமல் விழித்தார்.

இப்படிச் சற்று நேரம் பேசிக் கொண்டிருந்து விட்டு முகர்ஜியும் திருஞானமும் சித்திரக்காரர் ராயினிடம் விடை பெற்றுக் கொண்டு திரும்பினார்கள்.

*　　*　　*

ஒரு வாரம் கழித்து ஒரு நாள் திருஞானத்துக்கு ஒரு கடிதம் வந்திருந்தது.

அன்பு மிக்க நண்பர் அவர்களுக்கு.

தாங்கள் என் இருப்பிடத்துக்கு வந்திருந்து நான் கையில் பிரஷ் பிடித்து எழுதியதைப் பார்த்து ஆச்சரியம் பட்டதைக் கண்டு பெரிதும் மகிழ்ச்சி யுற்றேன். உண்மையிலேயே நானும் கையில் பிரஷ் பிடித்து வரைந்த சில சித்திரங்கள் வைத்துள்ளேன். தாங்கள் வருகிற ஞாயிற்றுக் கிழமை காலை பத்து மணிக்கு என் வீட்டுக்கு அவசியம் வரவும். தாங்கள் மட்டும் வரவும். முகர்ஜி வேண்டாம்.

தங்கள்
என். கே. எல். ராய்.

அடுத்த ஞாயிற்றுக் கிழமை வந்தது. திருஞானத்தின் உள்ளம் 'திக்' 'திக்' என்று அடித்துக் கொண்டது. ஆயினும் மனசைத் திடப்படுத்திக் கொண்டு, ராயின் வீட்டுக்குள் அவர் நுழைந்தார்.

"வாருங்கள்! வாருங்கள்! தங்கள் வருகைக்காக இத்தனை நாழிகை காத்திருந்தேன்!" என்று கூறி வரவேற்றார். பிறகு "டீ சாப்பிடுகிறீர்களா?" என்று கேட்டார்.

"வேண்டாம், இப்பொழுதுதான் காப்பி சாப்பிட்டு விட்டு வருகிறேன்" என்று கூறினார் திருஞானம்.

"சரி, என் சித்திரச் சாலைக்கு வருகிறீர்களா?" என்று கூப்பிட்டார். திருஞானம் எழுந்து அவருடன் சென்றார்.

ராய் வீடு பிரும்மாண்டமான வீடு. நல்ல பணக்காரர். கல்கத்தா நகரிலுள்ள பரம்பரைப் பணக்காரக் குடும்பங்களுள் அவர் குடும்பமும் ஒன்று. ராய் குடும்பத்தினரில் ஆண்களாகட்டும், பெண்களாகட்டும் கலைகளில் ருசியில்லாதவர்கள் கிடையாது. சிலருக்குச் சங்கீதத்தில் அபிருசி; சிலருக்கு நாட்டியத்தில்; வேறு சிலருக்கு இலக்கியத்தில். ராய்க்குச் சித்திரத்தில் ருசி ஏற்பட்டது. சிறு வயது முதலே அவர் வர்ணத்தைக் குழைத்துக் குழைத்து அல்லும் பகலும் வரைந்து கொண்டிருப்பார். இப்படி வரைந்த



வைத்தியர்:—நீங்கள் அவசியம் விளக்கெண்ணெய் சாப்பிட வேண்டும். நன்னாரி ஷர்பத் கலந்து சாப்பிடுங்கள்.

நோயாளி:—நன்னாரியைத் தனியாகச் சாப்பிட எனக்குப் பிடிக்காது. விளக்கெண்ணெயோடு சேர்த்துச் சாப்பிடச் சொன்னது பற்றி ரொம்ப சந்தோஷம்!

சித்திரங்கள் அவருடைய அரண்மனை போன்ற வீட்டின் பின் கட்டில் ஒரு பிரம்மாண்டமான அறையில் யாரும் பார்க்காத வண்ணம் வைத்திருந்தார். அந்த அறைக்குத் திருஞானத்தை அழைத்துக் கொண்டு போனார். சித்திரங்களைக் காண்பித்தார். உண்மையான கலையழகு மிக்க சித்திரங்கள் திகழ்ந்தன. ஒரு சித்திரம், சகுந்தலை மான்களிடம் விடை பெற்றுக் கொள்ளும் காட்சி. சித்திரத்தில் பிரியா விடையின் சோகத்தை அப்படியே கொண்டு வந்திருந்தார். மற்றோர் படம், சீதை ராமனைப் 'பொன் மானைப் பிடித்துத் தா' என்று கேட்கும் காட்சி. ஆகா! எவ்வளவு அற்புதமாக இருந்தது! இப்படி ஒவ்வொரு படத்தையும் பார்த்துத் திருஞானம் அப்படியே பிரமித்து விட்டார். அவருக்குப் பேச நா எழவில்லை.

இவ்வளவு சித்திரங்களையும் பார்த்து விட்டு வெளியில் வந்த போது சரியாக ஒரு மணி. இந்த மூன்று மணி நேரமும் அவருக்குப் பொழுது போனதே தெரியவில்லை. "மூன்று மணி நேரமாகப் பார்த்திருக்கிறேன்! நேரம் சென்றதே தெரியவில்லையே!" என்றார் நம்முடைய திருஞானம்.

இப்படிப் பேசிக் கொண்டே இருவரும் பழைய இடத்துக்கு அதாவது முதன் முதலில் ராயைத் திருஞானம் சந்தித்த இடத்துக்கு வந்து சேர்ந்தனர். அங்கே, அர்த்தம் புரியாத கோட்டுச் சித்திரம் ஒன்றிருந்தது. திருஞானத்துக்கு அதைப் பார்த்தவுடன், இத்தனை நேரம் பார்த்து விட்டு வந்த வியப்புணர்ச்சியெல்லாம் காற்றாய்ப் பறந்து விட்டது! முகத்தில் சோர்வும், சோகமும் பிரதிபலிக்கத் தொடங்கி விட்டது. திருஞானத்தின் முக பாவ மாறுதலைப் பார்த்த ராய், விழுந்து விழுந்து சிரித்தார்.

"ஏன் ஸார், இந்தச் சித்திரங்களைப் பார்க்கப் பிடிக்க வில்லையோ?" என்று கேட்டார்.

"அதெல்லாம் ஒன்றுமில்லை. இது இன்றைய கலை...." என்றார் திருஞானம்.

"கலையா? வெறும் கொலையல்லவா?"

"பின் ஏன் வரைகிறீர்கள்? இதை நிறுத்தி விடுவதுதானே?" என்றார் திருஞானம்.

"இந்தச் சித்திரங்கள் எழுதி வெளியிட்ட பிறகுதானே எனக்குப் புகழ் வரலாயிற்று! என் புகழைக் காப்பாற்றிக் கொள்ள இத்தகைய சித்திரங்கள், கோலங்கள் எழுதியாக வேண்டியிருக்கிறது!" என்றார்.

* * *

மேற்கண்ட கதையைச் சொல்லி விட்டு ஸ்ரீமான் திருஞானம் பின்னை, "பார்த்தீர்களா, ஒவ்வொரு சமயம் புகழ் கலையை விரட்டு விரட்டு என்று விரட்டுகிறதை? இதை உத்தேசித்துத்தான், நம் முன்னோர்கள் 'புகழுக்கு ஆசைப் படாதே! உன் மனசிலுள்ளதைச் சொல்லு போதும்' என்று கூறி வந்தார்கள்" என்று கூறி முடித்தார்.

# சஸ்பேனியா

ஆர். திருவேங்கடசாமி

கோவை - சாம்ராஜ்நகர் சர்வீஸ் பஸ் ஜன நெருக்கமும் போக்குவரத்தும் அதிகமாக உள்ள கோவை நகரப் பகுதியை விட்டு மெதுவாக நகர்ந்து தனது நான்காவது மைல் பிரயாணத்தைத் தொடங்கியது. கொங்கு நாட்டு விவசாயிகளின் அரும் பெரும் சாதனைகளில் ஒன்றான (ஆகாச கங்கையல்ல) பூமாதேவியை வரவழைத்து ஆங்காங்கே கங்கை, காவிரியாக்கி விருக்கிறார்கள். சாலையின் இருமருங்கிலும் (வானனாவி யல்ல) பூமியை ஒட்டினாற் போல இடை இடையே பசுமை நிறமாக்கிப் பொன்னிறமான நெல் வயல்களையும் வெள்ளைத் தாமரையுடுத்தி என்பது போல பஞ்சாலைகளையும், பஞ்சைகளையும் போற்றிப் பேணும் பருத்திச் செடிகள் இன்றும் வரவேற்கும் கணபதி கிராமத்தை அடைந்தது.

மோட்டார் வண்டியின் பேரிரைச்சலுக்கிடையில் "அதோ பார்! நெல் வயல் வரப்பிலே ஏதோ ஒரு செடி வளர்த்துள்ளது. பூக்களும் மஞ்சள் மஞ்சளாய்ப் பூத்துக் குலுங்குகின்றன. காய்களும் குலை குலையாய்க் காய்த்துத் தொங்குகின்றன. வயலைச் சுற்றியும் வரிசை வரிசையாய்ப் பசுமையுடன் காவல் காக்கின்றது" என்றார் ஒருவர். மற்றப் பிரயாணிகள் இந்தக் காட்சியைப் பார்த்து அதிசயித்தனர்.

"இது ஏதோ புது வகை அகத்திக் கீரை" என்று ஒருவர் கூறினார். மற்றவர் அதை மறுத்துக் காற்றையும் நோயையும் தடுக்கப் பயிர் செய்திருப்பார்கள் என்று விவாதிக்க ஆரம்பித்தார்.

மூன்றாமவர் "இல்லை! இல்லை!! விவசாய இலாகாவில் பசுந்தாள் உரத்துக்காகப் பயிர்

செய்யப்பட்ட சஸ்பேனியா என்று கூறும் சீமை அகத்திதான் இது" என்றார். அதே மோட்டாரில் பிரயாணம் செய்த அடியேனும் ஆமோதிக்க விவாதம் ஒருவாறு முடிவுற்றது.

மீண்டும் ஒரு குரல், "ஏன் ஸார்! 'லேகி செடியா' என்னும் எருத்தழைச் செடியைப் பற்றித்தான் விளக்கமாகக் கேள்விப் பட்டிருக்கிறேன். 'சஸ்பேனியா'வைப் பற்றிய விவரங்கள் தெரியவில்லையே" என்று கேட்டது.

சிறப்பாக இன்று தஞ்சை ஜில்லா நெல் வயல்களிலும் குறிப்பாகக் கோவையின் சுற்றுப்புறத் தோட்டங்களிலும் வயல்களிலும் சீமை அகத்தி பூத்துக் குலுங்குகிறது என்றால் அந்தப் பெருமை சென்னை விவசாய இலாகாவுக்கே சாரும்.

இன்றைக்குச் சுமார் இருபது ஆண்டுகளுக்கு முன் கென்யா தேசத்திலிருந்து கொண்டு வந்து, சென்னை மாகாண விவசாய ஆராய்ச்சிப் பண்ணைகளில் பரிசோதனை செய்து காண்பித்ததிலிருந்து சீமை அகத்தி பலவிடங்களில் பரவி யுள்ளது. ஆனால் இதை இன்னும் அதிகம் பரவச் செய்ய வேண்டும். சணப்பு, கொழிஞ்சி முதலான பசுந்தாள் உரப் பயிர்களை விட இதற்கு உண்டான மேன்மைகளை விவசாயிகளுக்கு எடுத்துக் காண்பித்தால் இதை அவர்கள் உடனே பயிர் செய்ய முற்படுவார்கள் என்பதில் ஐயம் இல்லை.

கொழிஞ்சி, தக்கைப் பூண்டு, பில்லிப் பசர், சணப்பு முதலான பயிர்களை விடச் சீமை அகத்தி மிகையான வளர்ச்சியால் அதிகப் பசுந்தாள் உரம் கொடுக்கிறது. ஏக்கரில் சுமார் ஐந்து மாத காலத்தில் சராசரி 60,000 ராத்தல் பசுந்தாள் உரத்துக்கு மேல் கிடைப்பதால் அதே பயிரை நாலு முதல் ஆறு ஏக்கர் நிலத்துக்கு உரமாக உபயோகப் படுத்தலாம்.

ஆடுதுறை ஆராய்ச்சிப் பண்ணையில் ஓராண்டு ஆராய்ச்சி செய்து பார்த்ததில் ஏக்கருக்கு ஒரு லக்ஷம் ராத்தல் பசுந்தாள் உரம் வரை கிடைத்தது. சணப்பு, தக்கைப் பூண்டு முதலிய பசுந்தாள் உரப் பயிர்களைப் போல் குறுகிய காலப் பயிராகவும் இதை வளர்க்கலாம். சுமார் இரண்டு மாத காலத்தில் 18,000 ராத்தல் பசுந்தாள் உரப் பயிர் கிடைக்கும்.

இது சிறப்பாக வறட்சியையும் அதிக ஈரத்தையும் தாங்கும் சக்தி யுடையது. பூச்சி பூஞ்சான நோய்களால் அதிகம் தாக்கப் படுவதில்லை. கால்நடைகளாலும் அதிகம் விரும்பப் படுவதில்லை. பெரும்பாலும் நல்லபடியாக வளரும். களர் நிலத்தையும் இதன் மூலம் பண்படுத்தலாம். இப் புதிய தாள் உரம் சேற்றில் சீக்கிரம் மக்கும்.

மற்ற நாட்டு மக்களை ஒப்பிடும் பொழுது இந்திய விவசாயிகள் மிக்க ஏழ்மையான நிலைமையில் இருப்பதால் எவரும் நேரடியாகப் பலன் கிடைக்காத பயிர்களைச் செய்ய ஐயுறுவது இயல்பே.

இதை நன்குணர்ந்த விவசாய இலாகா நிபுணர்கள் தனியாகச் சீமையகத்திப் பயிர் செய்வதை விட நெல், ராகி, கரும்பு, கம்போடியாப் பருத்தி போன்ற பயிர்களில் ஊடு பயிராக நாற்று விட்டு நடும்படி சொல்கிறார்கள். இதற்குத் தனியாக நிலமோ நீரோ அல்லது மற்றப் பக்குவங்களோ செய்ய வேண்டியதில்லை. இது 'லெகுமினஸ்' இனத்தைச் சேர்ந்திருப்பதால் மற்றப் பயிர்களுக்கு எவ்விதமான இடைஞ்சலும் கொடுக்காது.

நாற்றுக்கள் நன்றாக வளர ஒரு சென்ட் நாற்றங்காலுக்கு எட்டு 'அவுன்ஸ்' விதை வீதம் பக்குவப்படுத்தி விதைக்க வேண்டும். தடித்துச் செழிப்பாய் வளர்ந்த ஒரு அங்குல நாற்றுகளை நெல் வயல் உள்ள வரப் போரங்களில் சீரை ஒட்டினாற் போன்று நெல் நாற்று நடும்பொழுதே, நாலு அங்குலத்துக்கு ஒன்றாக நட வேண்டும். அதே போன்று ராகி, பருத்தி, கரும்பு முதலிய பயிர் நிலத்தில் நீர் செல்லும் வாய்க்கால் வரப்புகளில் நட்டு விடலாம். நெல், ராகி பயிர்களில் வளர்ந்த செடிகளை அடுத்து வரும் பயிருக்கு உரமாக்கலாம். கரும்பு, பருத்தி முதலிய பயிர்களில் வளர்த்ததை அப் பயிருக்கே உரமாக்கவோ அல்லது விதை முதலுக்கோ விட்டு விடலாம்.

ஒரு ஏக்கர் வரப்போரத்தில் நட்ட செடியிலிருந்து அந்த ஏக்கர் நஞ்சைக்கு வேண்டிய பசுந்தாள் உரம் கிடைக்கும். அபரிமிதமாகக் கிடைக்கும். மற்றத் தழைகளைக் கொண்டு 'கம்போஸ்ட்' உரமாக்கலாம்.

நம் நாடு முன்னேற வேண்டுமானால் நாம் உணவு தான்யங்களுக்குப் பிற நாட்டை எதிர் பார்த்து நிற்கக் கூடாது.

நம் நாட்டில் வேண்டிய பூமி யிருக்கிறது; உழைப்பதற்கும் ஏராளமாக மக்கள் இருக்கின்றனர். சற்று யோசனையைப் பயன்படுத்தினால் சாதாரண வளமுள்ள நிலத்தைக் கூட ஒன்றுக்கு நாலாகவும், பத்தாகவும் விளையும் வளம் கொழிக்கும் நிலமாகச் செய்யலாம். நமக்கு வேண்டிய உணவை நாமே பயிர் செய்து கொள்ளலாம்.

உணவு சுய தேவைப் பூர்த்திக்கு உரம் சுய தேவைப் பூர்த்தியே அடிப்படையாகும். ஆகையால் பசுந்தாள் உரத்தைப் பயிர் செய்து பலன் அடையுங்கள்.



# தங்க ஒட்டியாணம்

ஸரோஜா ஸ்ரீநிவாஸன்

**ப**கல் ஒரு மணி இருக்கும். அப்பொழுது தான் பள்ளிக்கூடம் விட்டு வந்த பாலா தடா ரென்று வாசற் கதவைத் திறந்து கொண்டு உள்ளே ஓடிவந்தாள். கடும் வெய்யிலில் ஓடிவந்ததால் ரோஜா இதழ் போல் சிவந்த அவள் முகம் கன்றிப் போய் முத்து முத்தாக வியர்வை அரும்பிக் கொண்டிருந்தது. சிலேட்டுப் புத்தகத்தை ஒரு மூலையில் வீசி யெறிந்து விட்டு "பாட்டி! பாட்டி!" என்று உச்ச ஸ்தாயியில் கத்திக் கொண்டே ஊஞ்ச லில் படுத்துக் கொண்டிருந்த காமாக்ஷி அம் மாளின் மீது ஓடிவந்து விழுந்தாள். அவள் குரலில் படபடப்பும் வேகமும் கலந்து தொனித்தன. பள்ளிக்கூட விழுப்புடன் பேத்தி தன்மேல் பட்டுவிட்டதைக் கூட அதி கம் பாராட்டாத காமாக்ஷி அம்மாள், "ஏண்டி கண்ணு! இப்படியா வெய்யிலிலே ஓடி வருவா! ஏன் இவ்வளவு அவசரம்? நிழல் ஓரமாக வரக்கூடாதா?" என்று ஆதங்கத் துடன் கேட்டபடியே அருமைப் பேத்தியை அணைத்துக் கொண்டாள்.

பாட்டியின் பேச்சைக் காதில் வாங்காத பாலா தன் போக்கில் ஆவலும் ஆசையும் நிறைந்த குரலில் "பாட்டி! எங்கள் ஸ்கூ லிலே சரோஜான்னு ஒரு பெண் இருக்காள். அவளுக்கு இன்னிக்கிப் பொறந்த நாளாம். இன்னிக்கு ஸ்கூலுக்கு அவள் அழகா பட்டுப் பாவாடை, சட்டை எல்லாம்போட்டுண்டு வந் திருந்தாள். அப்புறம் அவள் ஒரு ஒட்டியாணம் போட்டுண்டு வந்திருந்தாள். பாட்டி, ரொம்ப ஜோரா இருந்தது அது. அதிலே முத்து முத்தா மணி கூடக் கட்டியிருந்தது, பாட்டி. எனக்கும் அதேமாதிரி ஒரு ஒட்டியாணம் பண்ணிப் போடறயா? ரொம்ப ஆசையா இருக்கு. பாட்டி" என்று மூச்சு விடாமல் சொல்லி நிறுத்தினாள் பாலா. பேத்தியின் பேச்சை ஆவலுடன் ரஸித்துக் கேட்டு வந்த காமாக்ஷி ஒட்டியாணம் என்ற வார்த்தை யைக் கேட்டதும் திடுக்கிட்டுப் போனாள். மறுகணம் அவள் முகம் மாறுதலடைந்தது. பழைய நினைவு ஒன்று அவள் நெஞ்சிலே திடீரென்று மோதி அவளை உணர்விழக்கச் செய்தது. பேத்திக்குப் பதிலளிக்கக் கூடக் கண நேரம் மறந்து விட்டாள்.

"என்ன, பாட்டி? நான் கேட்கிறேனே, ஒட்டியாணம் வாங்கித் தரமாட்டாயா?" என்று காமாக்ஷியின் முகவாயைப் பிடித்துத் திருப்பினாள் பாலா.

"பள்ளிக்கூடத்தி லிருந்து வந்தாச்சா? பாட்டியிடம் செல்லம் கொஞ்சிண்டு பேத்தி என்ன கேட்கிறாள்?" என்று கேலியாகக் கேட்டபடியே சமையலறையிலிருந்து வெளியே வந்தாள். காமாக்ஷியின் அருமை நாட்டுப் பெண் ஸியாமளா.

"அவளுக்குத் தங்க ஒட்டியாணம் வேணு மாம். பண்ணிப் போடுன்னு பாட்டியைக் கேட்கிறாள்" என்று தன் முகபாவத்தை மறைத்துச் சமாளித்துக் கொண்டு சிரித்த படியே பதிலளித்தாள் காமாக்ஷி.

"ஏ, அப்பா! பவுன் விற்கிற விலையிலே பேத்தி சின்ன நகையாகத்தான் பார்த்துக் கேட்கிறாள். சரி, சரி! எல்லாம் நாளைக்கே முதல் காரியமாக ஒட்டியாணம் பண்ணிப் போடலாம். பள்ளிக் கூடத்திற்கு நாழி யாச்சு. சாப்பிட வா, பாலா!" என்று தன் பெண்ணைக் கூப்பிட்டாள் ஸியாமளா.

ஆனால் பாலா எழுந்திருக்கவில்லை. அம்மா தன்னை கேலியாகக் கூறுகிறாள் என்று அவ ளுக்குப் புரிந்து விட்டது.

"பாட்டி, எனக்கு ஒட்டியாணம்..." என்று கருதி கூட்டியபடி சிணுங்க ஆரம்பித்தாள்.

"அவ கிடக்கிறா அசடு! நான் உனக்கு வாங்கித் தரேண்டி கண்ணு! இதென்ன பிர மாதம்? அழாதே, சாப்பிட்டுவிட்டுச் சமத்தா பள்ளிக்கூடம் போ!" என்று பாலாவைச் சமாதானப்படுத்தி அனுப்பினாள் காமாக்ஷி. பாட்டியின் வார்த்தையில் நம்பிக்கையும், சந்தோஷமும் கொண்ட பாலா சமைய லறைக்குள் துள்ளிக் கொண்டு ஓடினாள். அவள் எழுப்பி விட்டுப் போன ஒட்டியாணம் என்ற சொல் காமாக்ஷியின் உள்ளத்திலே சலன அலையை எழுப்பி விட்டது. மக்கிப் போன பழைய நினைவுகளிலே சிந்தனையை

கெஞ்சி விட்டபடியே அவள் தன்னை மறந்து அப்படியே சிலையாக உட்கார்ந்து விட்டாள்.

* * *

காமாக்ஷி கல்யாணமாகிப் புக்ககத்தில் நுழைந்தபோது அவள் உள்ளத்தில் எத்தனையோ வித எண்ணங்களும், போராட்டங்களும் நிரம்பி நிரம்பி வழிந்து கொண்டிருந்தன. இளையாளாகத் தான் வாழ்க்கைப் பட்டு விட்டோமே என்ற குறை அவள் நெஞ்சில் ஒருபுறமிருக்க, தனக்கு முன் அந்த வீட்டில் கிருகலக்ஷ்மியாக இருந்து தெய்வமாகி விட்டவளைப் பற்றிய சிந்தனை நெஞ்சைக் குடைந்து கொண்டிருந்தது.

காமாக்ஷியின் கணவன் சங்கரனுக்கு முப்பது வயதிருக்கும். முதல் மனைவியை இழந்து தவித்த சமயம், காமாக்ஷி அவன் வாழ்வில் குறுக்கிட்டு அவனை வாழ வைத்தாள். காமாக்ஷிக்குத் தன் மாமியார் சிவகாமி அம்மாளிடம் மரியாதையும் அன்பும் உண்டு.

சிவகாமி வாழ்க்கையிலே ரொம்பவும் துக்கப்பட்டவள். தன் ஒரே பிள்ளைக்குக் கல்யாணம் செய்து கண்குளிரக் கண்டு மகிழ்ந்த சமயம் ஒரு நாள் அவள் முதல் நாட்டுப் பெண் அலமு அவளை மீளாத துக்கத்தில் ஆழ்த்தி விட்டுக் கண்ணை மூடினாள். தன் வீட்டில் விளக்கேற்ற ஒரு லக்ஷ்மி வரமாட்டாளா என்று மனம் உடைந்து சிவகாமி ஏங்கிக் கொண்டிருந்த பொழுதுதான் காமாக்ஷி இரண்டாம் நாட்டுப் பெண்ணாக வந்து சேர்ந்தாள். சிவகாமி அம்மாளுக்குக் கேட்க வேண்டுமா? அருமை நாட்டுப் பெண்ணைக் கண்ணின் கருமணியாக வைத்து நடத்தினாள். காமாக்ஷியை வேலை செய்யவிடாமல் அவளை உட்கார்த்தி வைத்துத் தாங்கினாள். தன் மாமியார் தன்னிடம் காட்டும் மட்டற்ற அன்பைக் கண்டு வியப்பும் ஆச்சரியமும் அடைந்தாள் காமாக்ஷி. விவாகமாகி முதல் முதலாக அந்த வீட்டினுள் நுழைந்தபோது தன் நினைவும் எண்ணமும் ஓடின ஓட்டமென்ன? இப்பொழுது நடப்பதென்ன?

வாசற்புற ஹாலில் பெரியதாக மாட்டியிருந்த புன் சிரிப்புத் தவழும் மூத்தாளின் போட்டோதான் புக்ககத்தினுள் நுழைந்த காமாக்ஷிக்கு முதல் முதல் வரவேற்பளித்தது. அதைப் பார்த்தவுடனேயே மூத்தாளின் போட்டோவாகத் தான் இருக்க வேண்டுமென்று நினைத்துக் கொண்டாள் காமாக்ஷி. அவள் சந்தேகம் வீண் போகவில்லை. உள்ளேயிருந்து பரபர வென்று வெளியே வந்த சிவகாமி கண்களில் பொங்கும் கண்ணீரைச் சிரமப்பட்டு அடக்கியபடி, ''இந்தாடியம்மா, காமு! முன்னாடி கிழக்கு முகமாய்ப் பார்த்து இந்தப் படத்திற்கு நமஸ்காரம் பண்ணு!'' என்று காமாக்ஷியிடம் சொன்னாள். காமாக்ஷியும் அவ்விதமே நமஸ்கரித்தாள். மூத்த நாட்டுப் பெண்ணின் நினைவினால் தன் மாமியாரின் கண்களிலிருந்து பொங்கி வழிந்த கண்ணீரிலிருந்தே தனக்கு மூத்தாள் எவ்வளவு தூரம் தன் மாமியாரின் அன்புக்குப் பாத்திரமாகி இருக்க வேண்டுமென ஊகித்து உணர்ந்து கொண்டாள் காமாக்ஷி. ஆனால் அவள் மனசில் காரணமற்ற ஒரு பயமும் குடி கொண்டது. தன மாமியார் சுபாவம் எப்படியோ? தனக்கும் அவருக்கும் ஒத்துவரவேண்டுமே! ஒருகால் மூத்தாளின் குணத்தையும் தன் குணத்தையும் ஒப்பிட்டுப் பேசி ஏதேனும் குற்றம் குறை கூறுவாரோ! ஏற்கெனவே ஒருத்தி இந்த வீட்டுக்குக் கிருகலட்சுமியாய்ப் புகுந்து மாமியாரின் அன்பையும் ஆதரவையும் பெற்று மறைந்து போய் விட்டாள். தனக்கும் அத்தகைய அன்பு கிட்டுமா? மூத்தாள் தன் மாமியாரிடம் பெற்ற அன்பையும் நன்மதிப்பையும் தானும் எப்படியாவது பெற்றுவிட வேண்டுமென்று மனக்குள்ளாகத் தீர்மானித்துக் கொண்டாள் காமாக்ஷி. ஆனால் அவள் காரணமின்றிக் கொண்ட மனக் குழப்பமெல்லாம் வீண் பிரமையும் பயமும் தான் என விரைவிலேயே கண்டு கொண்டாள். சிவகாமு காமாக்ஷியை நாட்டுப் பெண்ணாய் நடத்தவில்லை. தன் பெண் என்ற ஸ்தானத்திலேயே அவளை வைத்திருந்தாள். காமு, காமு என்று உயிராய்த்





தானிருந்தாள் சிவகாமி. ஒரு முறை பட்டு விட்ட புண்ணின் தழும்பு அவள் நெஞ்சில் மறைந்து விடுமா? மாமியாரின் அன்பு வெள்ளத்தில் திணறினாள் காமாக்ஷி. அவர்கள் வாழ்க்கைப் படகு அமைதியாகவே மிதந்து கொண்டிருந்தது.

அன்று வெள்ளிக்கிழமை. எண்ணெய் தேய்த்துக் குளித்துவிட்டு வராண்டாவில் நின்றபடி தலையை ஆற்றிக் கொண்டிருந்தாள் காமாக்ஷி. அவளுக்குச் சற்று தூரத்தில் நாற்காலியில் சாய்ந்தபடி பேப்பர் படித்துக் கொண்டிருந்தான் சங்கரன். "காமு, காமு" என்று உள்ளே இருந்து அழைத்த தன் மாமியாரின் குரலைக் கேட்ட காமாக்ஷி பரபரவென்று தலையை அள்ளிச் செருகிக் கொண்டு உள்ளே போனாள். "இந்தா, காமு! இந்தப் பூவை அலமுவுடைய படத்துக்குச் சாத்து" என்று ஒரு சரம் மல்லிகைப் பூவைக் காமுவிடம் கொடுத்தாள் சிவகாமி. பணிவுடன் அதை வாங்கிக் கொண்ட காமு ஹாலை நோக்கிச் சென்றாள். நாற்காலியை இழுத்துப் போட்டு அதன் மேல் ஏறி நின்று கொண்டு அலமுவின் படத்துக்குப் பூவைச் சூட்டினாள். ஏனோ அவள் மனசில் ஒரு தனி பக்தியும் விரல்களில் நடுக்கமும் இருந்தன. நேருக்கு நேர் அருகில் நின்று படத்தைச் சரியாகக் கவனிக்க அன்றுதான் காமுவுக்குச் சந்தர்ப்பம் வாய்த்தது. தன் மூத்தாளின் அழகைக் கண்டு பிரமித்துப் போனாள் காமு.



மோகனமாய்ச் சிரித்த முகம். அழகிய கண்கள்; படிப்படியாகச் சுருண்ட கூந்தல்; முகத்தில் அன்புக் கலை தாண்டவமாடிற்று. அப்பழுக்குச் சொல்லமுடியாத சிலை போன்ற அங்க அமைப்புகள். தலையிலிருந்து கால் வரை நகைகளாக இழைத்திருந்தது. இடுப்பைச் சுற்றிப் புதையப் புதைய அணிந்திருந்த தங்க ஒட்டியாணம் படத்திற்குத் தனி அழகையும் கவர்ச்சியையும் கொடுத்தது. வைத்த கண் வாங்காமல் காமாக்ஷி படத்தையே வெறித்துப் பார்த்துக் கொண்டிருந்தாள்.

அன்று சாயங்காலம் சிவகாமி பீரோவில் எதையோ தீவிரமாகத் தேடிக் கொண்டிருந்தாள். ஆவல் நிறைந்த முகத்துடன் அவள் அருகில் நின்று கொண்டிருந்தாள் காமாட்சி. சின்னச் சிமிழ் ஒன்றைத் திறந்த சிவகாமி அதிலிருந்து இரட்டை வடம் சங்கிலி ஒன்றை எடுத்தாள். சிறிய பொட்டலம் ஒன்றைப் பிரித்து ஒற்றைக்கல் மூக்குத்தி ஒன்றையும் எடுத்தாள்.

காமாக்ஷியின் பக்கம் திரும்பி, "இந்தா, காமு! இது இரண்டையும் போட்டுக் கொள்" என்று சங்கிலியையும் மூக்குத்தியையும் அவளிடம் கொடுத்தாள்.

ஆச்சரியமும் ஆனந்தமும் மேலிட, "ஏனம்மா! இது எல்லாம் ஏது? இது யாருடையது?" என்று கேட்டாள் காமாக்ஷி.

"இதெல்லாமா! அதோ அந்தப் படத்திலிருக்கிறாளே, அவளுடையதுதான்" என்றாள் தழுதழுக்கும் குரலில் சிவகாமி, அலமுவின் படத்தைச் சுட்டிக் காட்டியபடியே. அவள் கண்களின் ஓரங்களில் இரு சொட்டுக் கண்ணீர் துளித்து நின்றது.

காமாக்ஷி மௌனமாக அவைகளை வாங்கி அணிந்து கொண்டாள். கடைசியாக பீரோவிலிருந்து நீண்ட வட்டமான அழகிய பெட்டி ஒன்றை எடுத்தாள் சிவகாமி, அதை எடுக்கும்போதே அவள் கரங்கள் நடுங்கின.

"இந்தா, சங்கரா! இதைப் பெரிய டிரங்குப் பெட்டியின் அடியிலே கொண்டு போய் வை. இது இங்கே எப்படி வந்தது? கண் மறைவாயிருக்கட்டும்......" வார்த்தைகளில் கசப்பு கசந்து நிற்க சிவகாமி அம்மாள் அந்தப் பெட்டியைச் சங்கரனிடம் எடுத்துக் கொடுத்தாள்.

"அதிலே என்னம்மா இருக்கிறது? நான் பார்க்கக் கூடாதா?" என்று ஆவலுடன் கேட்டாள் காமாக்ஷி.

காமுவின் வார்த்தைகளைக் கேட்ட மறு கணம் சிவகாமியின் முகத்தில் சோகம் கவிந்து கொண்டது. "காமு! அதிலே

இருக்கும் பொருள் உனக்குத்தான் சொந்தம். அதை உனக்குத்தான் தரப்போகிறேன். ஆனால் இப்போது நான் அதைப் பார்க்கவோ அல்லது உனக்குக் கொடுக்கவோ விரும்பவில்லை!'' என்றாள் கரகரத்தகுரலில்.

காமாக்ஷிக்குப் பெட்டியில் உள்ள பொருளைப் பார்க்க வேண்டுமென்ற ஆசை பன்மடங்காயிற்று. ''அம்மா! நான் ஒரு முறை அதைப் பார்த்து விட்டு வைத்து விடுகிறேன். எனக்குஇப்பொழுது அது வேண்டாம்!'' என்றாள் கெஞ்சும் குரலில்.

காமுவின் ஆசையையும் கெடுக்க விரும்பாத சிவகாமி மௌனமாகப் பெட்டியைக் காமாக்ஷியிடம் கொடுத்தாள். ஆவலோடு அதைத் திறந்து பார்த்த காமு திகைத்துப் போய் விட்டாள். பள பளவென்று, புது மெருகு கலையாமல் கெஜலட்சுமியின் முகப்பு பதித்து அழகிய சிறு முத்துக்கள் தெளி தெளியாகக் கோத்த தங்க ஒட்டியாணம் ஒன்று அதில் ஒளி வீசியது. அதன் பளபளப்பும் மெருகும் கண்ணைக்கவர்ந்தது. காமுவுக்கு அன்று காலையில் போட்டோவில் பார்த்த ஒட்டியாணம் சட்டென்று ஞாபகத்திற்கு வந்தது.




''இது அலமு அக்காவுடையதா அம்மா?'' என்று ஆவலுடன் கேட்டாள் காமு.

''ஆமாம் காமு. மூனு வருஷத்துக்கு முன்னுடி தங்க ஒட்டியாணத்துக்கு ரொம்ப மவுசு இருந்தது. அப்பொழுதெல்லாம் அதுதான் ரொம்ப 'பாஷன்'. யாரைப் பார்த்தாலும் இடுப்பில் ஒட்டியாணம் ஒளி வீசும். அலமுவும் ஒரு ஒட்டியாணம் வேணும்னு ரொம்ப ஆசைப்பட்டாள். அப்போ அவளுக்கு எட்டு மாசம். சீமந்தத்திற்கு நாள் குறித்திருந்தது. அவள் ஆசையையும் கெடுக்க வேண்டாம்னு இந்த ஒட்டியாணத்தைப் பண்ணினேன். ஒட்டியாணம் ரொம்ப லட்சணமா யிருந்தது. பண்ணி வந்த அன்றே சந்தனக்கலர்ப் பட்டுப் புடவையை உடுத்திக்கொண்டு ஒட்டியாணத்தையும் போட்டுக் கொண்டாள். புதியப் புதிய ஒட்டியாணமும் அவள் இடுப்பும் அம்மன் மாதிரி அழகா யிருந்தது. எல்லாரும் திருஷ்டி விழும் போல் புகழ்ந்தனர். கடைசியில் திருஷ்டியே பட்டுவிட்டது. அன்று இரவே வயிற்று வலி, இடுப்பு வலி என்று புழுவாய்த் துடித்துப்போனாள். குறைப் பிரசவமாகி ஜன்னி கண்டது. கடைசியாக அவ்வளவு தான்......'' சிவகாமியின் கண்களில் கோத்து நின்ற கண்ணீர்த் துளிகள் துடித்துக் கீழே உதிர்ந்தன. சிவகாமி மேலும் தொடர்ந்தாள். ''அலமு எத்தனையோ ஆசைப் பட்டுப் பண்ணிக் கொண்ட ஒட்டியாணத்தை அவள் ஒரு நாள் கூட அணிந்து கொள்ளவில்லை. நம் குடும்பத்துக்கே இந்த ஒட்டியாணம் ஆகி வரவில்லை. அது பெட்டியிலேயே இருக்கட்டும்'' என்று கூறி முடித்தாள் உணர்ச்சியுடன் குரலில் சிவகாமி.

விஷயத்தை அறிந்த காமாக்ஷி அப்படியே கற்சிலையாகி விட்டாள்.

முப்பது வருஷங்கள் ஓடி விட்டன. இன்று காமு, காமாக்ஷி மாமியாகி, காமாக்ஷி அம்மாளாக மாறி, அருமைப் பேத்தி பாலா பாட்டி என்று அழைக்கும் பருவத்தை எட்டிப் பிடித்து விட்டாள். இன்று வரை தன் மாமியாரின் ஸ்ரீதனமாக ஒட்டியாணத்தை அவள் வாக்குப் படியே பெட்டியில் பூட்டி வைத்திருந்து விட்டாள். ஆனால் இன்று பேத்தி பாலாவின் பொருட்டு நீண்ட வருஷங்களாகப் பெட்டியில் சிறை கிடந்த ஒட்டியாணத்திற்கு விடுதலை கிடைத்தது.

சாயங்காலம் பள்ளிக்கூடத்திலிருந்து வந்த பாலா பாட்டியின் கையிலிருந்த ஒட்டியாணத்தைக் கண்டு வியப்பில் ஒரு துள்ளுத் துள்ளினாள்.

''பாட்டி, எனக்கா ஒட்டியாணம்? எப்போ கடைக்குப் போய் வாங்கினே?'' என்று ஆவலுடன் கத்திக்கொண்டே ஓடிவந்து காமாக்ஷியிடமிருந்த ஒட்டியாணத்தைப் பிடுங்கினாள் பாலா. பேத்தியின் இடுப்பில் ஒட்டியாணத்தை அணிவித்த காமாக்ஷியின் முகத்தில் நிம்மதியும் சந்தோஷமும் நிலவிற்று. பாலாவின் முகத்தில் கூத்தாடிய சந்தோஷத்தில் என்றோ தெய்வமாகிவிட்ட தன் மாமியார், மூத்தாள் அலமு இருவருடைய நினைவு முகத்தையும் கண்டாள் காமாக்ஷி.




# நதிக்கரையிலே

வேங்கடலட்சுமி

என் தம்பி சீதாபதி அப்பொழுதுதான் புதிதாக மோட்டார் வாங்கி யிருந்தான். அதில் அவனுக்குப் பெருமை பிடிபடவில்லை. மிகவும் சிறிய வயது அவனுக்கு. பரீட்சைகளெல்லாம் சீக்கிரமாகப் பாஸ் செய்து சரசரவென்று முன்னுக்கு வந்து விட்டான். எடுத்த எடுப்பில் நல்ல வேலையும் கிடைத்தது. கை நிறையச் சம்பளம். இப்பொழுது பன்னிரண்டாயிரம் ரூபாய் விலைக்குப் புத்தம் புதிய மோட்டாரொன்றும் வாங்கி வந்து விட்டான். ரொம்பவும் நல்ல மனசுதான் அவனுக்கு. ஆனால் சீக்கிரமே அவனிடம் வந்து குடி புகுந்த அதிர்ஷ்டலக்ஷ்மி அவனுக்கு அகம்பாவத்தையும் உண்டாக்கி விட்டாள். தனக்கு நிகர் யாருமில்லை யென்ற கர்வத்தில் கொஞ்சம் தலை நிமிர்ந்து நடக்கலானான் சீதாபதி. அவன் மனைவி மீனு ரொம்பவும் சாது. வாய் திறந்து பேசுவதே யில்லாமல் வெகுளியா யிருப்பாள். நாங்கள் எட்டுப் பேர் சகோதர சகோதரிகள். அதில் நான்தான் மூத்தவள். என்னைத் தவிரப் பாக்கி பெயல்லோரும் செல்வம் கொழித்துக் கொட்டும் நல்ல நிலைமையிலேயே யிருந்தார்கள். நானும் அப்படி யொன்றும் சாப்பாட்டுக்குக் கஷ்டப்படும் நிலைமையில் இருக்கவில்லை. கடவுள் ஏதோ சுமாராகப் படியளந்து கொண்டுதா னிருந்தான். ஆனால் என்னுடன் பிறந்த மற்றவர்களுடன் ஒப்பிட்டுப் பார்க்கும் பொழுது நான் கொஞ்சம் சோடைதானென்று என் அம்மா அடிக்கடி சொல்லுவாள்.

அட கடவுளே! எதையோ சொல்ல வந்தவள் வேறு எதையோ அல்லவோ சொல்லிக் கொண்டு போகிறேன்!......இருங்கள். இதோ விஷயத்துக்கு வந்து விட்டேன்.

சீதாபதி கார் வாங்கின விஷயத்தைச் சொன்னே னில்லையா! அப்பொழுது அவனுடன் நான் ஜபல்பூரில் இருந்தேன். அவன் மனைவி மீனுவுக்குக் கொஞ்சம் உடம்பு சரியில்லாம லிருந்தமையால் என்னை மதுரையிலிருந்து ஒத்தாசைக்குத் தருவித்திருந்தான். நான் வந்து ஒரு மாசம் ஆகியிருந்தது. அப்பொழுதுதான் சீதாபதியின் மோட்டார் வந்து சேர்ந்தது.

பக்கத்திலிருந்த ஊர்களுக்கு அடிக்கடி சுற்றுப் பிரயாணம் போகவேண்டிய வேலை அவனுக்கு. அப்பொழுதெல்லாம் மீனுவையும் எப்பொழுதாவது உடன் அழைத்துச் செல்வான். என்னை அவன் ஒரு நாளும் அழைத்ததும் கிடையாது. நானும் வருகிறேனென்று சொன்னதுமில்லை.

இந்தத் தடவை மோட்டார் வாங்கின மவுஸ் போலிருக்கிறது. தவிரக் கையில் சிறிய குழந்தை யிருந்தது மீனுவுக்கு. அதையும் உத்தேசித்தோ என்னவோ, என்னையும் கூட வருகிறாயா வென்று அரை வாயால் கேட்டு வைத்தான். நானும் சந்தோஷமாகவே ஒப்புக் கொண்டேன். அப்படியாவது நாலு ஊர் பார்க்கலாம் பாருங்கள். அந்த உத்தேசம்தான் எனக்கு. மீனுவுக்கு நான் உடன் வருவதில் பரம சந்தோஷம். குழந்தையைச் சிவனே யென்று என்னிடம் ஒப்புவித்து விட்டுக் கவலை யில்லாமல் அக்கடாவென்று சுற்றித் திரியலாமென்ற எண்ணம் அவளுக்கு. பாவம், சின்னப் பெண்தானே! அப்படித்தா னிருக்கும் என்றெண்ணிக் கொண்டேன்.

ஒரு வழியாக எல்லாருமாக மோட்டாரிலேயே புறப்பட்டோம். வழியில் இரண்டு மூன்று ஊர்களில் ஒவ்வொரு நாள் தங்கிவிட்டுக் கடைசியில் பர்ஹான்பூர் என்னுமிடத்தை யடைந்தோம்.

மிகப் பழைய நகரம் அது. மொகலாயர் சாம்ராஜ்யத்தில் அக்பர் பாதுஷாவினால் கட்டப்பட்டது. இப்பொழுது அதில் வசிப்பவர்கள் அனேகமாக முகம்மதியர்களே.

தபதி நதிக்கரையில் கட்டப் பட்டிருக்கிறது பர்ஹான்பூர் கோட்டை. இப்பொழுது அதில் சிற்சில பாகங்களைத் தவிர மற்றப் பகுதிகள் யாவும் இடிந்தும் சரிந்தும் லிலமாய்க் கிடந்தன. அதில் ஒரு பகுதியைப் பிரயாணிகளும் யாத்ரீகர்களும் தங்குவதற்காக ரெஸ்ட் ஹவுஸ் ஆக மாற்றி யிருக்கிறார்கள். நாங்கள் போனது நல்ல கடுங்கோடையில். வட இந்தியாவுக்கே உரித்தான எரிக்கும் வெய்யிலா யிருந்தபோதிலும் தபதி நதியில் ஜலம் சல சலவென்று அரித்துக் கொண்டோடியது. அதன் இரு கரையிலு மிருந்த வெள்ளரிப் பாத்திகள் சிறிதும் பெரிதுமான பூ, பிஞ்சுகள் நெடுந்தூரம் பரவிப் பசுமையாய்க் காட்சி யளித்தன.

பகலெல்லாம் ரெஸ்ட் ஹவுஸில் தங்கியிருந்து விட்டுச் சாயங்கிரமாக நதியில் குளிக்கக் கிளம்பினோம். அக்பரின் பேகம்கள் அந்தப்புரத்திலிருந்தே ஸ்நானம் செய்யச் செல்வதற்காக இருபுறமும் உயரமான சுவர்களை யெழுப்பி, நடுவில் வழுவழுப்பான சலவைக் கற்களால் கட்டப்பட்ட படிக்கட்டுக்கள் நதியில் ஜலமட்டம் வரையில் சென்றன. எல்லாப் பாகங்களும் லிலமாய் விட்ட போதிலும் இறங்குவதற்கு அதிகச் சிரமமில்லாம லிருந்தது. வெய்யிற் காலமா யிருந்தமையால் படித்துறைகளில் நூற்றுக் கணக்கான ஆண் பெண்களும் சிறுவர் சிறுமியர்களும் ஸ்நானம் செய்து, குதித்துக் கும்மாள மடித்துக்கொண்டு ஜலத்தை வாரி யிறைத்துக் கொண்டிருந்தார்கள். நாங்களும் ஜலத்தி லிறங்கினோம். சீதாபதி நன்றாக நீந்தவானதலால் உற்சாகத்துடன் நீந்தி நதியின் நடுவிலிருந்த மணல் திட்டுக்குப் போய் விட்டான். மீனுவுக்கு அமிழ்ந்து ஸ்நானம் செய்யத் தெரியாது. ஆகவே கரையிலுட்கார்ந்து, கையில் கொண்டு போயிருந்த சொம்பால் ஜலத்தை மொண்டு மொண்டு உடம்பில் கொட்டிக் கொண்டாள். அவளைப் பார்க்கையில் எனக்குச் சிரிப்புச் சிரிப்பாய் வந்தது.

அன்று வைசாக பூர்ணிமை. பூரண மதியின் வெள்ளிக்கோளம் கீழ்த்திசையில் பளபளப்பாய்

எழுந்தது. தபதியின் பிரவாகம் மதியின் வெளிச்சத்தில் மெருகிட்ட வெள்ளித் தகடாய் மின்னிக் கண்ணைப் பறித்தது. நிலவு உதித்ததும் நதியில் ஸ்நானம் செய்வோரின் கூட்டம் இன்னும் அதிகரித்தது. எங்கும் ஒரே இரைச்சலும் சிரிப்பும் ஆரவாரமுமா யிருந்தது.

எங்கள் பக்கத்தில் வந்து நதியி லிறங்கினள் ஒரு பெண். வயது பத்தொன்பதிருக்கும். மின்னல் கொடி யென்பார்களே அந்தமாதிரி யிருந்தாள். அழகென்றாலும் அவ்வளவு அழகு எங்கிருந்து வந்ததோ, எனக்கு ஆச்சரியமா யிருந்தது. கண்ணைப் பறித்துக் கொண்டு போயிற்று. பொன்னை யுருக்கி வார்த்து மெருகிட்டதைப் போன்று அவளுடைய சரீர காந்தி பிரகாசித்தது. தலையில் அடர்ந்து அலையலை யலையாய்ப் படிந்து தண்ணீரிற் புரண்டது அவளுடைய குழற் கற்றை. எல்லாவற்றைக் காட்டிலும் என்னை அதிகமாகக் கவர்ந்தது அவளுடைய பெரிய பெரிய விழிகளில் மிதந்த துணிகரமான பார்வைதான். சிறிய அழகான உதடுகளின் மடிப்புகள் அவள் யாரையும் லக்ஷியம் செய்யாதவளென்பதை உணர்த்தின. துடுக்கும் கர்வமும் காட்டிய அவளுடைய வனப்பு மிகுந்த முகம் என்னை அவள் பால் ஆகர்ஷித்தது. ஒருவரையும் நிமிர்ந்து கூடப் பாராமல் அந்தக் கட்டழகி தன் பாட்டில் மடமடவென்று தண்ணீரில் இறங்கினள்.

நான் மெதுவாக மீனுவை கிள்ளி, "அந்தப் பெண்ணைப் பார்த்தாயா!" என்று காதோடு கேட்டேன். தன் கண்களை அகல விரித்தபடியே வியப்புடன் தலையசைத்தாள் அவள். நான் குனிந்து குழந்தையின் சட்டைக்குச் சோப்பு போடலானேன். என்னை மெதுவாகத் தொட்டாள் மீனு... "என்னடி!" என்று கேட்டேன்.

"அக்கா! அந்தப் பெண்ணைப் பாருங்கள்!" என்றாள் மீனு.

சட்டென்று திரும்பிப் பார்த்தேன். எனக்குச் சொல்ல முடியாத வியப்புண்டாயிற்று. மீன் குஞ்சைப்போல் லாகவமாக நதியில் நீந்திக் கொண்டிருந்த அக்கட்டழகி, நதியின் நடுவிலிருந்த மணல் திட்டில் ஏறி ஏழெட்டு ஆண் பிள்ளைகளுக்கு நடுவே நின்று கொண்டிருந்தாள். வானத்தினின்றும் இழிந்த அப்சரஸ் போன்ற அவளுடைய வனப்பை ஈரம் சொட்டிய அவளது ஆடைகள் இன்னும் எடுத்துக் காட்டின. ஆச்சரியத்துடன் அருவருப்பும் அடைந்த நான் "சீ! என்ன வெட்கங் கெட்ட பொம்மனாட்டி! இவ்வளவு ஆண் பிள்ளைகளுக்கு நடுவில் உடம்பெல்லாம் ஒட்டிக் கிடக்கும் ஈரத் துணியுடன் நின்று சதிர் பண்ணுகிறாளே! நன்றாயிருக்கு!" என்று கோபத்துடன் சொன்னேன். எனக்கு ஆத்திரம் பொங்கியது. அப்புறம் அவளைப் பார்க்கவே பிடிக்கவில்லை. மணல் திட்டிலிருந்து காற்றில் மிதந்து வந்த சிரிப்பும் கொம்மாளமும் எனக்கு காராசமாக இருந்தன. இன்னொரு தரம் திரும்பிப் பார்த்தேன். கும்பலில் நின்று அந்த ரம்பையைப் பார்த்துக் கொண்டிருந்த சீதாபதி நதியில் இறங்கி எங்களை நோக்கி வேகமாய் நீந்தி வந்து கொண்டிருந்தான்.

திரையில் நேர்த்தியான பாரசீகக் கம்பளம் பரப்பிய அழகிய விசாலமான விடுதியொன்று. தந்தத்தில் சித்திர வேலைகள் செய்யப்பட்ட ஆசனமொன்றில் அமர்ந்திருந்தான், மொகலாய சாம்ராஜ்யத்தின் இளவரசனான ஸலீம்.

அவனெதிரே கல்கல்லென்று சதங்கைச் சிலம்புகளொலிக்க, ஆடும் பொற்சித்திரமெனப் பம்பரம் போலச் சுழன்று கொண்டிருந்தாள் கட்டழகி ரூபமதி. செதுக்கி வார்த்த செப்புச் சிலை போல் அழகு கொழித்த அவ்வணங்கு, அகண்ட அச்சாம்ராஜ்யத்திலேயே ஒப்புயர்வற்ற பேரழகியென யாவராலும் ஒருமுகமாக ஒப்புக் கொள்ளப் பட்டவள். நாட்டியத்திலும் சங்கீதத்திலும் அவளுக்கிணை அவளேதான்.

பாதுஷாவின் பேகம்களிடையே ஆரம்பத்தில் அவளுக்கு மிகுந்த செல்வாக்கு இருந்தது. ஆனால் நாளடைவில் அந்தச் செல்வாக்குக் குறைய ஆரம்பித்து விட்டது. அரண்மனை அந்தப் புரத்துக்கு ரூபமதி வரக் கூடாதென்ற ஆக்ஞையும் பிறந்து விட்டது. காரணம் இதுதான்:

ரூபமதியின் கண்பறிக்கும் மின்னல் போன்ற கட்டழகு காண்போரை யெல்லாம் போதையுறச் செய்தது. பெரிய பெரிய வம்சத்து இளைஞர்களெல்லாம் பொன்னும் வெள்ளியும் பூஷணமுமாக அவளுடைய காலடியில் கொட்டி அம் மின்னிடையாளின் ஒரு கடைக்கண் பார்வைக்காகத் தவம் செய்பவராயினர். ஒரு காலத்தில் மொகலாயசாம்ராஜ்யத்தையே தனது காலில் அணிந்திருந்த நூபுர



சப்தத்தினால் போதையுறச் செய்த நாட்டிய ராணி ரத்தினமதியினுடைய ஏகபுத்திரியான அவ்வழகியிடம், தாயின் அழகும் நாட்டியக் கலையும் சங்கீத ஞானமும் குடிகொண்டிருந்தன.

சின்னஞ்சிறுமியா யிருக்கையில், அரண்மனையில் அபிரிமிதமான செல்வாக்குடனிருந்த தன் தாயுடன் அடிக்கடி அந்தப்புரத்துக்கு வருவாள் ரூபமதி. அக்பர் பாதுஷாவின் பேகம்களுக்கு அதிலும் முக்கியமாக அரசி ஜோதி பாய்க்கு அவளைக் கண்டால் ரொம்பவும் பிடிக்கும். தன் மகனை இளவரசன் ஸலீமுடன் அச்சிறுமி குதித்து விளையாடுவதைக் கண்டு ஆனந்திப்பாள் ஜோதி பாய்.

நாளடைவில் பருவமும் பொன்னும் தன் மேனிக்குச் செந்தாமரையின் செப்பையேற்ற, மேகங்களிடையே கண்பறித்து மறையும் மின்னற்கொடி போல் வளர்ந்து விட்டாள் ரூபமதி.

ஆயின் என்ன! அவளுடைய உடல் வனப்பும் காந்தியும் மிருதுத் தன்மையும் ஏற ஏற, அவளுடைய இருதயம் எஃகின் உறுதியையும் பாறையின் கடினத்தையும் பெறலாயிற்று. இளைஞர்களின் நெஞ்சங்களைச் சோதித்து, அவர்கள் தன் பாதத்தில் கொண்டு கொட்டிச் செல்லும் விலைமதிப்பற்ற பூஷணங்களையும் பொன்னையும் அலட்சியமாக ஏற்று, அவர்களைத் தன் மனம் போனபடி ஆட்டி வைத்துப் பைத்தியங்களாய் அடித்துவிடும் அமானுஷ்யமான திறமை அவளிடமிருந்தது. இதில் அவளுக்குச் சொல்ல முடியாத உற்சாகம். பளபளத்த பொன் போன்ற அழகிய நாக சர்ப்பம் தன்னருகே வந்தோரைத் தன்னுடைய மூச்சுக் காற்றினாலேயே கொன்று விடுவது போல், தங்க மேனி மின்னிடையாளான ரூபமதி, தன்னுடைய மைதீட்டிய பெரிய விழிகளின் ஒரே பார்வையினால் எப்படிப்பட்ட உறுதியான ஆண் மகனையும் தன் பால் வசீகரித்து மயக்கும் திறமை பெற்றிருந்தாள். காக்கி எதிர்ப்பட்ட மலர்களைப் போல் அவளிடம் நெஞ்சைப் பறி கொடுத்து, அதை மீட்டும் வகையறியாமல் மனமுறிந்து போய் அகால மரணத்துக்கு ஆளான கட்டிளங் காளைகளின் தொகை நாளுக்கு நாள் கணக்கிலடங்காமற் போயின. சிறு குழந்தைகள் நாள் தோறும் புதுப்புது விளையாட்டுச் சாமான்களைப் பெற்று, அவற்றை உடைத்தெறிவதில் உற்சாகம் காட்டுவது போல், ரூபமதியும் இளைஞர்களின் இருதயங்களுடன் விளையாடி, அவற்றை உடைத்தெறிவதில் ஒரு அலாதியான ஆனந்தம் கொண்டாள்.

தாயாகிய ரத்தினமதி தன் மகளுக்கு எவ்வளவோ புத்தி சொன்னாள். மனித இருதயங்களுடன் நிகழ்த்தும் பயங்கரமான விளையாட்டை விட்டு விடும்படியும் தன் மனசுக்குப் பிரியமான கணவனை மணந்து இன்பமான அமைதியான வாழ்க்கை வாழும்படியும் பல தடவைகள் சொன்னாள். அன்னையின் ஆதரவான பேச்சுக்களொன்றும் ரூபமதியின் செவிகளில் விழவில்லை. அவற்றுக்கெல்லாம் அவள் தன் முல்லைப் பற்களைக் காட்டிக் கிண்கிணிச் சிரிப்பாகிய ஒரே பதிலைத் தான் அளித்து வந்தாள்.

மனம் முறிந்து போய் வியாதியில் படுத்த ரத்தினமதி சீக்கிரமே மரண மடைந்தாள். அதனாலும் அவள் மகளான கட்டழகி மனம் தளரவில்லை. பழைய உற்சாகத்துடனேயே எப்பொழுதும் போல் தன் தொழிலைத் தொடர்ந்து நடத்திக் கொண்டிருந்தாள்.

* * *

இளவரசனான ஸலீம் சில வருடங்களாகப் பர்ஹான்பூரில் இருக்கவில்லை. சக்கரவர்த்தியின் ஆக்ஞையை முன்னிட்டு ஆக்ராவிலேயே யிருந்தான். இதற்கு அவன் தாயான அரசி ஜோதி பாயும் ஒருவிதத்தில் உடந்தையா யிருந்தாள். இயற்கையிலேயே இன்பப் பிரியனான ஸலீம், காமினியான ரூபமதியைச் சந்தித்தால், அவளுடைய பருவம் செழித்து, வனப்புச் சொட்டும் பேரழகுக்கு அடிமையாய் விடுவானென்ற காரணத்தால் கூடியவரையில் அவன் தன் பால்யத் தோழியைக் காணாமலிருக்கட்டும் என்ற எண்ணத்துடன், அவன் அன்னை இளவரசனை ஆக்ராவிலேயே தடுத்து நிறுத்தி யிருந்தாள். ஆயின், விதியும் ரூபமதியின் கட்டழகும் ஒன்று கூடி, அரசியின் எண்ணங்களைத் தகர்த்து விட்டன.

* * *

“ரூபா!”......என்றழைத்த ஸலீம் மெதுவாகத் தன் இருக்கையை விட்டெழுந்தான். ஆட்டம் சடக்கென்று நின்றது. அன்னம் போல் அசைந்து அழகு நடை நடந்து மின்னிடையாள், பாதத்திலணிந்த நூபுரங்கள் கலீர் கலீரென்று சப்திக்க, கைகளில் அடுக்கியிருந்த ரத்தின கங்கணங்கள் இனிமையுடன் குலுங்கத் தன்னுடைய மயக்கும் விழிகளை மலர்த்தி இளவரசனை நோக்கி ஒரு புன்னகையை யுதிர்த்தாள்.

“ரூபா! நீதான் என்ன அழகு! உன்னைப் பற்றி நான் கேள்வியுற்ற கதைகளெல்லாம் வாஸ்தவமா யிருக்க முடியுமா! இவ்வளவு கட்டழகியான நீ, பாறை போன்ற கல் நெஞ்சினளென்று எல்லாரும் சொல்லுகிறார்களே! அது நிஜம்தானா!”

‘களுக்’கென்று நகைத்தாள் கட்டழகி. கிண்கிணி நாதம் போன்ற அச்சிரிப்பில்தான் எவ்வளவு ஏளனம் பொதிந்து கிடந்தது!

“அப்படியா! என்னைப் பற்றி அப்படியா பேசிக் கொள்கிறார்கள்!” ஒன்று மறியாத சிறு



குழந்தையைப் போல் இக் கேள்வியைக் கேட்டாள் ரூபமதி. அதே சமயத்தில் அவளுடைய பளபளத்த வேல் விழிகள் வாலிபனுன ஸலீமின் முகத்தை ஊடுருவி நோக்கின.

"பேகம் ஸாஹிபா தங்களை ஆக்ராவிலேயே யிருக்கும்படி உத்தரவிட்டிருக்கும்போது தாங்கள் இப்படித் திருட்டுத்தனமாகப் பர்ஹான்பூருக்கு ஏன் வந்தீர்கள்!" என்று கேட்டாள் ரூபமதி.

"ரூபா! உன்னை நான் காணவேண்டு மென்று எவ்வளவு காலாகத் துடித்துக் கொண்டிருக் கிறேன், தெரியுமா! ரூபமதி! நீ என்னை மணந்து கொண்டுவிடு. இந்த அகண்ட மொகலாய சாம் ராஜ்யத்துக்கே உன்னை அதிபதியாக்கி விடு கிறேன்" என்று கைகளை அகல விரித்தபடியே அம்மின்னற் கொடியாளை மீண்டும் கரைகாணுக் காதலுடன் நெருங்கினுன் ஸலீம்.

வெள்ளிமணியின் இன்பநாதமெனக் கலகல வென்று நகைத்த கட்டழகி, புள்ளி மானைப்போல் துள்ளிக் குதித்து, இளவரசனின் கையில் பிடி படாமல் விலகிப் பின் வாங்கினுள். "யார்! நானு மொகலாய சாம்ராஜ்யத்துக்கு அதிபதி! அந்தப் பதவிக்கு நான் ஆசைப்படவில்லை! உங்களை மணந்து அடிமை வாழ்வு வாழவும் நான் விரும்ப வில்லை. இப்படிச் சுதந்திரமாக வாழவே எனக்குப் பிரியம்!" என்று கலீர் கலீரென்று நகைத்த படியே கல்கல்லென்று சதங்கை யொலிக்க மின்னற் கொடியென ஆடலாளுள் பாவிகை.

"ரூபா! ரூபா!" என்று கூவினுன் இளவரசன்.

"ரூபா!...ரூபா!" என்று எதிரொலித்தன அவ்விடுதியின் சுவர்கள்.

படபட வென்று ஏதோ முறியும் சப்தம். அதைத் தொடர்ந்து சதக்கென்று ஏதோ தண் ணீரில் விழுந்த அரவம்...எங்கும் ஒரே இருள் மயம். மடக் மடக்கென்று தண்ணீரைக் குடித்த படியே ஜலத்தில் மூழ்கினேன் நான். மணல் திட்டில் நின்று கொண்டிருந்த ரூபமதி ஈரம் சொட்டும் உடைகளுடன் என்னை நதி ஜலத்தி லிருந்து இழுத்தாள். ஓ! கடவுளே! இதென்ன பேய்க் கூத்து!

* * *

"அக்கா!...என்ன உனக்கு! ஓரேயடியாய்ப் பயமுறுத்தி விட்டாயே!" என்று கேட்டாள் கட்டிலுக்குப் பக்கத்தில் உட்கார்ந்திருந்த சீதா பதி. ரெஸ்ட் ஹவுஸுக்கு வெளியே, மைதா னத்தில், பால் நிலவின் ஒளியிற் படுத்திருந்தேன். நான் மெல்ல எழுந்து உட்கார்ந்தேன். ஒரு நிமி ஷம் யோசித்தேன்.

ஆம்...அப்படித் தானிருக்கவேண்டும்...சீச்சீ!... என்ன வெட்கக் கேடு! நதிக்கரையிலா மயங்கி விழவேண்டும்! அப்படியானுல் அந்தப் பெண்! அவள்தானு ரூபமதி! என்னவோ யார் கண் டார்கள்! எனக்கு ஒரே குழப்பமா யிருந்தது. ஹூம்...கடைசியில் எல்லாம் கனவுதான் போலி ருக்கிறது; நல்ல கனவு; நல்ல ரூபமதி!

"இப்பொழுது தேவலையா அக்கா!" என்று கவலையோடு விசாரித்தாள் எதிரே வந்து நின்ற மீனு.

"என்னவோ மயக்கமா யிருந்தது; இந்த கடும் வெய்யில் தாங்கவில்லை போலிருக்கிறது!" என்று சிரித்துக் கொண்டே அவள் கையிலிருந்த குழந் தையை வாங்கிக் கொண்டேன் நான்.

---

## அவன் கவலை!





# நன்கு சமநிலையானதும் எளிதானதுமான சிசு உணவு

தாய்ப்பாலில் அடங்கியுள்ள ஒவ்வொரு பொருளும் சரியான அளவில் ஒரே மாதிரியாக க்ளாக்ஸோ மில்க் புட்டில் சேர்க்கப் பட்டிருக்கிறது. க்ளாக்ஸோ மில்க் புட் ரத்தசோகை கணைச்சூடு (ரிக்கெட்ஸ்) இவற்றினின்றும் பாதுகாக்க வேண்டிய இரும்புச் சத்தும், வைட்டமின் 'டி' யும் சேர்க்கப்பட்டுள்ளது. க்ளாக்ஸோவின் ப்ரத்யேக முறைப்படி பாலை நன்கு பதம் செய்திருப்பதால் குழந்தைகளால் எளிதில் ஜீரணிக்கப் படுகிறது. க்ளாக்ஸோ, ஒரே நிமிஷத்தில் வெகு எளிதில் தயாரிக்கக் கூடியது. டப்பாவில் எப்பொழுதும் பரிசுத்தமான நிலையில் இருக்கும் க்ளாக்ஸோ எச்சமயத்திலும் தயாராய் இருக்கிறது.

குழந்தைகளுக்கேற்ற
பூர்ணமான பால் ஆகாரம்.







க்ளாக்ஸோ லேபரட்டரீஸ் (இந்தியா) லிமிடெட்.
பம்பாய்—கல்கத்தா—மதராஸ்.




சௌமித்திரி

திருநெல்வேலி,
15—6—53

அன்புள்ள மாணிக்கத்திற்கு,

இங்கு யாவரும் நலம். நீயும் அவ்வாறே இருப்பாய் என்று நம்புகிறேன். பி. ஏ. பரீட்சை முடிவுகள் வருகிற 18ம் தேதி வெளியிடப்படும் என்று பத்திரிகைகளில் செய்தி வந்திருப்பதைப் பார்த்திருப்பாய் என்று நினைக்கிறேன். அங்கு சென்னையில், 18ம் தேதி காலையிலேயே பத்திரிகைகளுக்குப் பரீட்சை முடிவைக் கொடுத்து விடுவார்களாம். உனக்குத் தெரிந்தவர் ஒருவர் ஏதோ ஒரு பத்திரிகையில் இருப்பதாகச் சொன்னாயல்லவா? தயவு செய்து அவர் மூலமாக என் ரிஸல்டை அறிந்து உடனே தந்தி கொடுக்கவும். பாஸாகி யிருந்தாலும் சரி, பெயிலாகியிருந்தாலும் சரி, அதைப் பற்றி நீ கவலைப்பட வேண்டாம். இங்கு 19ம் தேதிதான் பத்திரிகை கிடைக்கும். என் ரிஜிஸ்தர் நம்பர் 1904. மறந்து விடாதே.

உன் அன்பன்,
ரத்தினம்.

இக்கடிதத்தைப் படித்து முடித்த மாணிக்கம் இலேசாக நகைத்துக் கொண்டான். "பரீட்சை முடிந்து இரண்டு மாதங்கள் பொறுத்திருந்தவன், ஒரு நாள் அதிகமாகக் காத்திருக்க முடியாதா! என்னே மனிதனுடைய மனப்பான்மை!" என்று எண்ணி மனத்துள் வியந்தான்.

அன்று பதினெட்டாம் தேதி. ஆபீஸிற்கு அரைநாள் லீவ் எழுதிப் போட்டுவிட்டு மாணிக்கம் பத்திரிகாலயத்தை நோக்கிப் புறப்பட்டான். கொஞ்சதூரம் சென்றதும் ரத்தினத்தின் 'நம்பர்' என்ன என்பதை ஞாபகப்படுத்திக் கொண்டான். சரியாக நினைவிற்கு வரவில்லை. ஆயிரத்து நான்கோ, ஐந்தோ என்று நம்பிய குரலில் கூறியது அவன் மூளை. தன் ஞாபக சக்தியைக் கடிந்து கொண்டு மறுபடியும் அறைக்குத் திரும்பி ரத்தினம் எழுதிய கடிதத்தை எடுத்துப் பார்த்தான். 1904 என்று எழுதியிருந்தது. அக்கடிதத்தை மடித்துப் பையில் போட்டுக் கொண்டு மறுபடியும் புறப்பட்டான் மாணிக்கம்.

ஹோட்டல் ஒன்றில் காப்பி சாப்பிட்டுவிட்டு, பஸ் ஸ்டாப்பில் அரை மணி நேரம் தவம் கிடந்து, முடிவில் ஒரு பஸ்ஸைப் பிடித்து அந்தப் பத்திரிகாலயத்தை அவன் அடைவதற்குப் பத்தரை மணி ஆகிவிட்டது.

அங்கே காரியாலயத்திற்கு முன் மாணவர்கள் ஏகமாகக் கூடியிருந்தனர். 'விடு விடு' என்று அந்தக் கூட்டத்தில் நுழைந்த மாணிக்கத்தைத் தடுத்து நிறுத்தினான் வாயிற் காப்போன்.

"ஸார்! யாரையும் உள்ளே விடக்கூடாது என்பது ஆசிரியரின் உத்தரவு!" என்று கண்டிப்பாகக் கூறினான் அவன்.

"நான் உதவி ஆசிரியர் சுந்தரத்தைப் பார்க்கப் போகிறேன். வழியை விடப்பா!" என்றான் மாணிக்கம்.

"யாரையும் இப்பொழுது விடமுடியாது,ஸார்!"

"இப்போ நீ வழியை விடுகிறாயா, இல்லையா!" என்று கோபத்துடன் கேட்டான் மாணிக்கம்.

"ஆசிரியரின் உத்தரவை நான் மீற முடியுமா, ஸார்?" என்று சற்றும் அசைந்து கொடுக்காமல் கேட்டான் அந்தச் சேவகன்.

பல்லைக் கடித்துக் கொண்டு சற்று நேரம் அங்கேயே நின்றான் மாணிக்கம். அந்தச் சமயத்தில் உதவி ஆசிரியர் சுந்தரமே தற்செயலாக வெளியே வந்தார். "அடேடே! மாணிக்கமா! ஏன் இங்கேயே நிற்கிறாய், உள்ளே வராமல்?" என்று கேட்டு அவனை வரவேற்றார்.

அந்த வாயிற்காப்போனை ஒரு வெற்றிப் புன்னகையுடன் பார்த்துவிட்டுத் தன் நண்பருடன் உள்ளே சென்றான் மாணிக்கம்.

"இவருக்கு ஒரு சட்டம், மற்றவர்களுக்கு ஒரு சட்டம். அப்படி யென்றால் எல்லோரையும் உள்ளே விட்டுவிடலாமே!" என்று முணுமுணுத்தான், கோபமடைந்த சேவகன்.

'கம்போஸ்' செய்கிற இடத்திற்கே மாணிக்கத்தை அழைத்துச் சென்று விட்டார் சுந்தரம். "சீக்கிரம் பார்க்க வேண்டியதைப் பார்த்து விட்டுக் கொடு!" என்று ஒரு நீண்ட காகிதத்தைக் கொடுத்தார். ரத்தினத்தின் எண்ணை ஆவலுடன் அதில் தேடிய மாணிக்கம் முதல் இரண்டு பாகங்களில் அதைக் கண்டு பிடித்து விட்டான். மூன்றாம் பாகத்தில் அவன் எண் இல்லை. உதட்டைப் பிதுக்கிக் கொண்டு, ஏமாற்றத்துடன் அந்தக் காகிதத்தைக் காத்துக் கொண்டிருந்த கம்பாஸிடரிடம் கொடுத்தான் மாணிக்கம்.

"என்னப்பா! உன் நண்பன் எந்த வகுப்பில் தேறி இருக்கிறான்?" என்று கேட்டார் அருகில் நின்றுகொண்டிருந்த உதவி ஆசிரியர் சுந்தரம்.

"மூன்றாம் பாகத்தில் 'கோட்' அடித்து விட்டான்!" என்று மறுமொழி அளித்துவிட்டு அங்கிருந்து புறப்பட்டான் மாணிக்கம்.

வாசலை விட்டிறங்கியதும் அவனைப் பல மாணவர்கள் சூழ்ந்து கொண்டனர். "ஏன் ஸார், கம்போஸ் ஆகிவிட்டதா?" "ரிஸல்டைப் பார்த்தீர்களா?" என்று தமக்கு ஒரு கேள்வியைக் கேட்டு அவனைத் திக்குமுக்காடச் செய்து விட்டார்கள் அவர்கள். "ஏன், ஸார்! 1001 என்ற நம்பர் உங்கள் கண்ணிலே பட்டதோ?" என்று அர்த்தமில்லாமல் கேட்டான் ஒரு மாணவன். அவர்களிடமிருந்து எப்படியோ தப்பித் தந்தி ஆபீஸை நோக்கி நடந்தான் மாணிக்கம்.

"பரீட்சையில் தேறவில்லை என்று எப்படித் தந்தி அடிப்பது! ரத்தினம் மிகவும் வருத்தப் படுவானே! நாளைப் பத்திரிகையைப் பார்த்துத் தெரிந்து கொள்ளட்டுமே!" என்று ஒரு தடவை கூறியது அவன் மனம். ஆனால் ரத்தினம் எழுதியிருந்த வார்த்தைகள் அவன் நினைவுக்கு வந்தன. "பாஸாகியிருந்தாலும் சரி, பெயிலாகியிருந்தாலும் சரி, அதைப்பற்றி நீ சிறிதும் கவலைப் படவேண்டாம்......"

'சரி, அவனே இவ்வளவு தூரம் வற்புறுத்திக் கேட்டிருக்கும் பொழுது நாம் நம் கடமையைச்

செய்யாமலிருக்கக் கூடாது' என்று மாணிக்கம் தீர்மானித்தான். உடனே "மூன்றாவது பாகத்தில் மட்டும் நீ தேறவில்லை. வருத்தப்படவேண்டாம்" என்று ரத்தினத்திற்குத் தந்தி கொடுத்தான்.

அன்று சாயந்திரம் காரியாலயத்திலிருந்து வீடு திரும்பிக் கொண்டிருந்த மாணிக்கம், யாரோ தன் பெயரைச் சொல்லிக் கூப்பிடுவதைக் கேட்டுத் திரும்பிப் பார்த்தான். திருநெல்வேலியில் அவன் வீட்டிற்கு அடுத்த வீட்டில் குடியிருந்த மணி அவனை நோக்கி வந்து கொண்டிருந்தான். "யார், மணியா! இங்கே எப்போப்பா வந்தே!" என வியப்புடன் கேட்டான் மாணிக்கம்.

"எங்கள் அக்காளைப் பார்க்க வந்தேன். இன்றைக்கு எக்ஸ்பிரஸில் ஊருக்குப் போகிறேன். உனக்கு ஒரு விஷயம் தெரியுமா! நம் ரத்தினம் பரீட்சையில் பாஸ் செய்து விட்டான். பேப்பரைப்பார்த்தாயா!" என்று சொல்லிக் கொண்டே தன் கையிலிருந்த பத்திரிகையை மாணிக்கத்தினிடம் நீட்டினான் மணி.

"என்ன! ரத்தினம் பாஸ் செய்து விட்டானா!" என்று திடுக்கிட்டு வினவிய அவன் வேகமாக மூன்றும் பாகத்தில் கண்களைச் செலுத்தினான். ஆனால் அதில் ரத்தினத்தின் நம்பர் இல்லை.

"என்னடா 'கப்ஸா' அடிக்கிறே! மூன்றும் பாகத்தில் தான் அவன் நம்பர் இல்லையே! இங்கே பார், எந்த வகுப்பிலும் அவன் நம்பர் இல்லை" என்று அந்த இடத்தைக் காட்டினான் மாணிக்கம்.



"அட, மண்டு! 'எக்கனமிக்ஸ்' மெயினிலே போய்ப் பார்க்கிறாயே! ரத்தினம் 'ஸ்டாடிஸ்டிக்ஸ்' மெயினல்லவா எடுத்துக் கொண்டிருக்கிறான்! செகண்ட் கிளாஸில் அவன் நம்பர் இருக்கிறது, பார்!" என்று கூறி அந்த இடத்தைச் சுட்டிக் காட்டினான் மணி.

"என்ன! ரத்தினம் ஸ்டாடிஸ்டிக்ஸையா எடுத்துக் கொண்டிருக்கிறான்!" என்று திகைப்புடன் வினவிய மாணிக்கம், "மணி! ஒரு பெரிய தவறு செய்து விட்டேனடா! ரத்தினம் 'எக்கனமிக்ஸை' எடுத்துக் கொண்டிருப்பான் என்று நினைத்து அந்தப் பகுதியில் அவன் நம்பரைத் தேடிப்பார்த்தேன். அதில் இல்லாமற் போகவே, "நீ பரீட்சையில் தேறவில்லை!" என்று ரத்தினத்திற்குத் தந்தி அடித்து விட்டேன். நீ ஊருக்குச் சென்றதும் தவறுதலாகத் தந்தி அடித்ததற்கு நான் மிகவும் வருந்துவதாக ரத்தினத்திடம் சொல்லிவிடு. மறந்துவிடாதே!" என்று மணியை வேண்டினான் மாணிக்கம்.

"சரி, நான் வருகிறேன்! ரயிலுக்கு நேரமாகி விட்டது!" என்று கூறி அவனிடமிருந்து விடை பெற்றுக் கொண்டு புறப்பட்டான் மணி.

* * *

மறு நாள் காலை பத்திரிகை விற்கும் பையன் எறிந்து விட்டுச் சென்ற செய்தித்தாளைக் கையில் எடுத்துக் கொண்டு முதல் பக்கத்தில் பார்வையைச் செலுத்திய மாணிக்கம் கொட்டை எழுத்துக்களில் பிரசுரமாயிருந்த செய்தியைக் கண்டு திடுக்கிட்டான். அந்தச் செய்தி இதுதான்:

### மாடியிலிருந்து விழுந்து வாலிபன் மரணம்

திருநெல்வேலி 18உ.

இங்கு....தெருவிலிருக்கும் ரத்தினம் என்கிற வாலிபன் இன்று பகல் அவன் வீட்டுமேல் மாடியினின்றும் விழுந்து கோர மரணமடைந்தான். தற்கொலையா அல்லது தற்செயலாக ஏற்பட்ட விபத்தா என்று தெரியவில்லை. இறந்தவன் பரீட்சையில் தேறவில்லை என்று சொல்லப்படுகிறது. போலீஸார் புலன் விசாரித்து வருகின்றனர்."

இந்தச் செய்தியைப் படித்ததும் மின்சாரம் பாய்ச்சப் பட்டவனைப் போலானான் மாணிக்கம்.

"ரத்தினம் தற்கொலை செய்து



கொண்டு விட்டானா! பரீட்சையில் தேறவில்லை என்பதை அறிந்ததும் அவசரப்பட்டுத் தற்கொலை செய்து கொண்டு விட்டானா!'' இதை நினைத்து மாணிக்கம் மிகவும் மனம் வருந்தினான்.

"ரத்தினம் தற்கொலை செய்து கொள்வதற்குக் காரணம் நீதான்! உன் தவறான செய்தியல்லவா அவன் உயிருக்கு யமனாகச் சென்றுவிட்டது! உன் அஜாக்கிரதையினாலல்லவா பரீட்சையில் தேறிய ரத்தினம் தற்கொலை செய்து கொண்டான்! அட, பாவி! பரீட்சையில் நிச்சயமாகத் தேறிவிடுவோம் என்று எவ்வளவோ நம்பிக்கை வைத்திருந்த ஒரு பையனைக் கொன்று விட்டாயே! கொலை பாதகா!'' என்று அவன் மனச்சாட்சி கோரமாக ஓலமிட்டது.

மாணிக்கத்தின் உடல் நடுங்கியது. பச்சாத்தாபத்தினால் அவன் கண்கள் நீரைப் பெருக்கின; அவன் உள்ளம் உருகிப் பாகாய்த் தவித்தது.

"கொலைபாதகா!'' என்ற கோரமான ஒலி அவன் காதுகளில் இடைவிடாமல் ஒலித்துக் கொண்டே இருந்தது. செயலற்று ஸ்தம்பித்துப் போய் அங்கேயே உட்கார்ந்து விட்டான்.

அவன் கண்முன் ரத்தினத்தின் உருவம் வந்து நின்றது. "மாணிக்கம்! உன் தவறான செய்தியினால் என்னைக் கொன்று விட்டாயே! நான் இரண்டாம் வகுப்பில் தேறி யிருக்கிறேனே! நான் சாக வேண்டும் என்றா இப்படித் தந்தி கொடுத்தாய்!'' என்று கண்ணீர் உகுத்துக் கதறியது.

"ஐயோ, ரத்தினம்! நான் வேண்டும் என்று செய்யவில்லை. நீ 'எக்ஸாமினேஷன்'தான் எடுத்துக் கொண்டிருப்பாய் என்று நினைத்தேன். அந்தப் பாகத்தில் உன் நம்பர் இல்லாததால் அதில் நீ தேறவில்லை என்று தந்தி அடித்தேன். என்னை மன்னித்துவிடு, ரத்தினம்!'' என்று உரக்கக் கதறினான் மாணிக்கம்.

ரத்தினத்தின் பெற்றோரின் உருவங்கள் அடுத்த படியாக அவன் கண் முன் வந்து நின்றன.

"அட, பாவி! எங்கள் பிள்ளையைக் கொன்று விட்டாயே! பாஸான பையனுக்குப் பெயிலாகி விட்டாய் என்று தந்தி யடித்து அவன் உள்ளத்தை உடைத்து விட்டாயே! எத்தனை நாளாய் இதற்காகக் காத்திருந்தாய்! நீ நன்றாய் வாழ்ந்து விடுவாயா! உன்னைக் கடவுள் சும்மா விடுவாரா! இந்தப் பாவத்திற்குத் தண்டனை யடையாமல் போய்விடுவாயா!'' என்ற பரிதாபக் குரல் அவன் இருதயத்தைப் பிளந்தது.

"ஆம், இந்தப் பாவத்திற்கு நான் தண்டனை அடையத்தான் வேண்டும்!'' என்று அவன் உதடுகள் முணு முணுத்தன. ஏதோ ஒரு தீர்மானத்திற்கு வந்தவனைப் போல் நாற்காலியில் போய் உட்கார்ந்து வேகமாக இரண்டு கடிதங்களை எழுதினான். ஒன்றைப் போலீஸ் இன்ஸ்பெக்டருக்கும், இன்னொன்றை ரத்தினத்தின் தந்தைக்கும் விலாசமிட்டான்.

போலீஸ் இன்ஸ்பெக்டருக்கு அவன் எழுதிய கடிதம் வருமாறு:—

"போலீஸ் இன்ஸ்பெக்டர் அவர்களுக்கு,

நீங்கள் இந்தக் கடிதத்தைப் படிக்கும் பொழுது நான் பிணமாகத் தொங்கிக் கொண்டிருப்பேன். நான் தற்கொலை செய்து கொண்டு விட்டேன். ஆம் தற்கொலைதான்! திருநெல்வேலியில் மாடியிலிருந்து விழுந்து வாலிபன் ஒருவன் மரணமடைந்ததைப் பத்திரிகையின் வாயிலாக அறிந்திருப்பீர்கள். ஆனந்த வாழ்க்கை நடத்தியிருக்க வேண்டிய அந்த அப்பாவி வாலிபன் இறப்பதற்கு நான்தான் காரணம். பரீட்சையில் தேறியிருக்கும் அவனுக்குத் 'தேறவில்லை' என்ற தவறான தந்தியை அடித்து அவனைத் தற்கொலை செய்து கொள்ளத் தூண்டினேன். அதற்குப் பிராயச்சித்தமாகவே என் உயிரையும் போக்கிக் கொண்டேன்.

மாணிக்கம்''

ரத்தினத்தின் தந்தைக்கு எழுதிய கடிதம்:—

"மதிப்புமிக்க அண்ணா அவர்களுக்கு,

ரத்தினத்தைத் தற்கொலை செய்து கொள்ளத் தூண்டியது என் தந்தி என்பதை அறிந்து நீங்கள் என்னைச் சபித்துக் கொண்டிருப்பீர்கள். என்மீது நீங்கள் வழக்குத் தொடர்ந்தாலும் தொடரலாம். ஆனால் உங்களுக்கு அந்தச் சிரமத்தைக் கொடுக்க நான் விரும்பவில்லை. உங்கள் அருமைப் பிள்ளையின் உயிருக்கு உலைவைத்த பாவி, நான்! இதோ அவனைத் தேடிச் செல்கிறேன். ஆவி உலகில் அவனைச் சந்தித்து அவனிடம் மன்றாடி மன்னிப்பைக் கேட்கப் போகிறேன். நீங்களும் என்னை மன்னித்து விடுங்கள்.

மாணிக்கம்.''



ரத்தினத்தின் தங்கைக்கு எழுதிய கடிதத்தைத் தபாலில் சேர்ப்பித்து விட்டு வந்தான் மாணிக்கம். பித்தம் பிடித்தவனைப் போல, வாரி விடப்படாத தலையுடன் வேகமாக வெளியே போய் விட்டு வீட்டினுள் நுழைந்த அவனை ஆச்சரியத்துடன் பார்த்தார் அவனுடைய வீட்டுக்காரர்.

"எங்கே அப்பா போய்விட்டு வருகிறாய்!" என்று கேட்டார் வியப்புடன்.

"எங்கேயுமில்லை. சும்மாதான் வெளியே போனேன்" என்று தட்டுத் தடுமாறிக் கூறி விட்டுத் தன் அறைக்குள் சென்றான் மாணிக்கம்.

அவனுடைய சட்டைப் பையில் போலீஸ் இன்ஸ்பெக்டருக்கு அவன் எழுதிய கடிதம் இருந்தது. துணிகளைக் காயப் போடுவதற்கென்று கட்டியிருந்த கயிற்றை அறுத்து, உத்திரத்திலிருந்த கொக்கியில் மாட்டினான். பிறகு, நாற்காலியின் மேல் ஏறி அந்தக் கயிற்றைத் தன் கழுத்தில் மாட்டிக் கொண்டான். எல்லாம் தயார். இன்னும் சில வினாடிகளில் அவன் உயிர் இவ்வுலகத்தை விட்டுச் சென்று விடும், ரத்தினத்தைச் சந்திக்க. கண்களை மூடிக் கொண்டு கடைசிப் பிரார்த்தனையிலாழ்ந்தான் மாணிக்கம். "கடவுளே! நான் செய்த பாபத்திற்குப் பிராயச் சித்தமாக என் உயிரை ஏற்றுக் கொண்டு என்னை மன்னித்து விடு!" என்று அவன் உதடுகள் முணுமுணுத்தன.

அந்தச் சமயத்தில் 'படபட' வென்று யாரோ அறைக் கதவை இடிக்கும் சப்தம் கேட்டது. மாணிக்கம் திடுக்கிட்டான். கதவை இடிப்பது யாராக இருக்கலாம் என்று அவனுக்குப் புரியவில்லை.

"யாராக வேண்டுமானாலும் இருக்கட்டும், என்னைத் தடுக்க முடியாது. நான் சாகத்தான் போகிறேன்" என்ற உறுதியுடன் தன் இரு கண்களையும் இறுக மூடிக் கொண்டான்.

* * *

அதே சமயம் அரை குறையாகத் தாழ்ப்பாள் போடப் பட்டிருந்த அறைக் கதவு 'மட' ரென்ற சத்தத்துடன் திறந்து கொண்டது.



"ஒரு பத்து ரூபாய் நோட்டு கீழே கிடந்து அகப்பட்டிருக்கிறது. அதன் சொந்தக்காரர் 'க்யூ' வரிசையில் வந்து வாங்கிப் போகவும்."

வேகமாக உள்ளே நுழைந்த ரத்தினத்தைக் கண்டதும் அதிர்ச்சியடைந்து விட்டான் மாணிக்கம். மாடியிலிருந்து விழுந்து மரணமடைந்த ரத்தினம் எப்படி உயிருடன் தன் அறைக்கு வர முடிந்தது என்று அவனுக்கு விளங்கவில்லை. ஒரு வேளை அவனுடைய ஆவியாக இருக்கலாமோ என்று நினைத்த மாணிக்கத்தின் உடல் நடுங்கியது. திகிலுடன் ரத்தினத்தை உற்று நோக்கினான்.

தன் நண்பன் மாணிக்கத்தின் இந்தக் கோலத்தைக் கண்ட ரத்தினம் துணுக்குற்றான்.

"அட, பாவி! உனக்கு ஏனடா இந்த அல்ப புத்தி! தற்கொலை செய்து கொள்ளும்படி இப்பொழுது என்னடா ஏற்பட்டு விட்டது! இறங்கடா, கீழே!" என்று கோபத்துடன் அதட்டினான் ரத்தினம்.

கழுத்தை நெரிக்கக் காத்திருந்த கயிற்றை அகற்றிவிட்டுப் பிரமிப்புடன் நாற்காலியை விட்டு மெதுவாகக் கீழே இறங்கினான் மாணிக்கம்.

"ரத்தினம்! நீ உயிருடன்தானே இருக்கிறாய்! நீ இறந்து விட்டதாக அல்லவா பத்திரிகையில் போட்டிருந்தார்கள்!" என்று கண்களில் வியப்புத் தாண்டவமாடக் கேட்டான்.

"எங்கள் தெருவில் நான் ஒருவன்தான் ரத்தினம் என்பது உன் எண்ணமா! போடா, முட்டாள்! அது சரி! அந்தப் பத்திரிகைச் செய்திக்கும் உன் தற்கொலை முயற்சிக்கும் என்ன சம்பந்தம்!" என்று அதட்டினான் ரத்தினம்.

"ரத்தினம்! நான் கொடுத்த தவறான தந்தியைப் படித்து மனம் உடைந்து நீ தற்கொலை செய்து கொண்டு விட்டாய் என்று எண்ணினேன். நான் செய்த இந்தப் பயங்கரமான தவறுக்குப் பிராயச் சித்தமாக என் உயிரைப் போக்கிக்கொள்ளத் தீர்மானித்தேன்!" என்றான் மாணிக்கம்.

"மாணிக்கம்! நீ இன்னொரு பெரிய தவறைச் செய்து விட்டாய். பரீட்சையில் தேறாததற்காக நான் தற்கொலை செய்து கொள்வேனா என்பதைக் கொஞ்சமாவது சிந்தித்தாயா! என்னை அத்தகைய கோழை என்று நினைத்து விட்டாய்! இந்த மாபெரும் தவறுக்காக நீ உன் உயிரைத் தியாகம் செய்தாலும் போதாது. அதை விடக் கடுமையான தண்டனையை நீ அனுபவிக்க வேண்டும்" என்றான் ரத்தினம் கடுமையான குரலில்.

"என்ன! உயிரைப் போக்கிக்கொள்வதை விடக் கடுமையான தண்டனையை நான் அனுபவிக்க வேண்டுமா! உயிரைப் போக்கிக் கொள்வதை விடப் பெரிய தண்டனை இந்த உலகத்தில் இருக்கிறதா!" என்று வினவினான் மாணிக்கம்.

"இருக்கிறது; பெரிய தண்டனை இருக்கிறது அதைக் கேட்டால் நீ ஆச்சரியப்படுவாய். அந்தத் தண்டனை என்ன, தெரியுமா! என் *தங்கையைக் கல்யாணம் செய்து கொண்டு, அவள் கேட்பவைகளை எல்லாம் வாங்கிக் கொடுத்து, வாழ் நாள் முழுவதும் அவளைத் திருப்திப் படுத்த நீ படாதபாடு படுவதைவிட உனக்கு வேறு கடுமையான தண்டனை எதுவும் இருக்க முடியாது!" என்று கூறிய ரத்தினத்தின் இதழ்களில் புன்னகை அரும்பியது.

தன் கழுத்தில் கயிற்றை இறுக்கிக் கொண்டு மறு உலகிற்குச் செல்ல முயன்ற மாணிக்கம் அதற்கடுத்த வாரம் ரத்தினத்தின் தங்கையின் கழுத்தில் தான் செய்த தவறுக்குப் பிராயச்சித்தமாக மஞ்சள் கயிற்றைப் பூட்டி விட்டு இன்ப லோகத்திற்குப் புறப்பட்டு விட்டான்!

# 14 நாட்களில் மக்ளீன்ஸ் உதவியால் அதிக வெண்மையான பற்கள்



இந்த 14-தின பரீக்ஷையை செய்து பாருங்கள்

மக்ளீன்ஸ் பெராக்ஸைட் பற்பசை எவ்விதம் பற்களை அதிக வெண்மையாக்குகிறது என்பதை, நீங்களும் உபயோகித்து உணருங்கள். இதை உறுதியாகக் கொள்ளுங்கள்—பிரதிதினமும்—தினசரி இருமுறை உங்கள் பற்களை நன்றாக மக்ளீன் செய்யுங்கள். ஆரம்பமுதலே, மக்ளீனிலுள்ள விசேஷ பொருள்கள், மிருதுவாகவும், அபாயமின்றியும், உங்கள் பற்களில் உள்ள அவலட்சணமான கறைகளை போக்கி, அவைகள் இயற்கையான ஒளி வீசச்செய்வதைக் காண்பீர். 14 நாட்களுக்குள் — அல்லது அதற்கும் குன்றவாகவே கூட—நீங்கள் பெருமைப் படக்கூடிய பற்களை அடைவீர்கள் — மக்ளீன் வெண்மையான பற்கள், ஆரோக்கியமான பற்கள்.

**க்லோரோபில் சேர்த்ததும் கிடைக்கும்.**

பற்களை வெண்மையாக்குவதில் உலகில் மிகச் சிறந்த மக்ளீன்ஸ் பெராக்ஸைட் பற்பசை — இப்பொழுது அளிக்கும் துர்க்கந்த நாசினியான க்லோரோபில் சேர்த்தும் கிடைக்கும்.




MTY. 28-TAM.

## மக்ளீன்ஸ்

பெராக்ஸைட் பற்பசை

*பற்களை அதிக வெண்மையாக்குகிறது*

வியாபார விவரங்களுக்கு

ஜே. எல். மாரிஸன் ஸன் & ஜோன்ஸ் (இந்தியா) லிமிடெட்.
தபால் பெட்டி 6527, பம்பாய் 26. · தபால் பெட்டி 387, கல்கத்தா.
தபால் பெட்டி 1370, சென்னை.






ரமண்லால் வஸந்தலால் தேசாய் :: மொழிபெயர்ப்பு : ரா. வீ.

## 10. கடவுள் இருக்கிறார்!

"ராமலால் இங்கேயிருந்தால் உன்னைப் பார்க்காமல் இருப்பானா, என்ன?" என்றார் பரமானந்தர். சுதாகர் என்ன நோக்கத்துடன் இந்தக் கேள்வியைக் கேட்டான்? அவனுடைய அந்தக் கேள்வியில் என்ன ரகசியம் பொதிந்திருந்தது என்பது பரமானந்தருக்குத் தெரிந்தால் தானே? சுதாகருக்கு ராமலாலின் நினைவு வந்ததற்குக் காரணம் மனோரமா, மனோரமாவின் நினைவு வந்ததற்குக் காரணம் மதுர கீதம், இந்த ரகசியம் அவருக்குத் தெரிந்திருக்க நியாயம் இல்லைதான். ஏனெனில் காதலர்களின் கேள்விக்குள் கருத்தொன்றிருக்கும் பொருளை யாரால் தான் உணர முடியும்?

லோகாபிராமமான சாதாரணப் பேச்சில் சுதாகருக்கு இன்பம் ஏற்பட வில்லை. அவன் மனம் அதில் நாட்டம் கொள்ளவில்லை. ராமலால் இங்கே வராமல் இருக்கலாம். ஆனால் இந்தப் பாட்டு...? மனோரமாவைத் தவிர வேறு யார் இவ்வளவு இனிமையாகப் பாட முடியும்? பாட்டுக் குரல் இன்னும் காற்றில் மிதந்து வந்து கொண்டிருந்தது. அதைக்கேட்கக் கேட்க மனோரமாதான் பாடிக்கொண்டிருக்கவேண்டும் என்ற நம்பிக்கை சுதாகரின் உள்ளத்தில் வேரூன்றத் தொடங்கியது.

அப்பொழுது பாட்டின் இன்னிசையில் அந்த வீடே லயித்து விட்டது.

சுதாகர் தன்னை மறந்தான்; தன் நிலையை மறந்தான். அவனுக்கு அந்தக் கேள்வியைக் கேட்காவிட்டால் தலை வெடித்து விடும் என்றே தோன்றியது. எனவே, மிகுந்த துணிச்சலை வரவழைத்துக் கொண்டு, "இந்தப் பாட்டு யார் பாடுவது?" என்று பரமானந்தரைக் கேட்டே விட்டான்.

"அட! நீங்கள் கூடப் பாட்டைப் புரிந்து கொள்கிறீர்களா?" என்று எகத்தாளமாகக் கேட்டார் பரமானந்தர்.

"நாங்கள் புரிந்து கொள்கிறோமோ, இல்லையோ; பாட்டை அநுபவிக்கலாம் அல்லவா? அந்த உரிமையை யாரும் பறித்து விட இயலாதே?" என்றான் சுதாகர்.

மாலதி அந்தத் தர்க்கத்தில் இறங்க வில்லை. அது மட்டும் அல்ல; அதை அவள் வளரவிடவும் விரும்ப வில்லை. எனவே, "பாடுபவளை இங்கே கூப்பிடட்டுமா?" என்று கேட்டாள்.

சுதாகர் அதைக் கேட்டதும் மட்டற்ற மகிழ்ச்சி கொண்டான். அவனுடைய இருதயத்திலே இன்பத் துடிப்பு ஒன்று எழுந்தது. பாடுபவள் மனோரமாவாகத்தான் இருக்க வேண்டும் என்று தீர்மானித்தான். மனோரமாவாகவே இருந்தால் இருந்து விட்டுத்தான் போகட்டுமே! அதற்காக அவன் இருதயம் அப்படித் துடிப்பானேன்? அடிக்கடி அன்று அவன் இருதயத்திலே மனோரமாவின் நினைவு இடம் பெறுவானேன்? அவனால் அதன் காரணத்தைச் சரிவரப் புரிந்து கொள்ள முடியவில்லை. ஆனால் அவனுடைய இருதயம் மட்டும் அலை கடல் போல் அந்த இன்ப நினைவில் அலை பாய்ந்து கொண்டிருந்தது.

சிறிது நேரத்துக் கெல்லாம் கையில் 'தில்ருபா' வாத்தியத்தை எடுத்துக் கொண்டு ஒரு பெண் அந்த அறைக்குள் நுழைந்தாள். அவளைப் பார்த்ததும் சுதாகர் அப்படியே வியந்து போய் வாயடைத்து நின்று விட்டான். அவன் உள்ளத் துடிப்பு 'டக்' கென்று நின்று விட்டது. காரணம், கையில் வாத்தியத்துடன் நுழைந்த பெண் குருடாயிருந்தாள். அவளுடைய முகத் தோற்றம் குழந்தை போன்று கள்ளங் கபடமற்றதாயும் இளமை தோய்ந்ததாகவும் காட்சி அளித்தது. ஆயினும் அவள் சிறுமி அல்ல; பிராயம் வந்த பருவ மங்கையாகத்தான் திகழ்ந்தாள். ஆனால் ஒட்டி உலர்ந்து விட்ட அவளுடைய உடல் வயதுக் கேற்ற வளர்ச்சியைத் தடுத்து உருவத்தைச் சிறிதாகக் காட்டிக் கொண்டிருந்தது.

இந்தப் பெண்ணா இப்படிப் பாடிக் கொண்டிருந்தாள்? சுதாகர் தன்னைத் தானே இந்தக்

கேள்வியைக் கேட்டுக் கொண்டாள். மனோரமாவைப் பார்க்கப் போகிறோம் என்று உள்ளத்தில் கொண்டிருந்த ஆசை ஆர்வம் எல்லாம் ஒரு நொடியில் இப்படி மாறிவிடும் என்று அவன் கனவில் கூடக் கருதவில்லை. ஏமாற்றம் - இரக்கம் இவ்விரண்டுக்கும் இடையே அவன் உள்ளம் ஊசலாடிக் கொண்டிருந்தது. அப்பொழுது பரமானந்தரின் முகத்திலும் இரக்கக் குறி படர்ந்திருந்தது. பெண் தட்டித் தடவிக் கொண்டு, அடிமேல் அடி எடுத்து வைத்தவாறு சிரித்த முகத்துடன் அறையின் நடுவே வந்தாள்.

"குயிலி! அங்கேயே அப்படியே உட்காரு!" என்றார் பரமானந்தர். குயிலி அவர் சொன்ன படியே உட்கார்ந்தாள். சிறிது நேரம் மௌனமாயிருந்த பரமானந்தர், "குயிலி! நம் வீட்டுக்கு ஒரு விருந்தாளி வந்திருக்கிறார். அவர் உன் பாட்டைக் கேட்க விரும்புகிறார். நல்ல பாட்டாக ஒரு பாட்டுப் பாடுகிறாயா?" என்று கேட்டார்.

குயிலியின் ஒளியற்ற விழிகள் அவளுடைய பரிதாப நிலையைப் பெரிது படுத்திக் காட்டின. இந்தப் பரந்த உலகத்தின் நன்றிச் சுமையைச் சுமப்பதற்குத்தான் குருடர்கள் சிருஷ்டிக்கப் பட்டிருக்கிறார்களோ என்னவோ? அவள் முகம் களையிழந்து காட்சி அளித்தது. அவளோ குருடு; கண் தெரியாதவள். தன் விழிகள் மூலம் நன்றியைத் தெரிவித்துக் கொள்ள இயலாதவள். கண்களைப் பறிகொடுத்து விட்ட அவளுக்குத் தன் பரிதாப நிலையின் தன்மை தெரிய வரவே, மனத்தைப் பெருஞ் சுமை அழுத்தியது. வாட்டமும் சோகமும் முகத்தில் குமிழியிட்டுத் தத்தளித்தன. எல்லோருடைய கண்களும் தன் மீதே இருப்பதாக அவள் தனது மனத்துள் கற்பனை செய்து கொண்டாள். அந்தக் கற்பனையெழுந்ததுதான் தாமதம்; பெண்களுக்கு இயல்பான நாணம் அவளைச் சூழ்ந்து கொண்டது. கண் இருந்து நாணம் ஏற்பட்டால் அல்லவா நாணத்தின் அழகு தெரிவதற்கு? அவள்தான் கண்களை இழந்தவள் ஆயிற்றே! கண் கொண்டு காணும் காட்சிகளைக் காணக் கொடுத்து வைக்காதவள் ஆயிற்றே! இந்த உலகத்தை ஒரு கணம் கூடத் தன்னால் இனி பார்க்க முடியாது என்பதை அவள் நன்கு உணர்ந்திருந்தாள். முகத்தில் நாணம் கொப்புளிக்கவே, அவள் தன் பரிதாப நிலையை இன்னும் நன்றாக உணர்ந்தாள். அடுத்த நிமிஷம் அந்த நாணம் தைன்யமாக உருமாறி அவள் முகத்திலே பரிதாபக் காட்சியை நிர்மாணித்து விட்டு மறைந்தது.

அந்த நிலையிலும் கூட அவள் முகம் சிரித்த முகமாகத்தான் இருந்தது.

மாலதி ஒரு நீண்ட மூச்சு விட்டாள். குயிலியின் பரிதாப உருவத்தைக் கண்ணுற்றதும் சுதாகர் மனோரமாவை மறந்தான். அதோடு தன்னையும் மறந்தான். கருணையைக் கடலாகப் பெருக்குவதற்குக் குருட்டுத்தன்மை போதுமானது. குயிலியின் நிலைமையை நேரில் கண்ட அவன், மனம் நெகிழ்ந்து உள்ளம் உருகத் தொடங்கினான்.

"இந்தப் பெண்ணுக்கு நான் 'குயிலி' என்று பெயர் வைத்திருக்கிறேன். ஏனெனில் இவளிடம் அழகில்லை. எடுப்பான நிறம் இல்லை. கண்களை இழந்த பின் இவளுக்கு



இந்த உலகமே கும்மிருட்டாகி விட்டது. எங்கே பார்த்தாலும் இவள் கண்களுக்கு இந்த உலகம் ஒரே இருட்டடிப்பாகத்தான் காட்சி அளிக்கிறது. இவள் தன் இனிய குரலைக் கொண்டுதான் உயிர் வாழ்கிறாள். இவளுடைய பாட்டு நம்மை இனந் தெரியாத இன்ப லோகத்துக்கு இழுத்துச் செல்கிறது. இவள் வாயிலிருந்து வரும் இனிய கீதத்தை ஒரு முறை கேட்டபின், இந்த மண்ணுலகத்தைப் பிரிந்து விண்ணுலகு எய்த நேரிட்டாலும், மனத்தில் எவ்விதக் குறையும் இன்றி நிறைந்த மனத்துடன் நாம் நிம்மதியாகக் கண் மூடலாம்'' என்றார் பரமானந்தர்.

குயிலியைப் பரமானந்தர் இந்த மாதிரியாக அறிமுகப் படுத்தவே, சுதாகர் ஒரு முறை மறுபடியும் குயிலியைப் பார்த்தான். அவள் பார்ப்பதற்கு அழகில் அரம்பையாகவோ, அப்ஸரஸாகவோ இல்லை. ஆயினும் முகம் பார்க்கப் பிடிக்காத கோர ஸ்வரூபமானதாக இல்லை. அவள் நிலையை நினைந்து தன் நிலையை மறந்த சுதாகரினால் ஒன்றும் பேச முடியவில்லை. சிறிது நேரம் கழித்து உள்ளம் ஒரு நிலைக்கு வந்தபின் அவன் தொண்டையைக் கனைத்துக் கொண்டு, "இவள் யார்?'' என்று கேட்டான்.

"இப்பொழுது தானே சொன்னேன், இவள் பெயர் குயிலி என்று!'' என்றார் பரமானந்தர்.

பரமானந்தரின் பதில் அவனுக்குத் திருப்தி அளிக்கவில்லை. அவனோ அவளைப் பற்றி அறிய விரும்பிக் கொண்டிருந்தான்! அவரோ அவள் பெயரை மட்டும் சொல்லி விட்டு மற்ற விஷயங்களை மூடப் பார்த்தார்.

குயிலி என்பது இவள் பெயர். இதை யார் இவரிடம் கேட்டார்கள்? அப்படியே கேட்டாலும் பெயரை ஒரு தடவை சொன்னால் புரிந்து கொள்ள மாட்டார்களா? இவள் யார்? இவளுக்கும் பரமானந்தருக்கும் உள்ள தொடர்பு என்ன? இதுபோன்ற விஷயங்களையல்லவா அவன் தெரிந்து கொள்ள விரும்பினான்! அதற்கு அவர் இந்த மாதிரிப் பதில் சொன்னால்...? மறுபடியும் சுற்றிச் சுற்றி அவன் அதே கேள்வியைக் கேட்டான்.

சுதாகர் சங்கோசம் காரணமாக விஷயத்தை விளக்கமாகக் கேட்கவில்லை என்பதைப் பரமானந்தர் புரிந்து கொண்டார். எனவே, அவர் சுதாகரின் சிரமத்தைச் சுலபமாக்கும் நோக்கத்துடன், "ஓகோ! அதையா கேட்கிறாய்? இப்பொழுதுதான் புரிந்து கொண்டேன். இவள் எனக்கு என்ன ஆக வேண்டும் என்று தானே கேட்கிறாய்? இவள் என் பெண்!'' என்றார்.

"தங்கள் பெண்ணா?''— வியப்புத் தாண்டவமாடும் குரலில் கேட்டான் சுதாகர். பரமானந்தர் கல்யாணம் குடும்பம் என்பது போன்ற கட்டுகளில் சிக்காதவர் என்றுதான் அவன் இதுவரை எண்ணி வந்தான். எண்ணி வந்ததோடு மட்டும் அல்ல; நன்றாக அறிந்தே இருந்தான். அதனால்தான் அவனுடைய கேள்வியில் அவ்வளவு வியப்புத் தாண்டவமாடியது.

"எனக்கு இது போல் இன்னும் எத்தனையோ பெண்கள் இருக்கிறார்கள். உலகம் மறந்து விடுபவர்களை நான் நினைவு வைத்துக் கொள்கிறேன்.; கவனித்துக் கொள்கிறேன்!'' என்றார் பரமானந்தர் புரியாத புதிர் போடுபவர் போல்.



பரமானந்தரின் அந்தப் பதில் அவன் உள்ளத்தில் உதித்த எண்ணத்தைத் தெளிவாக்கியது என்று சொல்லி விடுவதற்கில்லை. ஏனெனில் அந்தப் பதிலின் தாத்பரியமே அவன் புத்திக்குச் சிறிதும் சரிவர எட்டவில்லை.

"நீ புரிந்து கொள்ளவில்லையா? சரி, அதனால் ஒன்றும் பரவாயில்லை. குயிலி,

பாடு, அம்மா!" என்றார் பரமானந்தர். குயிலி மெதுவாகத் 'தில்ருபா' வாத்தியத்தை வாசித்தவாறே தனது மிகமிக இனிமையான குரலில் மதுர கீதம் பாடத்தொடங்கினள். 'தில்ருபா' வாத்தியமும் அவளுடன் சேர்ந்து மதுரகீதம் இசைக்கத் தொடங்கியது.

*

குயிலி பாடிக் கொண்டிருந்தாள்:-

தீராத விளையாட்டுப் பிள்ளை - கண்ணன்
தீராத விளையாட்டுப் பிள்ளை!

புல்லாங் குழல் ஊதி வருவான் - கண்ணன்
தீராத விளையாட்டுப் பிள்ளை!

இனிய சாரீரத்துடன் இழைந்து வந்த ஸ்வரங்கள் எடுப்பாக அமைந்து களைகட்டத் தொடங்கி விட்டன. எல்லோரும் பாட்டின் இனிமையிலே மெய்ம் மறந்து தங்கள் நினைவு ஒழிந்து உட்கார்ந்திருந்தனர். அநேக நிமிஷங்களுக்குப் பிறகு பாட்டு நின்றது. ஆனால் அதன் இனிய ஒலி மட்டும் காற்றில் இழைந்து காதுகளில் ரீங்காரம் செய்த வண்ணம் இருந்தது. சுதாகர் வியந்து போய் அப்படியே அயர்ந்து உட்கார்ந்து விட்டான். அவனும் ஒரு காலத்தில் பாடியது உண்டு. ஆனால் அவன் பாடிய பாடல்கள் சாகுந்தலம், மேக தூதம் போன்ற காவியங்களின் கருத்து நிறைந்த சுலோகங்கள் தாம். தொண்டையிலிருந்து இனிமையே உருவான குரல்கள் எழுந்து ஆளை இவ்வளவு பரவசப் படுத்தி ஆனந்தத்தில் ஆழ்த்தி விடும் என்று அவனுக்கு இதுவரை தெரியவே தெரியாது. அவன் பாடகர்களிடமோ பக்க வாத்தியக் காரர்களிடமோ இதுவரை நல்ல எண்ணம் கொண்டதில்லை. வேலை - வெட்டி இல்லாதவன், கல்வி கேள்விகளில் கருத்துச் செல்லாதவன் எழுத்து-படிப்பு இவற்றில் நாட்டங் கொள்ளாதவன்—இப்படிப்பட்டவர்கள் தான் பொழுதைப் போக்கத் தெரியாமல் பாடத் தொடங்குகிறார்கள், பாடிப் பொழுதை வீணாக்குகிறார்கள் என்று சுதாகர் வெகு நாட்களாக எண்ணி வந்தான். இன்று தான் இரண்டாந்தடவையாக சங்கீதத்துக்கு உள்ளத்தையும் உடலையும் உருக்கி நிலை குலையச் செய்யும் அபூர்வ சக்தி இருக்கிறது என்ற அநுபவம் ஏற்பட்டது.

பரமானந்தரோ தம்மை முற்றிலும் மறந்து பாட்டின் லய பாவத்திலே லயித்து விட்டார். போதையிலே மூழ்கியிருக்கும் மனிதனுக்கு அக்கம் பக்கத்தில் இருக்கும் மனிதர்களின் கவனம் இராதல்லவா? அதே போலத்தான் பரமானந்தரும் தாம் இருக்கும் சூழ்நிலையையும் தம்மையும் மறந்து பாட்டின் இன்னிசையில் இரண்டறக் கலந்திருந்தார். ஏனெனில் சங்கீதமும் ஒரு வித போதையூட்டும் திறன் வாய்ந்த பொருள்தானே? இனிமை

என்னும் ரஸம் நிறைந்த கோப்பையைப் பருகத் தொடங்கி விட்டால் ஒவ்வொரு வாயாக எத்தனை வாய் குடித்தாலும் திருப்தி என்பது இலேசில் ஏற்படுமா? ஒரு வாய் குடித்து முடிந்ததும் இன்னொரு வாய் குடிக்க வேண்டும் என்ற ஆசைதானே உந்தித் தள்ளும்? ஆசை அதிகரிக்க அதிகரிக்க மனிதன் ஒரு திவலை கூட வீணாக்கக் கூடாது என்று திருப்பித் திருப்பிக் கோப்பையை வாயில் கவிழ்த்துக் கொள்வான் அல்லவா? இசைப் பித்தம் கொண்டவனும் போதைப் பித்தனைப் போலத்தான். ஏன்? அவனைக் காட்டிலும் ஒரு படியென்ன, பல படிகள் மேலானவன் என்று கூடச்சொல்லலாம். அதன் ரஸத்தை அறியாதவர்களுக்கு வேண்டுமானால் அவர்கள் பித்தர்களாகத் தோன்றலாம். ஆனால் அதன் ரஸத்தை அறிந்தவர்களுக்கு, இன்பத்தை அநுபவித்தவர்களுக்கு அல்லவா அதன் பெருமையும் மதிப்பும் தெரியும்? சங்கீதத்தினிடம் பிரேமை கொண்டு அதில் ஆழ்ந்து விட்டவர்களுக்குப் பிறர் என்ன எண்ணுகிறார்கள் என்ற கவலை எதற்காக ஏற்படப் போகிறது? அவர்கள் போக்கு சித்தம் போக்குச் சிவன் போக்குத் தானே?

பாட்டு முடிந்ததும் பெரு மகிழ்ச்சியில் மூழ்கித் திளைத்த பரமானந்தர், "ஆகா! பலே பேஷ்! சபாஷ், குயிலி! என்ன ஆனந்தம்! என்ன ஆனந்தம்! சங்கீதத்திற்காக அரசாங்கத்தையே அர்ப்பணம் செய்துவிடுவதுண்டு என்கிறார்களே! அது ஆச்சரியப்படக் கூடிய அளவுக்கு ஒன்றும் அவ்வளவு பிரமாதமான விஷயம் இல்லை. சங்கீதத்தின் இனிமைக் கெதிரே மூவுலகத்து இன்பமும் துச்சம்தான். இதில் எள்ளளவும் சந்தேகம் இல்லை!" என்றார். பாட்டு அவரை எவ்வளவு தூரம் மெய்ம்மறக்கச் செய்திருந்தது என்பதை அவருடைய பேச்சின் குரலே எடுத்துச் சொல்லிக் கொண்டிருந்தது.

"இனிய சங்கீதத்துக் கெதிரே சாம்ராஜ்யமே துச்சமானதா?"— சுதாகரின் இந்தக் கேள்வியிலே அவநம்பிக்கை தொனித்தது.

"ஆமாம், ஏன்? இதில் என்ன சந்தேகம்? சங்கீதத்துக் கெதிரே மூவுலகமுமே துச்சமானது என்று கூடச் சொன்னேனே! சங்கீதத்தின் லயபாவத்திலே மூழ்கி விட்டால் மனிதன் ரணகளத்தில் கூடச் சிரித்துக் கொண்டே உயிரை விட்டுவிடுவான். மரண வலியை மரண வலி என்று தெரியாமல் போக்கும் சக்தி மனத்தைக் கொள்ளை கொள்ளும் சங்கீதத்துக்கு உண்டு. நான் சிறிதும் மிகைப்படுத்திக் கூறவில்லை. சரித்திரத்தில் இதற்கு வேண்டிய பல சான்றுகள் இருக்கின்றன. கோவிலுக்குச் சென்று திருப்புகழ், திருவெம்பாவை, திருப்பாவை போன்ற பக்தி பரவசமான-ராக சுத்தத்துடன் கூடிய பாடல்களைக் கேட்டுப் பார்! உன் தலை தானாகப் பக்தியுடன் பகவானுக் கெதிரே பணிந்து விடும். நாஸ்திகனின் உள்ளத்தில் ஆஸ்தி

கத்தைத் தழைக்கச் செய்து கடவுளை நம்பும்படி செய்துவிடும். நான் மட்டும் ஒரு டாக்டராக இருந்தால், உலகத்தில் உள்ள அத்தனை நோயாளிகளுக்கும் சங்கீதத்தைத் தவிர, வேறு மருந்தையே சிபாரிசு செய்ய மாட்டேன். நான் அரசனாக இருந்தால், குற்றவாளிகள் எல்லோருக்கும் ஒரே மாதிரியான தண்டனைதான் அளிப்பேன். அத் தண்டனை எது, தெரியுமா? சங்கீதம்! சங்கீதத்தைத் தவிர தண்டனையோ மருந்தோ கொடுக்க மாட்டேன். சங்கீதத்தின் சக்தியினால் கொலையாளிகூடத் தன் நெஞ்சத்தில் உதிக்கும் கொடுஞ் செயல்களை மறந்து விட்டொழித்து விடுவான்! நான் சொல்வதன் தாத்பரியம் என்னவென்றால் இந்த உலகத்துக்குச் சங்கீதம் ஒரு வரப்பிரசாதம். அதற்கு ஈடு இணையான பொருள் இந்த உலகத்தில் என்ன, மூவுலகத்திலுமே கிடையாது!" என்று பரமானந்தர் ஒரு குட்டி பிரசங்கம் செய்து விட்டுத்தான் மூச்சு விட்டார்.

சுதாகர் சங்கீதத்துக்கு அவ்வளவு புகழ் அளிப்பதை விரும்ப வில்லை; ஒப்புக் கொள்ளவும் இல்லை. ஆயினும் அவன் அதற்கு எதிர் வாதம் செய்ய வேண்டும் என்றும் எண்ண வில்லை. எனவே, அது சம்பந்தமாக வாய்திறந்து வார்த்தையாடாம லிருந்தான்.

மாலதியும் பரமானந்தரும் சிறிது நேரத்துக்கெல்லாம் அங்கிருந்து எழுந்து வெளியே போய் விட்டார்கள். சுதாகருக்குத் தன் கைக் காயத்தில் வலி ஏற்படத் தொடங்கி விட்டது. காயம் ஆறுவதற்கு அநேக வாரங்கள் பிடிக்கும் போல அவனுக்குத் தோன்றியது. காயம் ஆறும்வரை அவன் அங்கேயேதான் இருந்தாக வேண்டும். ஏனெனில் பரமானந்தர்தான் அதுவரை போகக்கூடாது என்று சொல்லி அவனைத் தடுத்து நிறுத்தி விட்டாரே! அது மட்டும் அல்ல; சுதாகரின் நண்பனுக்குச் செய்தியைத் தெரிவித்து விடுவதாகவும் வேறு பொறுப்பு ஏற்றுக் கொண்டிருந்தாரே! எனவே, சுதாகர் அந்தக் கவலையை விட்டொழித்துக் காயத்தின் வலியையும் மறக்க முயன்று கொண்டிருந்தான்.

அவ்விடத்தை விட்டுப் போகும் பொழுது பரமானந்தர், "குயிலி! சுதாகர் சொல்லும் வரை பாடிக் காட்டு!" என்று சொல்லிச் சென்றிருந்தார். எனவே, குயிலி இரண்டு மூன்று பாட்டுக்கள் அவனுக்குப் பாடிக் காட்டினாள். சுதாகர் பாட்டின் இனிமையிலே தன்னையும் மீறி மகிழ்ந்தான். அவனுக்குத் தன் காயத்தின் வலி குறைந்து விட்டது போன்ற உணர்ச்சி உண்டாயிற்று. பரமானந்தர் பாட்டின் சக்தியைப் பற்றிச் சொன்னது ஒரு வேளை உண்மையாகவே இருக்குமோ என்ற கேள்வி அவனையும் அறியாமல் அவன் மனத்துள் எழுந்தது.

பாட்டிலே மனத்தைப் பறிகொடுத்திருந்த சுதாகர் பாட்டு நின்ற சிறிது நேரத்துக்கெல்லாம், "ஏன், குயிலி! நான் பாட்டுக் கற்றுக் கொள்ள முடியுமா? எனக்குப் பாட்டு வருமா?" என்று கேட்டான்.

குருட்டுக் குயிலி சிரித்தாள். "வெகு கஷ்டமான காரியம் தான். இருந்தாலும் யாராவது கற்றுக் கொள்வதாயிருந்தால் சொல்லிக் கொடுக்க எனக்கு இஷ்டம்தான். இவ்விஷயத்தில் எனக்கு எவ்விதமான ஆட்சேபனையும் எழுவதற்கு நியாயம் இல்லை!" என்றாள்.

"நான் இன்னும் கொஞ்ச நாட்கள் இங்கே இருப்பேன். அதற்குள் எத்தனை கற்றுக் கொள்ள முடியுமோ, அத்தனை கற்றுக் கொடுத்தால் போதும்... ஆமாம், நீ இங்கேயேதானே இருப்பாய்?" என்று குயிலியைப் பார்த்துக் கேட்டான் சுதாகர்.

சுதாகரின் அந்தக் கேள்வியைக் கேட்ட குயிலி தன்னையறியாமல் தலையைக் குனிந்து கொண்டாள். சில கணங்கள் அவள் வாய் திறந்து ஒன்றும் பேசவில்லை. பிறகு தன்னை ஒருவாறு சமாளித்துக் கொண்டு, "இங்கேயேதான் இருப்பேன். எனக்கு வேறு போக்கிடம் ஏது?" என்றாள். அப்பொழுது அவளுடைய குரலில் தொனித்த ஆழ்ந்த வேதனையையும் நாதியற்ற தன்மையையும் என்னவென்று சொல்வது?

"ஏன்? அப்படிப்பட்ட நிலைமை உனக்கு என்ன வந்து விட்டது?" என்று கேட்டான் சுதாகர், எல்லோருக்கும் இயல்பான ஆவலுடனும் ஆத்திரத்துடனும்.

"என் கதி அப்படித்தான் ஆகி விட்டது. அப்பா-அம்மா, அண்ணன்-தம்பி, அக்காள்-தங்கை, உற்றார்-உறவினர் என்று எனக்கு யாருமே கிடையாது. கண் இருந்த வரையில் எனக்கு எல்லோரும் இருந்தார்கள். கண் போனதும் எல்லோரும் போய் விட்டார்கள். ஆதரவு அற்றுத் தவிக்கும் எனக்கு இந்த இடத்தை விட்டால் வேறு ஆதரவு கிடையாது; கதி கிடையாது!" என்றாள் குயிலி. உள்ளத்திலே கனிந்து கொதித்துக் கொண்டிருந்த வருத்தமும் பச்சாத்தாப உணர்ச்சியும் தன்னையும் மீறி அவளை அப்படிப் பேச வைத்தன.

அதைக் கேட்டதும் சுதாகருக்கு அவளிடம் அளவற்ற இரக்கம் பிறந்தது. அவளைப் பற்றிய முழுக் கதையையும் கேட்டுத் தெரிந்து கொள்ள வேண்டும் என்ற ஆவல் அவனை உந்தித் தள்ளியது. ஆனால் பழைய கதையைக் கிளறி விட்டால், அவள் மனப் புண் பசுமையுற்று அவளுக்கு வேதனை அளிக்கத் தொடங்கி விட்டால் என்ன செய்வது என்ற எண்ணம் குறுக்கிட்டு அவன் ஆவலை அடக்க முயன்றது. அவளுக்கு ஆறுதல் அளித்து அமைதி அளிக்கும் நோக்கத்துடன் அனுதாபம் நிறைந்த குரலில், "எல்லோருக்கும் மேலே கடவுள் இருக்கிறார். அவர் காத்து ரட்சிப்பார்!" என்றான்.

ஆனால் அந்த வார்த்தையினால் குயிலிக்கு ஆறுதல் கிடைத்ததாகத் தெரியவில்லை. அதற்கு மறுமொழி சொல்லாமல் அவளால்

## உங்களுடைய நல்ல அழகான படங்களுக்கு...

## GEVAPAN 33

**கேவாபான் 33**

பகல் வெளிச்சத்திலும், செயற்கை வெளிச்சத்திலும் இந்த மின்னல் வேக பான்குரோமாடிக் பிலிம் நேர்த்தியான தெளிவையும், வர்ணங்களைத் தத்ரூபமாய் ரசிக்கும் தன்மையும் கொண்டது.

சைஸ் : 620 & 120—ரூ. 2/4






## GEVACHROME 30




**கேவாகுரோம் 30**

பகல் வெளிச்சத்திற்கு உகந்த ஆர்தோகுரோமாடிக் பிலிம், நல்ல ரசிக்கும் தன்மை, பிரகாசமான படிகள் பதிவு, விசாலமான தோற்றப் பிடிப்பு, மற்றும் நல்ல தெளிவு வாய்ந்தது.

சைஸ் : 620 & 120—ரூ. 2/1




இலவச விவரங்களுக்கும் "கேவார்ட்" எக்ஸ்போஷர் கார்டு கேட்டதற்கும் கீழ்க்கண்ட விலாசத்திற்கு எழுதவும்:

**Allied Photographics Limited**

**அல்லைட் போட்டோகிராபிக்ஸ் லிமிடெட்**

(செல்லிங் டிபார்ட்மெண்ட்) கஸ்தூரி பில்டிங்ஸ், ஜாம்ஷெட்ஜி டாடா ரோடு, பம்பாய்-1

கிளை ஆபீஸ்கள்: பம்பாய் • கல்கத்தா • மதராஸ் • புதுடில்லி

இருக்க முடியவில்லை. அவன் அறியாத ஏதோ ஒரு உணர்ச்சி உள்ளத்தில் தோன்றி அவனைப் பேசத் தூண்டியது.

"என்னைப் பொறுத்தவரை கடவுளும் இல்லை யென்றே தோன்றுகிறது. ஆனால் இந்த உலகம் 'கடவுள் இருக்கிறார், இருக்கிறார்' என்று கதறுகிறது. 'அவன் அன்றி ஒரு அணுவும் அசையாது. படைத்தவன் படியளப்பான்!' என்றெல்லாம் வேதாந்தம் பேசுகிறது. பல நாள் பட்டினி கிடந்தவன் படுக்கைவிட்டு எழுந்திருக்கக் கூட ஜீவனற்றுக் கிடக்கிறான் என்பது இந்த உலகத்துக்கு என்ன தெரியும்? உலகத்தின் இந்த வேதாந்தம் உண்மையாக இருந்தால் ஒருவன் ஏன் பட்டினி கிடந்து சாகிறான்? காத்து ரட்சிக்கும் பொறுப்பை ஏற்றுக் கொண்டுள்ள அந்தக் கடவுள் சமயம் பார்த்து எங்கே நழுவி விடுகிறாரோ, புரிய வில்லையே!" என்றான் குயிலி.

அதைக் கேட்ட சுதாகரின் இருதயம் 'வெட வெட' வென்று நடுங்கி ஆடியது. உண்மையிலேயே உலகத்தைத் தாங்க வொண்ணாத துயரமும் கஷ்டமும் வாட்டி எடுத்துக் கொண்டிருக்கின்றன. மேலும் மேலும் துயரங்களும் துன்பங்களும் அதிகரித்துக் கொண்டே போகின்றன. அப்படியிருந்தும் இந்த உலகம் கடவுளை நம்பி ஏன்தான் வாழ்கிறதோ? யோசிக்க யோசிக்க அது சுதாகருக்குப் புரியாப் புதிராகவே தோன்றத் தொடங்கியது. சுதாகர் யோசனையில் தன்னை மறந்தான். குயிலி அவன் யோசனையில் இடையே குறுக்கிட்டுத் தன் சோகக் கதையைக் கூறத் தொடங்கினான்.

"என் கண்கள் கெட்டதும் இந்த உலகம் என்னைப் பிடித்துத் தள்ளி விட்டது. பரமானந்தர் மட்டும் சரியான சமயத்தில் வந்து என்னைக் காத்து ரட்சித்திரா விட்டால், நான் உங்களுக்கு இந்தப் பாடல்களைப் பாடிக் காட்ட உயிருடன் இருந்திருக்க மாட்டேன். என்னைப் பொறுத்தவரை எனக்குப் பரமானந்தர்தான் கண்கண்ட தெய்வம்" என்றான்.

சுதாகர் கடவுளுக்கு எதிராக யோசிக்கவே விரும்பவில்லை. ஆனால் குயிலியின் வருத்தமும் வேதனையும் அவனை அவன் கொள்கையும் மீறிக் கடவுளுக்கு எதிராக நாஸ்திக பாணியில் யோசிக்கத் தூண்டிக் கொண்டிருந்தன. அவனுடைய இருதயத்தின் மென்மையான பாகம் கடவுளைக் காப்பாற்றுவதற்குக் காரணம் தேடிக் கொண்டிருந்தது. நல்ல வேளை! குயிலியின் வார்த்தையிலேயே அவனுக்கு அதற்கான காரணமும் கிடைத்து விட்டது. ஆகவே அவன், "நான் கண்களுக்குப் புலனாகாத அந்தக் கடவுளுக்கு நன்றி செலுத்தக் கடமைப் பட்டிருக்கிறேன். ஏனெனில் அவர் தானே உன்னை உயிருடன் வைத்திருக்கிறார்! அவருடைய கருணையினால் தானே நான் இன்று உன்னுடைய தெய்வீக சங்கீதத்தைக் கேட்கும் பாக்கியம் பெற்றேன்! நீ அவரை என்ன நிந்தித்தாலும் சரி, நான் பாராட்டத்தான் செய்வேன். நீ அவரை நிந்திக்கக் காரணம் இருக்கிறது. ஏனெனில் நீ துக்கப் பட்டிருக்கிறாய். துக்கப் பட்டவன் எது சொன்னாலும் தவறு ஆகாது. நீ மனத் துயரைக் கூறி ஆற்றிக் கொள்ள முயல்வது இயல்புதான்!" என்றான்.

அவன் வார்த்தைகளைக் கேட்டதும் குயிலியின் மனம் திருப்பத்தை நாடியது. அவன் வருத்தம் நிறைந்த குரலில், "நான் என்ன செய்வேன்? என் தீச்செயலை என் மனம் எண்ணிப் பார்க்க மறுக்கிறது. அதனால் குற்றத்தை யெல்லாம் கடவுளின் மேல் சுமத்துகிறேன். பாவம் செய்தவன் நான்; ஆனால் பழியைப் பகவான் பேரில் சுமத்துகிறேன். நான் கண் இழந்து குருடி ஆனதற்குக் காரணம் என் தீச் செயல்கள்தாம். க்ஷண சித்தத்தில் செய்யும் தவறான ஒரு செய்கையினால் பயங்கரமான பாவ வித்து வாழ்க்கையில் விழுந்து இப்படிப் பேய் உருவம் தரித்து விடக் கூடும் என்று எனக்குத் தெரியவே தெரியவில்லை. அதனால் தான் நான் அநுபவிக்கிறேன். இதில் பிறரைக் குறை கூறி என்ன பயன்? எல்லாம் என் குற்றம் தான். அப்படியிருக்கும் பொழுது என் கண்கள் கெடாமல் வேறு யாருடைய கண்கள் கெடும்?" என்றான். (தொடரும்)



★ ★ ★

கல்கத்தா கிராண்ட் அட்வர்டைஸிங் கம்பெனியைச் சேர்ந்த ஸ்ரீ வி. என். ஸ்வாமி அவர்களுக்கும், டாடா அயர்ன் அண்டு ஸ்டீல் கம்பெனி ஸ்டோர்ஸ் ஆபீஸர் ஸ்ரீ ஆர். ஆர். அய்யர் அவர்களின் குமாரி சௌ. சீதாலக்ஷ்மிக்கும் சமீபத்தில் தஞ்சாவூர் ஜில்லா விஷ்ணம்பேட்டையில் வெகு சிறப்பாகத் திருமணம் நடந்தேறியது. வாழ்க, மணமக்கள்!

★ ★ ★

# ஆரோக்கிய ரகசியம்

வி. என். குமாரஸ்வாமி

## 61. முடிவுரை

கடந்த மூன்று ஆண்டுகளாக "கல்கி" நேயர்களின் மனத்தில் இடம் பெற்று வந்த ஆரோக்கிய ரகசியக் கட்டுரைகள் இந்த வாரத்து இதழுடன் முடிவடைகின்றன.

இக் கட்டுரைகளால் நம் மக்களுக்கு ஒரு சிறந்த சேவை செய்ய முடிந்தது என்பதை எண்ணிச் சந்தோஷப்படுகிறேன். ஆனால் அதே சமயம் பெரும் பொறுப்பையும் வகிக்க வேண்டியிருப்பதை எண்ணும்போது இவ்வளவு பெரிய காரியத்தை எப்படி செய்வது என்று பிரமிப்பாய் இருக்கிறது.

மற்ற விஷயமாய்க் கட்டுரைகள் எழுதினால் இவ்வளவு யோசிக்க வேண்டியிருக்காது. படிக்கும் நேயர்கள் கட்டுரைகளைப் பற்றிப் பாராட்டுக் கடிதங்கள் மட்டும் எழுதுவார்கள். அத்துடன் சரியாய்விடும். பதில் எழுத வேண்டுமென்ற அவசியம் கிடையாது.

ஆனால் ஆரோக்கிய ரகசியக் கட்டுரை விஷயமாய் அப்படியிருக்க முடியவில்லை. பாராட்டுதலுடன் அவர்களின் உடற் கோளாறுகளைச் சொல்லி, அவைகளுக்கு என்னென்ன ஆசனங்களைச் செய்யலாம், என்ன சாப்பிடலாம், எப்படி நடந்து கொள்ளலாம் என்று பல கேள்விகளைக் கேட்கிறார்கள். பதில் வரும் என்ற நம்பிக்கையுடன்தான் எழுதுகிறார்கள்.

நம் நாட்டில் மட்டுமல்லாமல், தமிழர்கள் உலகில் எந்தப் பக்கத்தில் வசித்தாலும், அங்கெல்லாம் "கல்கி" செல்லுகிறது. எனவே கடல் கடந்தும் உள் நாட்டிலும் உள்ள மக்கள் இந்த ஆரோக்கிய ரகசியக் கட்டுரைகளைப் படிக்கிறார்கள். படிப்பதோடு மட்டுமல்ல; தங்களுக்குள்ள குறைகளுக்கும் பரிகாரம் கேட்கிறார்கள்.

ஒரு காரியம் செய்தால் அதனால் என்ன நேரிடினும் அதை ஒழுங்காய்ச் செய்ய வேண்டும் என்பதில் நம்பிக்கையுள்ளவன் நான். எல்லோரையும் ஆசனங்களைச் செய்யும்படி சொல்லிவிட்டு, அவர்களுக்கு ஏற்படும் சந்தேகங்களுக்கும் குறைகளுக்கும் பதில் கொடுக்காமலிருந்து விடலாம் என்றால், மனச்சாட்சி இடம் தரவில்லை. இதுவரை பல்லாயிரக் கணக்கானவர்களுக்குப் பதிலும், சிகிச்சைகளும் அனுப்பியிருக்கிறேன்.

ஏற்கனவே ஆசனங்களைச் செய்து அதனால் தங்கள் குறைகளை நீக்கிக் கொண்ட சில பிரபலமான தலைவர்களைப் பற்றியும், பிரமுகர்களைப் பற்றியும் அவரவர்களின் கடிதங்களின் மூலமாகவே பிரசுரித்து இருக்கிறேன். அவர்கள் அத்தனை பேரும் எனக்கு நெருங்கிய நண்பர்கள். ஆனால் அறிமுகமே இல்லாத, இன்னார் என்றுகூடப் பரிச்சயமில்லாத பல்லாயிரக் கணக்கானவர்கள் இந்த மூன்று ஆண்டுகளாகக் "கல்கி"யில் வந்த ஆரோக்கிய ரகசியக் கட்டுரைகளைப் படித்து அதனால் பல நன்மைகளை அடைந்து அவர்களால் எழுதப்பட்ட பல கடிதங்களில் ஒரு சிலருடைய கடிதங்களை மட்டும் இங்கே தருகிறேன். கடிதங்களைப் பிரசுரிக்க அவர்களின் அனுமதி கோரப்படாதத.ல் பெயர்களை மட்டும் இங்கு தரவில்லை.

கடிதங்கள் :

1. நான் 34 வருடங்களாக யோகாசனப்பயிற்சி செய்து வருகின்றேன். பல நூல்களையும் இதை முன்னிட்டுப் படித்துள்ளேன். ஆனால் தங்களைப் போல அவ்வளவு தெளிவாகவும், எளிதாகவும் விஷயங்களை எந்த ஆசிரியர்களும் விளக்கவில்லை. தாங்கள் பொது மக்களுக்கு அருமையான சேவை செய்து வருகின்றீர்கள். இதற்கு எல்லோரும் தங்களுக்குக் கடமைப்பட்டிருக்கிறார்கள்.

மைசூர். ..........................
2-9-52 ரிடயர்ட் ஜட்ஜ்

2. தாங்கள் "கல்கி" வாயிலாகத் தமிழ் நாட்டுக்கு ஆற்றி வரும் தொண்டை மிகவும் பாராட்டுகிறேன். நவீன முறைகள் பிராசீன முறைகள் ஆகியவற்றை எல்லா வைத்தியர்களும், கல்லூரி மாணவர்களும் ஒப்புக் கொள்ளும் வகையில் மிகத் தெளிவாய் விளக்கி வருகின்றீர்கள். தங்களை நேரில் காணவும் தங்கள் சொற்பொழிவுகளைக் கேட்கவும் வைத்தியர்களும் பொது மக்களும் பொதுவாகத் தமிழ் நாட்டில் எல்லோரும் விரும்புகிறோம். இச்சங்கத்தில் எல்லா முறை வைத்தியர்களும் அங்கம் வகிக்கின்றார்கள். இச்சங்கத்தின் ஆண்டு விழாவிற்குத் தாங்கள் தலைமை தாங்கி நடத்தித் தரவேண்டுமாய்க் கோருகின்றோம்.

கும்பகோணம் காரியதரிசி
23-3-52 ஐக்கிய வைத்திய சங்கம்,

3. தங்களின் ஆசன மகிமையைக் "கல்கி"யில் நன்றாகப் படித்து, அநுபவத்திலும் என் வைத்திய முறையுடன், தங்கள் ஆசன முறைகளையும் கையாண்டு வருகின்றேன். கடவுள் கிருபையால் நல்ல பலனும் கிடைத்திருக்கின்றது.

கீழக்கரை, ஒரு முஸ்லிம் அன்பர்.
15—6—52 Dr. F. S. H. C.

4. தாங்கள் "கல்கி" இதழில் தொடர்ந்து எழுதி வரும் யோகாசனப் பயிற்சிகளை அடியேனும் விடாது படித்து, செய்து வருகிறேன். நான் ஏற்கெனவே நல்ல உடற் பயிற்சிகள் பல செய்து வந்துள்ளேன். ஒரே மூச்சில், 150 – 200, தண்டால்கள் எடுப்பேன். வேகமாக ஒரு மைல் ஓடுவேன். தற்சமயம் தங்கள் பயிற்சிகளில் சிரத்தை கொண்டு சிரசாசனத்தை விடாது செய்து வருகின்றேன். 36 அங்குலம் சுற்றளவுள்ள எனது மார்பு, 39 அங்குலமாக அதிகரித்துள்ளது. ஹலாசனமும் செய்து வருகின்றேன். சிரசாசனம் ஓர் சிறந்த சஞ்சீவி. வாலிப உலகத்துக்கு ஒரு வரப்பிரசாதம். வியாதிகளைச் சவக்குழி தோண்டிப் புதைக்க வேண்டுமானால், அதற்குச் சிரசாசனம் ஒன்றே போதுமானது என்று தயங்காது கூறலாம்.

..........................
25—7—51 கோட்டை, ஈரோடு

5. ......நான் இரண்டு மாதங்களாகத்தான் ஆசனங்களைப் பழகி வருகின்றேன். இதற்குள் என் அகத்துள்ளே இனமறியா ஓர் புத்துணர்ச்சி நடமாடுவதைக் காண்கின்றேன். நான் ஒரு சித்திரக்கலைஞன். எவ்வேலை யிருப்பினும், ஆசனத்துக்காக என்னால் காலையில் ஒரு மணி நேரமும், மாலையில் கால் மணி நேரமும் ஒதுக்க முடி



புதிய கல்வித் திட்டத்தில் உள்ள அடிப்படைத் தத்துவமாகிய எழுத்தறிவும், கைத்தொழில் கல்வியும் நீண்ட நாளாகச் சிறுவர்களுக்கு அளித்துவரும் வாலாஜாபாத் இந்துமதப் பாடசாலைக்கு ஜூலை மாதம் இருபத்தெட்டாம் தேதி சென்னை சர்க்கார் கல்வி இலாகா கௌரவ ஆலோசகர் ஸ்ரீ ஜி. ராமச்சந்திரன், மதுரை டிவிஷனல் இன்ஸ்பெக்டர் ஸ்ரீ வி. ரகுநாதன், செங்கற்பட்டு ஜில்லா கல்வி அதிகாரி ஸ்ரீமதி சரஸ்வதி துரைசாமி முதலியவர்களுடன் செங்கற்பட்டு ஜில்லாவில் உள்ள எல்லா பள்ளிக்கூட டிப்டி இன்ஸ்பெக்டர்களும் விஜயம் செய்திருந்தனர்.

---

கின்றது. என் வாழ்க்கையின் பாதையை ஆரோக்கிய வழிக்குத் திருப்பித் தந்து என்னை ஓர் புத்தாளாக்கிய தங்களை நான் செத்தாலும் மறவாதிருக்க ஆரோக்கிய ரகசியம் காப்பாற்றுமாக.

........................

21—7—51 திருநெல்வேலி

6. "கல்வி" பாரத நாட்டில் மட்டுமல்லாது கடல் கடந்தும் சென்று மக்களை நல்வழிப்படுத்துகிறது. அதுபோல் தங்கள் யோகாசனக் கட்டுரை எழ நாட்டிலும் பலருக்கு யோகாசன ஆசையை உண்டு பண்ணி அதைப் படிக்கவும், புத்துணர்ச்சி ஊட்டியுள்ளது. பலர் யோகம் சம்பந்தமாய்ப் பத்திரிகைகளில் எழுதியிருக்கின்றார்கள். தாங்களும் எழுதியிருக்கின்றீர்கள். இரு பகுதியாருக்கும் வித்தியாசம் இதுதான். ஒரே முறையாய் எல்லாவற்றையும் புரியாமல் எழுதிவிடுவார்கள். தாங்களோ ஆறுதலாகவும் புரியும்படியும், ஒவ்வோராசனமும் பழகத் தக்க கால இடை வெளிவிட்டு எழுதியிருக்கின்றீர்கள். அல்லாமல் ஆசிரியரிடம் கேளில் பழகுவதைப் போன்று குறிப்பு கொடுக்கின்றீர்கள். இன்னும் விசேஷமாக நோய்களை விளக்கி, இந்த நோய்க்கு இன்னின்ன ஆசனங்கள் செய்தால் தீரும் என்று எழுதியிருக்கின்றீர்கள். இவைகளைப் படித்துப் பயனடைந்தவர்களில் யானும் ஒருவன்.

அக்கரைப் பற்று, சிலோன் — தலைமை ஆசிரியர், ஸ்ரீ ராமகிருஷ்ண சங்க வித்யாலயம்

7. நான் ஒரு பகுத்தறிவு வாதி. யோகம், முனிவர்கள், சாஸ்திரம் முதலியவைகளில் நம்பிக்கை அற்றவன். எனக்கு நெடுநாளாகத் தீராத தலைவலி இருந்தது. செய்யாத வைத்தியமில்லை. எனது நண்பர் ஒருவரின் தூண்டுதலின்மேல் தங்கள் கட்டுரைகளில் சிறிது நம்பிக்கை ஏற்பட்டது. அதன்படி ஆசனங்களைச் செய்தேன். தலைவலி முற்றிலும் விலகிவிட்டது. பின் இதற்கு முன் என்னென்ன செய்தால் தலைவலி வருமோ, அவைகளை வேண்டுமென்றே செய்தும் பார்த்தேன். தலைவலி தலை காட்டவில்லை. ....................

2—5—53 காஞ்சிபுரம்

இம்மாதிரி கணக்கற்ற கடிதங்கள். சில மிக சுவாரஸ்யமாகவும் இருக்கின்றன.

மேலே கண்ட கடிதங்களை எதற்காக வெளியிட்டிருக்கிறேன் என்றால் இதுவரையில் ஏதாவது பல காரணங்களால் ஆசனங்களைப் பயிற்சி செய்யாமல் இருக்கும் நேயர்கள் இனியாவது தொடர்ந்து செய்யும் உணர்ச்சியை உண்டாக்கும் என்ற நம்பிக்கையில்தான். மனிதர்கள் நோய் நொடி இன்றி ஆரோக்கியமாக வாழ்ந்து வந்தால் தான் சந்தோஷமாக இருக்கலாம்.

ஆரோக்கியமாக வாழும் ரகசியம் தினம் தவறாமல் யோகாசனங்களைப் பயிற்சி செய்து வருவது தான். இந்தத் தொடர்க் கட்டுரைகளில் நான் சொல்லி வந்தபடி உணவு விஷயங்களிலும் கவனம் செலுத்தி வந்தால் கட்டாயம் நோயின்றி ஆரோக்கியமாக வாழ்ந்து வரலாம். உடல் ஆரோக்கியமாக இருந்தால், மனம் சந்தோஷமாக இருக்கும். மனம் சந்தோஷமாக இருந்தால் உற்சாகமாக வேலை செய்ய முடியும். உற்சாகமாக வேலை செய்வதுதான் கிடைத்தற்கரிய செல்வம். ஆகையால் தினம் தவறாமல் ஆசனங்களைச் செய்து பயன் அடைவீர்களாக! *(முற்றும்)*




அவனுடைய வெற்றிக்குக் காரணம் திடமான பயிற்சியே. அதுபோலவே அவன் வெற்றிக்குக் காரணமாயிருந்ததில் முக்கியமானது அவனுடைய உணவு. உண்மையாகவே இந்த வெற்றிக்கு வேண்டிய அளவு ஊக்கமும் பலமும் அவனுக்குக் கொடுத்தது அவனது உணவுதான். அவனுடைய உணவில் எப்பொழுதும் அதிக பலம் இருந்தது.




அவனுடைய உணவு சமைக்கப்பட்டிருந்தது

துஷார்
வனஸ்பதியில்

இரட்டிப்பாக சுத்தப்படுத்தி கைபடாமல் செய்யப்பட்ட வனஸ்பதி ஆரோக்கியமான முறையில் பாக் செய்யப்பட்டது.

துங்கபத்ரா இண்டஸ்ட்ரீஸ் லிமிடெட், கர்னூல்.




"பல வருஷங்கள் கீல் வாதத்தினால் துன்புற்று நிலைமை வர வர மோசமாகியும் வந்தது. கடைசியில் "க்ருஷனை" உபயோகித்துப் பார்க்குமாறு சொன்னார்கள். எனக்கு அது பூரண குணத்தை அளித்ததோடு வலி முதலியவைகளின்றி எனது வேலைகளைச் சரிவரச் செய்யுமாறும் செய்தது என்பதை மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்கிறேன். கீல் வாயுவினால் அவதியுறும் ஒவ்வொருவருக்கும் "க்ருஷனை"யே எப்பொழுதும் நான் சிபார்சு செய்வேன்."—W. T. A.

சாதாரணமாகக் கீல் வாயுவானது, சிறு நீரிலுள்ள வண்டல்கள் எலும்புச் சந்திகளிலும் (பூட்டுகள்) தசைகளிலும் தங்கி விடுவதாலேயே ஏற்படுகிறது. "க்ருஷனி"ன் ஆறுவித உப்புக்கள் இத்தேக்கங்களைக் கலைத்து மூத்திர கோசங்களையும் குடல்களையும் நன்கு தூண்டி அக்கழிவு பதார்த்தங்களை வெளித்தள்ளும்படிச் செய்கிறது. தினந்தோறும் ஒரு சிறு அளவு "க்ருஷன்" ஜலத்திலோ, டீயுடனோ உட்கொள்ளுவது உங்களைக் கீல் வாயுவினின்று விடு பட்டவராகச் செய்யும்.

**"க்ருஷன்"** உங்களது ஆரோக்கியத்திற்கும் ஆனந்தத்திற்கும் இன்றியமையாத உதவி

KSM—4




4

கிழவி எங்கோ வான வெளியைக் கூர்ந்து பார்த்தாள்.

அந்தக் கிழவியின் கன்னத்து மடிப்புக்கள் ஒன்றின்மீது ஒன்று மடிந்து கிடந்தன. அவள் தலையைக் கொஞ்சம் பின்னுக்குத் தள்ளி வாய்க்குள்ளாகவே சிரித்துக் கொண்டாள். அதனால் அவள் தொண்டையின் எலும்புகள் ஏறி இறங்கின; தளர்ந்து தொங்கிய அவள் சருமம் ஆடி ஒடுங்கிக் கொண்டிருந்தது.

மேலே கதையைத் தொடர்ந்தாள் :—

சுந்தரம் இலங்கைக்குச் சென்று இரண்டு மாதங்களுக்கு மேல் ஆகிவிட்டன.

அவனைப் பற்றி இதுவரையில் யாருக்கும் ஒரு தகவலும் தெரியவில்லை. அவனிடமிருந்து கடிதம் வரும் வரும் என்று எல்லாரும் எதிர்பார்த்துக் கொண்டிருந்தனர். மோகினி ஒவ்வொரு நாளும் அவனிடமிருந்து ஏதாவது கடிதம் வராதா என்று ஏங்கினாள். தன் பெரிய தாயாரிடம் அதைப் பற்றி எதையாவது கேட்பாள். இருந்தாலும் அதற்காக அவள் கவலைப்பட்டதாகத் தெரியவில்லை.

அவன் இல்லாதது சூரியன் இல்லாத வானத்தைப் போல் வெறிச்சென்றிருந்தது. மோகினியின் வீட்டில் உள்ளவர்கள் எல்லாரும் அவன் பிரிவை உணர்ந்தனர். அவன் நடந்த இடத்தைப் பார்த்து ஏங்கினர். அவன் பேச்சைக் கேட்காததால் யார் பேசினாலும் அவர்களுக்கு வெறுப்பாகவே இருந்தது. அடிக்கடி அடுத்த வீட்டை அதிசயத்தோடு பார்த்தனர். சில சமயங்களில் சுந்தரத்தை நினைத்து நினைத்துக் கண்ணீர் விடும் அளவுக்குக் கூட அவர்கள் உணர்ச்சி வசமாயிருந்தனர்.

இந்த மாதிரி சமயங்களில் மோகினியின் கண்களில் ஒரு சொட்டு நீர் கூட வரவில்லை. அவன் பிரிவை அவள் பொருட்படுத்தவில்லை போலவே தோன்றியது. அவளுடைய ஒவ்வொரு செய்கையிலும் ஒரு பெரிய மாறுதல் இருந்தது.

மோகினியின் தாயால் மட்டும் சுந்தரத்தின் பிரிவைத் தாங்க முடியவில்லை. அவள் எதையோ பறிகொடுத்து விட்டவள் போலக் கண்ணீரும் கம்பலையுமாகவே காட்சி அளித்தாள். அடிக்கடி சோகம் தாங்காது பொருமுவாள்; விம்முவாள்.

அவளைப் பார்த்து அவள் கணவன் தேறுதல் சொல்லுவார். அப்படிச் சொல்லும்போது அவரையும் அறியாமல் அவருக்கு வருத்தம் உண்டாகி விடும். அவரும் கண்கலங்கி வேதனைப்படுவார்.

ஒரு நாள் மோகினியின் தாயார் சாப்பிடக்கூட இல்லை. படுத்த படுக்கையாகவே இருந்தாள். யார் என்ன சொல்லியும் அவள் சாப்பிடுவதாக இல்லை. கடைசியில் அவள் கணவரே வந்து அவளைச் சமாதானப் படுத்த முயன்றார்.

"நீ இப்படி கண்ணீர் விட்டுக் கொண்டே இருந்தால் சின்னஞ் சிறு பெண்ணான மோகினிக்கு யார் சமாதானம் சொல்லுவது! கஷ்டப்பட வேண்டிய அவளே தைரியமாக இருக்கிறாள்" என்றார்.

"சுந்தரம் திரும்பி வந்து மோகினியை மணந்து கொள்வானா? என் பெண்ணை நான் மணக்கோலத்தில் பார்ப்பேனா!" என்று கேட்டாள். அவள் குரலில் விவரிக்க முடியாத சோகம் இருந்தது.

"கட்டாயம் வருவான். அவனுக்கும் மோகினிக்கும் உள்ள காதல் தொடர்பை நீ அறிய மாட்டாய்" என்றார்.

"அதெல்லாம் சரிதான். என் உள் மனசு என்னவோ அவன் இலங்கைக்குப் போனதிலிருந்து திரும்பி வரமாட்டான். மோகினியும் கல்யாணமாகாமலே வாழ்க்கையை நடத்தும்படி நேரிடும் என்று சொல்லுவது போலிருக்கிறது" என்றாள்.

"என் உடம்பில் உயிர் இருக்கும்வரை......"

"சரி, சரி! மேலே ஒன்றும் சொல்லாதீர்கள். சுந்தரத்துக்கும் மோகினிக்கும் திருமணம் நடக்கவில்லை என்றால் நான் சாகவேண்டியதுதான்" என்றாள். அவள் கண்கள் கலங்கிவிட்டன.

அவள் பேச்சைக் கேட்டவுடன் அவருக்கு ஒரு விஷயம் தெளிவாகி விட்டது. அவள் மனத்தில் எப்படியோ சுந்தரத்தின்மீது சந்தேகம் வந்து விட்டது. இந்தத் தீராத சந்தேகம் கொண்டவளைத் திருப்தி பண்ணுவதில் பலமாதிரி முயன்று பார்த்தார். கடைசியில் அதுவே அவருக்கு அலுப்பாய்ப் போய்விட்டது. அவருடைய மனத்திலும் ஏதோ ஒரு இனந் தெரியாத ஏக்கம் சூழ்ந்து கொண்டது. அவருக்கு மனைவியின் சோகத்தை

யும், மகளுடைய கவலையில்லாத மனத்தையும் பார்த்துக் கொண்டிருக்க முடியவில்லை. அதனால் அவருக்கு வீடே வெறுத்து விட்டது.

வீட்டின் சூழ்நிலை அவருக்குச் சிறிதும் பிடிக்கவில்லை. மனச் சாந்திக்காக வயல் வெளிப் பக்கம் அடிக்கடி போய் நீண்ட நேரம் அங்கேயே தங்கி வரலானார்.

ஒரு நாள் அவர் வயல் வெளியிலிருந்து தன் மனைவியை நினைத்துக் கவலைப்பட்டுக்கொண்டே வந்துகொண்டிருந்தார்.

"தீராத மன நோயுள்ளவர்களுக்கு மரணம்தான் இனிய விடுதலை. அவர்கள் உயிர் உள்ள வரை அவர்களுக்கு இன்பமில்லை. அவர்களால் பிறருக்கும் துன்பம்தான்" என்று வழியில் யாரோ ஒருவருக்கொருவர் பேசிக்கொண்டு சென்றனர்.

சாதாரண சமயத்தில் இந்த மாதிரி வார்த்தைகளைக் கேட்டால் அவர் இதைப் பொருட்படுத்தியிருக்க மாட்டார். வீட்டில் அவர் மனைவியின் மன நிலை இருந்த நிலையில் இந்த மாதிரி வார்த்தைகளை அவரால் கேட்டுக் கொண்டிருக்க முடியவில்லை. உயிர் மரண விஷயங்களைப் பற்றித் துன்பமடைந்த மனிதர்கள் மனம் கல்லாகி விடுவது; இயற்கை போலும் என்று எண்ணிக் கொண்டார். தன்னை எவ்வளவோ சமாதானப் படுத்திக் கொண்டும் அவரால் சமாதான மடைய முடியவில்லை. அடிக்கடி அந்த வழிப்போக்கர்கள் சொல்லிக் கொண்டு போன வார்த்தைகள் காதில் விழுந்து கொண்டேயிருந்தது.

"தீராத மன நோயுள்ளவர்களுக்கு மரணம் தான் இனிய விடுதலை."

"தீராத மன நோய் உள்ளவர்களுக்கு மரணம் தான் இனிய விடுதலை."

"தீராத மன நோய் உள்ளவர்களுக்கு மரணம் தான் இனிய விடுதலை."

இந்த வார்த்தைகள் வர வரப் பெரிதாகி அவர் காதில் வந்து தாக்கிக் கொண்டே இருந்தது. தம்




தலையை இரு கைகளாலும் அமுக்கிப் பிடித்துக் கொண்டார். காதுகளை இறுக மூடிக் கொண்டார். ஏதோ உணர்ச்சியால் உந்தப்பட்டு வேகமாக வீட்டுக்கு வந்தார்.

அன்று அவர் மனைவியின் நிலை மிகக் கொடுமையாக இருந்தது. அவள் ஒன்றும் பேசாமல் படுக்கையில் அசையாமல் படுத்துக் கிடந்தாள். இடையிடையே கை விரல்களை இறுக மூடிக் கொண்டாள். அதிலிருந்துதான் அவளுடைய வேதனையைத் தெரிந்து கொள்ள முடிந்தது. அவள் அறையில் சந்தடியில்லாமல் நிசப்தமாக இருந்தது. அந்த அறையின் அமைதியைக் கெடுக்காமல் மெதுவாக அவள் படுக்கையருகே வந்தார்.

அவள் வாய் திறந்து பேசவில்லை. அவளுக்குப் பேசச் சக்தி யில்லையோ, அல்லது தான் கஷ்டப்படும் சமயத்தில் தன்னுடைய கணவர் பக்கத்தில் இருப்பது அவளுக்கு நிம்மதியாகத் தோன்றிற்றோ தெரியவில்லை. "அப்பாடா!" என்று பெரு மூச்சு விட்டாள்.

அந்தச் சமயத்தில் மோகினி வந்து கதவின் அருகே நின்றாள். எதிர்ப் புறத்தில் இருந்து வந்த மங்கிய வெளிச்சம் அவள் முகத்தில் நன்றாக விழுந்தது.

படுக்கையில் படுத்துக் கிடந்த மோகினியின் தாயார் அவளைப் பார்த்தாள். அவள் உடம்பு நடுங்கிற்று. அவள்

தன் அருகில் உட்கார்ந்திருந்த கணவரின் கையைக் கெட்டியாகப் பிடித்துக்கொண்டு "அவன் யார்!" என்றாள்.

ஏதோ யோசனையிலிருந்த மோகினியின் தகப்பனார், "எனக்குத் தெரியாது" என்றார். அவர் குரலில் சோர்வு காணப்பட்டது.

அடுத்த கணம் அவர் ஏதோ தவறு செய்து விட்டவர் போலத் துடித்துப் போனார். தன்னைச் சுதாரித்துக் கொண்டு, "நம்முடைய மோகினிதான், உனக்குத் தெரியவில்லையா!" என்றார்.

அவள் தன் கணவரை ஒருதரம் விழித்துப் பார்த்தாள். அவள் பார்வையை எதிர்த்துப் பார்க்கும் சக்தி அவருக்கு அப்போது இல்லை. பிறகு அவள் மோகினியைப் பார்த்தாள். "இங்கே வா!" என்று கையை ஆட்டிக் கூப்பிட்டாள்.

மோகினி அவள் படுக்கைக்கு அருகில் வந்து தன் தாயுடன் ஏதோ பேசிக் கொண்டிருந்தாள். அப்போது மோகினியின் பெரிய தாயாரும் அங்கு வந்தாள். பெரிய தாயாரை மோகினியின் தாயார் பார்த்தாள். உடனே மோகினியிடம் பேசிக் கொண்டிருந்ததை நிறுத்தினாள். மோகினியின் கையைப் பிடித்துப் பெரிய தாயாரிடம் கொடுத்தாள். ஒரு வார்த்தையும் சொல்லாமல் பெரிய தாயார் முகத்தையே ஏக்கத்துடன் பார்த்தாள். அப்பொழுது அவள் மூச்சு விடக்கூடக் கஷ்டப்பட்டாள்.

பிறகு மோகினியைத் தன் அருகில் நெருங்கி வரச் சொல்லி அவள் தலையைத் தன் மார்பிலே சாத்திக் கொண்டாள். மெதுவாக அவள் தலையை வருடினாள். அவள் அப்படி மோகினியை அன்போடு வருடியது "வருத்தப்படாதே! எல்லாம் ஒரு நன்மைக்குத்தான். நீ சந்தோஷமாக உன் கணவனுடன் வாழ்வாய். அதைப் பார்த்து விட்டுத்தான் நான் சாகப் போகிறேன்" என்று சொல்லுவது போலிருந்தது.

கிழவி சட்டென்று கதை சொல்லுவதை நிறுத்திவிட்டுச் சிறிது நேரம் சும்மா இருந்தாள்.

"பெற்ற மனம் அல்லவா! தன் மகள் தான் விரும்பிய கணவனைக் கல்யாணம் செய்துகொண்டு வாழவேண்டுமே என்று கவலைப்படுகிறது. அந்த எண்ணத்தின் காரணமாக ஏற்பட்ட ஆசையால் அவள் மனம் ஏதோ சந்தேகப்பட ஆரம்பித்து விட்டது. அதனாலேயே அவள் படுத்த படுக்கையாகிவிட்டாள். அடாடா! இந்த மனத்தின் விசித்திர சக்தியை எப்படி விவரிப்பது என்றே தெரியவில்லை" என்றாள்.





"மனசை அடக்கி ஆளத் தெரிந்துவிட்டால் பிறகு உலகத்தில் ஒரு கஷ்டமும் இடையாது" என்றேன்.

"எல்லாம் சொல்லுவதற்குச் சுலபமாகத்தான் இருக்கும். உன்னால் அதை வாழ்க்கையில் கடைப்பிடிக்க முடிகிறதா!" என்று கேட்டாள். என்னுடைய பதிலை எதிர்பார்க்காமலே கிழவி கதையைத் தொடங்கினாள்.

மோகினி ஒவ்வொரு நாள் மாலை வேளையிலும் தாமரைக் குளத்துக்குப்

போவாள். சலவைக் கல் மேடை மீது உட்கார்ந்திருப்பாள். தானும் சுந்தரமும் சேர்ந்து உட்கார்ந்து பேசிக் கழித்த நாட்களை எண்ணி எண்ணி மகிழ்வாள். அவள் அப்படித் தன்னந் தனியாகப் போவது பெரிய தாயாருக்குப் பிடிக்கவில்லை. அவள் மோகினியைத் தொடர்ந்து செல்ல விரும்பினாள்.

அவளைத் தேடித் தாமரைக் குளத்துச் சலவைக் கல் மேடைக்கு வந்தாள்.

தாமரைக் குளம் வெறிச்சோடிக் கிடந்தது. வழக்கமாகத் தாமரைக் குளத்தில் இருக்கும் அழகு அன்று இல்லை.

"மோகினி இன்னும் வரவில்லையா! ஏன் இன்று இவ்வளவு நாழி!" என்று வாய்விட்டுக் கேட்டுக் கொண்டாள் பெரிய தாயார்.

தாமரைக் குளத்தை நோக்கிப் பார்த்தாள். அதில் இருந்த தாமரை மொக்குகளையும் பாதி மூடியிருந்த மலர்களையும் பார்த்தாள். அவைகள் காற்றில் அசைவதைப் பார்த்தால் அவளைப் பார்த்துச் சிரிப்பது போலிருந்தது.

எழுந்து சென்று மோகினி வரும் வழியைப் பார்த்தாள். திரும்பவும் சலவைக் கல் மேடை மீது வந்து அமர்ந்தாள்.

"மோகினி வந்தால்" என்று மனதுக்குள் நினைத்தாள். உடனே அவளுக்குச் சுந்தரத்தைப் பற்றி நினைவு வந்து விட்டது. "அவன் ஒரு விசித்திரமான பையன். யாரைப் பார்த்தாலும் சிரிக்கிறான். எப்பொழுதும் எதற்கும் தயாராக இருக்கிறான். நல்ல வாட்ட சாட்டமான கட்டைசல் பிடித்தது போன்ற உடல். நன்றாகப் படித்திருக்கிறான். உலகைப் பற்றியும் அதில் இருக்கும் நல்லது கெட்டது முதலியவைகளையும் நன்கு தெரிந்து கொண்டிருக்கிறான். அப்படிப்பட்டவன் இந்த மோகினி விஷயத்தில் ஏதோ சந்தேகப்படுகிறான். அவன் மோகினிக்குச் சரியான துணைவன் தான். அவனைப் பார்த்து எந்தப் பெண்ணும் மனதைப் பறி கொடுக்காமல் இருக்க முடியாது. ஆனாலும் அவனை இலங்கைக்கு இப்போது போக விட்டிருக்கக் கூடாது......"

இப்படியாக ஒரு கணம் சுந்தரத்தைப் பற்றி நினைத்தாள். மறு கணம் மோகினியைப் பற்றி நினைத்தாள். அவளும் அவள் தாயார்போலச் சுந்தரத்தின் பிரிவால் வேதனை தாங்காமல் படுத்து விட்டாளோ என்று நினைத்தாள். அதே சமயத்தில் மோகினி அங்கு வந்து நின்றாள். பெரிய தாயாரைப் பார்த்துச் சிரித்தாள்.

பெரிய தாயாரும் அவளைப் பார்த்துச் சிரித்தாள்.

"பெரியம்மா! உங்களை வீட்டில் தேடிப் பார்த்தேன்; காணோம், நீங்கள் இங்கு வந்து உட்கார்ந்திருக்கிறீர்களே!" என்றாள்.

"அது சரி, உன்னை எங்கே என்லாம் தேடுவது! இத்தனை நாழி எங்கே போயிருந்தாய்!"

"இப்படி தோட்டத்தில் உலாவிக் கொண்டிருந்தேன்."

"நீ இனிமேல் இப்படித் தன்னந் தனியாக அலையக் கூடாது. வீட்டில் அம்மா வேறு உடம்பு சௌகர்யமில்லாமல் இருக்கிறார்கள்."

"அதனாலேதான் பெரியம்மா, நான் தன்னந் தனியே வந்து விடுகிறேன்."

"ஏன்!"

"அம்மா, என்னைப் பார்த்தால் அழ ஆரம்பித்து விடுகிறார்கள். அவர்கள் மனதில் என்னமோ விபரீதமாக நினைத்து விட்டார்கள். அவர்களை என்னால் பார்க்கவே முடியவில்லை."

"உன்னையும்தான் பார்க்க முடியவில்லை. பாதி உடம்பாய் இளைத்துப் போய் விட்டாய்."

"ஆமாம் பெரியம்மா! அது எனக்கே தெரிகிறது! என்ன செய்வது என்றே புரியவில்லை."

"மனச் சாந்திக்கு நல்ல புஸ்தகங்களைப் படித்துக் கொண்டிருப்பதுதானே!"

"எந்தப் புஸ்தகத்தைப் படிப்பது! எதைப் படித்தாலும் என் மண்டையில் ஏற மாட்டேன் என்கிறது!"

"அப்படியானால், நீ ஒரு புஸ்தகத்தையும் படிக்க விரும்பவில்லை, அப்படித்தானே!"

பெரிய தாயார் மோகினியை ஒரு முறை கூர்ந்து பார்த்து விட்டுச் சொன்னாள்.

"உனக்குப் படிப்பதற்கு ஏதாவது புஸ்தகம் வேண்டுமா, சொல்லு!"

"எனக்கு ஒன்றும் வேண்டாம், பெரியம்மா."

"உன்னைப் போல் நான் சின்ன வயதாய் இருக்கும்போது படிக்கிறது என்றால் எனக்கு ரொம்பப் பிடிக்கும். அப்போது ஒரு புத்தகம் இரவல் வாங்கிக் கொண்டு வந்து படித்தேன். அதில் வந்த கதாநாயகன் பட்ட கஷ்டம் இன்னும் என் கவனத்தை விட்டு மறக்கவில்லை."

"அப்படி என்ன கஷ்டப்பட்டான்!"

பெரிய தாயார் அந்தக் கதாநாயகனைப் பற்றிச் சுருக்கமாகச் சொன்னாள்.

ஒரு பெரிய பணக்காரக் குடும்பத்தில் செல்வமாக வளர்ந்த பையன். தான் காதலித்த பெண்ணைக் கலியாணம் செய்து கொள்ள முடியாமல் வீட்டை விட்டு வெளியே போனான். தன் வாழ்வின் சொத்து சுகங்களை எல்லாம் துறந்து போனான். அவனுடைய பிரிவு அவன் பெற்றோர்கள் மனதை மாற்றி விட்டது. அந்தப் பெண்ணை அவனுக்கே மணம் முடிக்கத் தீர்மானித்தார்கள். அவனைத் தேடிப் புறப் பட்டார்கள். அதற்கு மத்தியில் அந்தப் பெண் தன் காதலனை எண்ணி எண்ணி இறந்து போனாள். ரொம்ப நாள் கழித்து அந்த வாலிபன் திரும்பி வந்தான். தன் காதலி இறந்து போனதைக் கேள்விப்பட்டு அவனுக்கு வாழ்க்கையில் வெறுப்பு ஏற்பட்டு விட்டது. கந்தலும் அழுக்கும் நிறைந்த ஆடைகளுடனே தன்னை யாரும் அடையாளம் காணாதவாறு நாய்களோடும், பிச்சைக் காரர்களோடும் வாழ்ந்தான். இன்னும் என்ன என்னவோ கஷ்டமெல்லாம் பட்டான். கடைசியில் தன் காதலியின் பெயரைச் சொல்லிக் கொண்டே வாழ்நாளெல்லாம் திரிந்தான்......

"அவன் ஏன் இப்படி வாழ வேண்டும்!" என்று மிகுந்த கவலையோடு கேட்டாள் மோகினி.

"யாருக்குத் தெரியும்!" என்று கவலைப் படாமல் பதில் சொன்னாள் பெரிய தாயார்.

மோகினியின் மனதைப் பெரிய தாயார் சொன்ன கதை என்னவோ செய்து விட்டது. பெற்றோர்கள் விரும்பாமல் காதலித்த காதலர்கள் ஒவ்வொருவருடைய கதியும் இப்படித்தான் ஆகிவிடுமோ என்று எண்ணி விட்டாள். அதுவே அவளுக்கு மிகுந்த வேதனையைக் கொடுத்து விட்டது. அதற்குமேல் அங்கு இருக்கப் பிடிக்கவில்லை.

"பெரியம்மா! என் மனம் இன்று என்னவோ ஒரு நிலையில் இல்லை. வாருங்கள் வீட்டுக்குப் போகலாம்" என்றாள்.

இருவரும் அங்கிருந்து சென்று விட்டனர்.

மோகினி அன்று இரவெல்லாம் தூக்கமில்லாமல் தவித்தாள். பெரியம்மாள் சொன்ன கதையில் காதலன் பட்ட கஷ்டம் அவள் கண் முன்னே வந்து கொண்டே இருந்தது.

## க்ளோரோபில் சேர்ந்த கோலினஸ்—

# 2* இருவழிகளில் வேலைசெய்கிறது!

Kolynos
Chlorophyll
TOOTHPASTE

'கோலினஸ்' புன்னகையில் ஆரோக்யம் ததும்புகிறது

*** ஆக்டிவ் க்ளோரோபில்—**

வாய் துர்நாற்றத்தை நீக்கி, சாதாரண ஈறுக் கோளாறு களைந்து தடுத்து, பல் சிதைவை ஒழிக்கிறது!

*** ஊடுருவும் நுரை—**

வாய்க்கு புதுமணம் தந்து, சுமணமுள்ள க்ளோரோபில்லை உங்கள் பிரஷ் நுழையாத இடங்களுக்கும் எடுத்துச் செல்லுகிறது!

க்ளோரோபில் சேர்ந்த கோலினஸ் அரை அங்குல அளவு எடுத்து பிரஷினால் பற்களைத் துலக்குங்கள். க்ஷணத்தில் அதன் நுரை வேலைசெய்வதை உணருவீர்கள் . . . சுத்தம் செய்கிறது, புதுமணம் ஊட்டுகிறது. இவற்றைப் பச்சை க்ளோரோபில்லை வாயிலுள்ள ஒவ்வொரு மூலைக்கும் பிரஷ் நுழையமுடியாத இடங்களுக்கும்கூட—எடுத்துச்செல்லுகிறது.

ஆக்டிவ் க்ளோரோபில் மற்றும் ஊடுருவும் நுரை—இரண்டின் சுறுசுறுப்பையும் அடையுங்கள்! இன்றே க்ளோரோபில் சேர்ந்த கோலினஸ் ஒரு டியூப் வாங்குங்கள்—இருவகை செயல் திறனுள்ள பற்பசை அது. ஒருமுறை உபயோகித்தால், எப்பொழுதும் அதைத்தான் உபயோகிக்கத் தோன்றும்!

### இரண்டு வழிகளில் சிக்கனம்கூட!



**1 சிறிதளவே போதும், பெரிதும் பயன்படும்!**

சாதாரண முறையில் பல் துலக்குவதில், க்ளோரோபில் சேர்ந்த கோலினஸை அரை அங்குல அளவு அதைப் போல் 400 மடங்கு பெருகி, வாயின் ஒவ்வொரு மூலைக்கும் ஊடுருவிச் செல்கிறது. ஆம், அரை அங்குலமே தாராளமாகப் போதும். ஆகவே ஒரு டியூப் நெடுநாள் வரும்!




தவிர—

**2** உங்கள் பணத்திற்கு ஏற்ற மிகப்பெரிய டியூப் அது!

இந்தியாவில் தயாரிப்பவர்கள்: ஜியாப்ரே மானர்ஸ் & கோ., லிட்., மாகனட் ஹவுஸ், பலார்ட் எஸ்டேட், பம்பாய் 1

டிரேட் மார்க் உடைமையாளர்கள்: ஒயிட்ஹால் பார்மசல் கம்பெனி, நியூ யார்க், N. Y. யு. எஸ். ஏ.

GK. 8[illegible]7

மறுநாள்.

சுந்தரத்திடமிருந்து மோகினிக்கு அன்று ஒரு கடிதம் வந்திருந்தது.

கடிதத்தைப் பார்த்த மோகினி வான வெளியில் பறக்க ஆரம்பித்து விட்டாள். கடிதத்தைப் பிரித்துப் படிக்காமலேயே அதைப் பலமுறை திருப்பித் திருப்பிப் பார்த்து மகிழ்ந்தாள்.

அந்தக் கடிதத்தில் மோகினியின் அற்புதமான உயர்ந்த குணத்தையும், அவளுடைய கற்பனு ஜாலங்கள் நிறைந்த கானத்தையும், அவளுடைய அன்பின் உணர்ச்சிக் காந்தத்தால்தான் இழுக்கப் பட்டிருப்பதையும் அந்தக் கடிதத்தில் எழுதியிருந்தான். கடிதத்தின் வாயிலாகத் தன் இதயத்தை, மோகினியின் காதலுக்காகத் துடிக்கும் இதயத்தைத் திறந்து காட்டியிருந்தான். அவன் கடிதம் மிக மிக நீண்டு இருந்தது. அது அகண்டமான கடலைத் தாண்டி வந்ததாகவே தெரியவில்லை. ஆழமான அகண்ட மகா சமுத்திரத்தால் கூட அவர்கள் காதலைப் பிரிக்க முடியவில்லை. அந்தக் காதல் கடிதத்தைப் படித்தாள்.

அருமைக் காதலி மோகினிக்கு.

உன்னையும், நம் ஊரையும் விட்டு வந்தவுடன் இன்றுதான் உனக்குக் கடிதம் எழுத முடிந்தது. நான் என்னுடைய இதயத்தின் கதவைத் திறந்து காட்டி விடுகிறேன். நாம் எத்தனையோ நாட்கள் நம் மனத்தை விட்டுப் பேசி யிருக்கிறோம். இருந்தாலும் நானும் உன்னைக் காதலிக்கிறேன் என்பதை என்னால் இன்னமும் புரிந்து கொள்ள முடியவில்லை. உன்னுடைய மனத்தைப் பூரணமாகத் தெரிந்து கொண்ட பின்னர் தான் நான் எதையும் முடிவாக முடிவு செய்ய முடியும்.

சில சமயங்களில் நாம் உணர்ச்சிப் பெருக்கில் பேசிக் கொண்டிருக்கும்போது என் மனத்தில் ஏதோ ஒரு திகில் உண்டாகும். ஆனால் உன் போன்ற உத்தம குணம் படைத்த ஒரு அழகி என் காதலின் வெற்றி வடிவமாக அமைந்திருப்பதை எண்ணி மகிழ்வேன். உன்னுடன் பேசிக் கொண்டிருக்கும்போது உன் உதட்டின் அசைவுகளைப் பார்ப்பேன். உன் குரல் இனிமையைக் கேட்பேன். உன் துடிக்கும் கண்கள், அதில் தோன்றும் அமைதி, உன் நீண்ட கருங்கூந்தல், அது காற்றிலே ஆடும் அழகு எல்லாவற்றையும் பார்ப்பேன். கற்பனைக் கெட்டாத உன் அழகு வடிவம் என்னை மயக்கி என் இதயத்தில் எல்லையற்ற இன்பத்தைக் கொட்டிவிடும். காதல் செய்வதே காதலுக்கு ஒரு சோதனை. ஆம்! நாம் கல்யாணம் செய்து கொண்ட பிறகு நம்முடைய காதல் குறைந்து விட்டால் நாம் ஒருவரை ஒருவர் ஏமாற்றிக் கொண்டவர்களாவோம். கல்யாணமான பிறகும் நம் காதல் வளர்ந்தால்தான், நம்முடைய காதல் உண்மைக் காதலாகும்.

நான் உன்னை விட்டுப் பிரிந்து இருக்கிறேன். ஆனால் என் மனக் கண்ணால் உன்னைப் பார்க்க முடிகிறது. உன் சந்திர முகமும், புன்சிரிப்பும், இனிய இசைக் குரலின் ஓசையும் மாறி மாறி வந்து எனக்கு இன்பமளிக்கிறது.

உன்னை நாளைக்கே பார்க்க முடியாதா என்ற ஆசை என் இதயத்தில் எழுகிறது. உன் கருநீலக் கண்கள், அதில் தவழும் காதல், அப்பொழுது நீ பேசும் அன்பு மொழி எல்லாவற்றையும் பார்த்துக் கேட்டு அனுபவிக்க என் இதயம் துடிக்கிறது. நான் விரைவில் வந்து விடுகிறேன்.

நம் வாழ்க்கையின் காதல் பாதையைச் சஞ்சலமின்றி, சந்தேகமின்றி அறிந்து கொள்வோம். வாழ்க்கையில், காதல் கும்மாளியில் எல்லாக் கஷ்டங்களும் கரைந்து மறைந்து விடும்.

ஆகையால் நாம் காதலையே காதலிப்போம். துணிகரமான, ஆழ்ந்த கும்மாளி போடுகின்ற காதலையே காதலிக்கப் பழகுவோம். காதலை நன்கு அனுபவித்து வாழ்கிறவர்களே அவர்கள்தான் இன்பத்துடன் இறுமாப்புடன் வாழ்வார்கள். காதலிக்கத் தெரியாத மக்கள் வீண் கவையற்ற வாழத் தெரியாத மக்கள்.

காதலியே! இன்னும் என்ன என்னவோ எழுத வேண்டும் என்ற ஆசைதான். எழுத வேண்டிய விஷயம் எவ்வளவோ இருக்கிறது. என்ன எழுதினாலும் என் இதய தாகம் தணிந்து விடாது.

நான் விரைவில் வந்து விடுவேன். என் வருகையை உன் இதயமே உனக்குத் தெரிவித்து விடும். மாமா, அத்தை, உன் அருமைப் பெரிய தாயார் எல்லோருக்கும் என் வணக்கங்கள்.

உன் அருமைக் காதலன்
சுந்தரம்.

இந்தக் கடிதத்தைத் தன் உயிருக்கு மேலாக மோகினி பத்திரப் படுத்தி வைத்துக் கொண்டாள். அவள் மனத்தில் ஒரு உற்சாகம் ஏற்பட்டது. சுந்தரம் தனக்கு எதிரிலேயே இருப்பதாக எண்ணிக் கொண்டாள். தன்னை நன்றாக அலங்காரம் செய்து கொண்டாள். அவனுக்குப் பிரியமான பாட்டுக்களைப் பாட ஆரம்பித்தாள். சின்னக் குழந்தை போலக் குதித்துக் குதித்து ஆட ஆரம்பித்து விட்டாள்.

மன நோயுடன் படுத்துக் கிடக்கும் தன் தாயிடம் சென்று தனக்குச் சுந்தரத்திடம் இருந்து கடிதம் வந்திருப்பதைப் பற்றிச் சொன்னாள். அவள் நொந்த உள்ளத்துக்கு அது எவ்வளவோ ஆறுதலாக இருந்தது.

அன்றே அவள் சுந்தரத்துக்குக் கடிதம் எழுதினாள். அன்பும் ஆதரவும்; காதலும் கனிவும்; உறுதியும் நம்பிக்கையும் நிறைந்த அந்தக் கடிதம் அகண்ட ஆழமான கடலையும் தாண்டி அவள் காதலை ஏந்திக் கொண்டு சென்றது.

* * * * * *

மாலை மறைந்து எங்கும் இருள் சூழ்ந்து கொண்டது. மோகினி தன்னுடைய அறையில் உட்கார்ந்து ஜன்னல் வழியாக வானத்தைப் பார்த்துக் கொண்டிருந்தாள். வானத்தில் சந்திரன் தோன்றியது. அது நீல வானத்தின் வயிற்றிலிருந்து முளைத்து எழுந்தது போலிருந்தது. உயிரெழும்பிக் கொண்டிருந்த சந்திரன் ஒளியினால் வானவெளி பிரகாசமாகத் தெரிந்தது. அவளுக்குச் சுந்தரத்தின் நினைவு வந்து விட்டது.

சந்திரன் அவளைப் பார்த்துச் சிரிப்பதுபோலிருந்தது. அது தானாகவே நகர்ந்து அவளை அணுகுவது போலிருந்தது. ஆனால் அதிகமாக நெருங்கி வந்து விடவில்லை. திடீரென்று சந்திரன் சுந்தரமாக மாறிவிட்டது. இந்தக் காட்சியை இன்னும் தெளிவாகக் காண வேண்டும் என்ற ஆசையில் அவள் தன் கண்களை மூடிக் கொண்டாள். சந்தேகமில்லை, சுந்தரமேதான். அவளை நெருங்கி வருவதற்கு முயன்று கொண்டிருந்தான்.

அவள் மூச்சுக் கூட விடாமல் அப்படியே மெதுவாகச் சாய்ந்தபடி படுத்தாள். அமைதியாக, மௌனமாக ஒருவித கானத்துடன் சாய்ந்து கிடந்தாள். அவளது பாதி மூடிய பசிய கண்கள் அவள் காதலன் சுந்தரத்தைப் பார்த்தன. அவனோ உணர்ச்சி மிகுதியினால் ஆனந்தத் திருப்தியுடன் அவளைக் கவனிக்காமலே நின்று கொண்டிருந்தான். பிறகு அவளைக் கூர்ந்து பார்த்தான்.

அவள் சிரித்தாள்; அவள் உதடுகளில் புன்னகை தெரிந்தன. கண்கள் ஒளி சிதறின; கன்னங்களில் குழி விழுந்தன.

சுந்தரம் அவளை ஆசையோடு பார்த்தான்.



மதுரைத் திருவள்ளுவர் கழகப் பன்னிரண்டாவது ஆண்டு நிறைவு விழா ஆகஸ்டு மாத முதல் வாரத்தில் மிகச் சிறப்பாக நடந்தது. விழாவின் நான்காம் நாள் அன்று குன்றக்குடி ஆதீனம், திருப்பெருந்திரு தெய்வசிகாமணி அருணாசல தேசிக பரமாசாரிய அடிகளார் தலைமை வகித்து அற்புதமான சொற்பொழிவாற்றினார்கள்.

மதுரை நகரசபைத் தலைவர், திரு அ. சிதம்பர முதலியார், பெருஞ்சொல் விளக்கனார், திரு அ. மு. சரவண முதலியார், குன்றக்குடி அடிகளார் முதலியவர்களை மேலே படத்தில் காணலாம்.

"மோகினி! என்னுடன் பேசமாட்டாயா!" என்று கைகளை நீட்டியபடியே கேட்டான்.

"சுந்தரம்!" என்று ரகசியமாக அழைத்தாள்.

"ஏன்!"

"உங்களைப் பார்த்துப் பேசுவதற்கு நான் எவ்வளவு ஆவலோடு இருந்தேன் தெரியுமா! நீங்கள் என்னை மறந்துவிட்டீர்களோ என்று நினைத்தேன்" என்றாள். 'குபுக்'கென்று வாய் விட்டுச் சிரித்தாள்.

"என்ன சந்தேகம்! ஆண்கள் ஒருநாளும் அப்படி இருக்க மாட்டார்கள்" என்றான்.

அவனுக்கு வெட்க உணர்ச்சி ஏற்பட்டுவிட்டது. அவளைப் பார்த்து அப்படிக் கேட்டதை நினைத்து நாணினான். அவளை நிமிர்ந்து பார்க்கவே கூசினான்.

"என் அருமைக் கண்ணே!" என்று அழைத்துக் கொண்டே அவள் அருகில் நெருங்கினான்.

மோகினி கண்களைத் திறந்தாள். ஆனால் அச்சமயம் ஒரு சிறு மேகம் வந்து சந்திரனில் தெரிந்த அவன் சுந்தரத்தை மறைத்து விட்டது. சுந்தரம் அவள் கண்களிலிருந்து மறைந்தான்.

மோகினியின் கனவு கலைந்தது.

அந்த இனிய கனவை நினைத்து நினைத்து மகிழ்ந்தாள் மோகினி.

இப்படியாகச் சந்திரன் உருவத்திலே வானத்தில் தோன்றிச் சிரித்துப் பேசினான் சுந்தரம். இளந் தென்றலிலே பலம் வாய்ந்த தன் சரீரத்துடன் அசைந்து ஆடினான். எல்லாம் பிரமைதான். ஆனால் உண்மையில் நீல வானம் இருந்தது. அதில் சந்திரனையோ சுந்தரத்தையோ காணவில்லை.

அதற்குமேல் தாங்காது என்று உணர்ந்தாள் மோகினி. காலையில் எழுந்ததும் தன் பெரிய தாயாரிடம் விஷயத்தைத் தெரிவித்தாள். எப்படியாவது சுந்தரத்தை இலங்கையிலிருந்து திரும்பி அழைக்க உடனே ஏற்பாடு செய்ய வேண்டும் என்று ரகசியமாக வேண்டிக் கொண்டாள்.

பெரிய தாயார் மோகினி பேசியதையும் அவள் கண்களையும் கவனத்தோடு பார்த்தாள். அவள் முகமும் கண்களும் தான் எவ்வளவு அழகாயிருந்தன.

பெரிய தாயார் பதில் ஒன்றும் சொல்லவில்லை. வெகு தூரத்துக்கு அப்பால் இருக்கும் சுந்தரத்தை நோக்கி அவள் எண்ணம் பாய்ந்து சென்றது.

இந்தச் சம்பவத்துக்குப் பிறகு மோகினி யாரிடமும் சுந்தரத்தைப் பற்றிய பேச்சையே எடுக்கவில்லை. அவள் உள்ளத்தில் ஆசைக் கோடுகள் அழிந்து விட்டன. இருந்தாலும் தினம் தாமரைக் குளத்துக்குப் போவாள். சலவைக்கல் மேடைமீது உட்கார்ந்திருப்பாள்.

மோகினி சுந்தரத்தை மறந்து விட்டாள் என்று கூட அவள் தகப்பனாரும் தாயாரும் எண்ண ஆரம்பித்து விட்டனர். அவர்கள் மட்டும் சுந்தரத்தின் வருகையை ஒவ்வொரு கணமும் எதிர்பார்த்துக் கொண்டிருந்தனர்.

மோகினி நோயுடன் இருக்கும் தன் தாயிடமும் வருவதில்லை. பெரிய தாயிடமும் முன்போல் சரளமாக மனம் விட்டுப் பேசுவதில்லை.

அன்று மத்தியானமே தாமரைக் குளத்துக்குப் போனாள். சலவைக்கல் மேடை மீது உட்கார்ந்தாள். எதையோ சிந்தித்தாள்.

அவளுக்குச் சமீபத்தில் யாரோ அழுது கொண்டிருந்தார்கள். குழந்தை அழுவதைப் போல் அந்தச் சத்தம் கேட்டது. விம்மியழும் சத்தம் கொஞ்சம் கொஞ்சமாகச் சிறிதாகிப் பிறகு நின்று விட்டது. திடீரென்று மீண்டும் புது பலத்துடன் அந்தச் சத்தம் கேட்டது. அது கிட்ட நெருங்கிக் கொண்டிருந்தது. சத்தம் வந்த திசையை மோகினி ஆர்வத்துடன் பார்த்தாள்.

ஒரு பெண். வயது பதினாறு இருக்கும். மரங்கள் நெருங்கிய புதர்களூடே வந்து கொண்டிருந்தாள். அழகாக இருந்த அவள் சிவந்த முகம் சற்று வீங்கி இருந்தது. கண்களில் இருந்து வடிந்த நீரை அவள் தன் புடவைத் தலைப்பால் துடைத்து விட்டுக் கொண்டாள்.

தன் வெறும் கால்களைத் தரையில் தேய்த்துக் கொண்டே மெதுவாக நடந்துவந்து கொண்டிருந்தாள். சுற்று முற்றும் பார்த்துக் கொண்டு

வந்தாள். பெரிய கருத்த அவள் கண்கள் துக்கம் ததும்பக் கண்ணீர் நிறைந்திருந்தது. ரோஜா மலர் போன்ற அவள் அழகிய காதுகள் கருத்து அடர்ந்த மயிர்களுக்கு இடையே எட்டிப் பார்த்தது. கலைந்து கிடந்த அவள் தலைமயிர் நெற்றி, கன்னம், தோள்களில் எல்லாம் உல்லாசமாகப் புரண்டு கொண்டிருந்தது.

அவள் ஏதோ ஒரு எண்ணத்தை மனத்தில் கொண்டு அங்கு வந்திருக்கிறாள் என்பது அவளுடைய பயம் நிறைந்த பார்வையி லிருந்து நன்றாகத் தெரிந்தது.

தாமரைக் குளத்தைப் பார்த்தாள். அதை ஒட்டினாற் போலிருந்த பெரிய கிணற்றைப் பார்த்தாள். இரண்டையும் மாறி மாறிப் பார்த்தாள். சட்டென்று ஒரு முடிவுக்கு வந்தவளாய்க் கிணற்றை நோக்கி ஓடினாள். அதற்குள் விழுவதற்கு முயன்றாள்.

இதற்குமேல் மோஹினியால் அந்தக் காட்சியைப் பார்த்துக் கொண்டிருக்க முடியவில்லை. அவள் இருக்கும் இடத்துக்கு ஓடினாள். அந்தப் பெண்ணின் கையைக் கெட்டியாய்ப் பிடித்து அங்கிருந்து இழுத்து வந்தாள்.

மோஹினியின் பிடியிலிருந்த அந்தப் பெண்ணின் உடல் நடுங்கிற்று. அவள் அழுகை நின்று விட்டது. ஆனால் விம்மிக் கொண்டிருந்தாள். சற்று நேரம் மோஹினியையே பார்த்தாள். அவள் உதடுகள் துடித்தன. அவள் முகம் சுருங்கிவிட்டது.

தன் உள்ளம் உடல் எல்லாமே சுருங்கி விட்டதைப் போல் உணர்ந்தாள் மோஹினி.

"இவ்வளவு பெரிய பெண். எதற்காகக் கிணற்றில் விழ ஓடிவந்தாய்!" என்று கேட்டாள்.

அந்தப் பெண் சட்டென்று தரையில் உட்கார்ந்து, முகத்தை மூடிக்கொண்டு உடல் குலுங்க அழ ஆரம்பித்து விட்டாள்.

"இதோ பார்! என்ன நடந்து விட்டது! உன்னை யாராவது அடித்து விட்டார்களா!"

அந்தப் பெண் முகத்திலிருந்த கையை எடுக்காமலே வருத்தத்துடன் தலையை ஆட்டினாள். கடைசியில் விக்கலுக்கு இடையே சொன்னாள்.

"என் வாழ்வு குலைந்து விட்டது அம்மா! இனி நான் உயிர் வாழ்ந்துகொண்டு இருப்பதில் ஒரு பலனும் இல்லையே" என்றாள். அதற்கு மேல் அவளால் பேச முடியவில்லை. வாய் விட்டு உரக்க அழ ஆரம்பித்து விட்டாள்.

இந்தச் சமயத்தில் யாரோ அங்கு திடுதிடென்று ஓடி வந்தது போலிருந்தது. ஒரு வயது சென்ற மாது தலைவிரிகோலமாய்க் கண்ணீரும் கம்பலையுமாய் வந்தாள். அவளைப் பார்த்தவுடன் அந்தப் பெண்மணி "அம்மா!" என்று அலறிய வண்ணம் அவளை அணைத்துக் கொண்டு அழுதாள்.

மோஹினிக்கு ஒன்றும் புரியவில்லை. சற்று நேரம் பேசாமலிருந்தாள். பிறகு அந்தப் பெரியம்மாளைப் பார்த்து "உங்கள் மகளா!" என்று கேட்டாள்.

"ஆமாம்" என்றாள் அந்த மூதாட்டி.

"நான் இங்கு இல்லாவிட்டால் உங்கள் மகள் இந்தக் கிணற்றில் விழுந்திருப்பாள்."

"அப்படிச் செய்துவிடப் போகிறாளோ என்று பயந்து கொண்டுதான் ஓடி வந்தேன்."

"அப்படி என்ன நேர்ந்து விட்டது!"

"கல்யாணமாகி ஒரு மாதம் கூட ஆகவில்லை. இவள் கணவன் இறந்து விட்டான்" என்றாள்.

மோஹினியின் தலையில் ஏதோ வந்து தாக்கியதைப் போல் வேதனைப்பட்டாள். அந்தத் தாக்குதலிலிருந்து தன்னைச் சுதாரித்துக் கொண்டு "இதற்காகத் தற்கொலை செய்து கொள்வது கேவலம். உங்கள் மகளை ஜாக்கிரதையாக வீட்டுக்கு அழைத்துப் போங்கள்" என்றாள்.

அடுத்த கணமே அங்கிருந்து திரும்பி விட்டாள்.

அவள் மனம் அமைதி யில்லாமல் தவித்துக் கொண்டிருந்தது. உணர்ச்சி இல்லாமல் நடந்து போனாள். வீட்டை நெருங்கும் போது பலர் சேர்ந்து அழுவது போலச் சத்தம் கேட்டது. அந்த அழுகைச் சத்தம் திடீரென்று அதிகமாகக் கிளம்பியது. அவசரம் அவசரமாக வீட்டுக்குள் சென்றாள். எல்லாரும் கண்ணீருடன் நின்று கொண்டிருந்தார்கள். அடுத்த வீடான சுந்தரத்தின் வீட்டிலிருந்து பயங்கரமாக அழுகைச் சத்தம் வந்து கொண்டே இருந்தது. படுத்த படுக்கையில் கிடந்த மோஹினியின் தாயார்கூட எழுந்து வந்து சோகத்துடன் நின்று கொண்டிருந்தாள்.

மோஹினியின் தாயாரும் தகப்பனாரும் ஒரே குரலில் "அவன் இறந்து விட்டான்" என்றார்கள். குலுங்கக் குலுங்க அழுதார்கள்.

மோஹினி விஷயம் புரியாமல் சிலை போல நின்றாள். பெரிய தாயார் மோஹினியை அழைத்துப் போய் அவளிடம் விஷயத்தை விளக்கிச் சொன்னாள். "இலங்கையில் சுந்தரத்தின் ஏஜன்டிடமிருந்து இப்பொழுது பக்கத்து வீட்டுக்கு ஒரு தந்தி வந்திருக்கிறது. விஷ ஜுரம் கண்டு சுந்தரம் இறந்து விட்டானாம்" என்றாள். அடுத்த கணம் அவளை அணைத்துப் பிடித்துக் கொண்டு 'ஹோ' வென்று கதறி விட்டாள்.

மோஹினியின் முகம் சவத்தைப்போல் வெளுத்துப் போய்விட்டது. அவள் ஆடாமல் அசையாமல் நின்று கொண்டிருந்தாள்.

இதைப் பார்த்த அவள் பெற்றோர்கள் மனம் பதறிப் போனார்கள்.

இந்தச் சமயத்தில் ஒரு அதிசயமான விஷயம் நடந்தது. நிர்மலமா யிருந்த வானம் படபட வென்று அதிர்ந்தது. மோஹினியின் பரிதாப நிலையைக் கண்டு வானமே குமுறுவது போலிருந்தது.

மோஹினி திடீரென்று பேசினாள். "இல்லை; என் சுந்தரம் சாகவில்லை. அவர் சாகமாட்டார். இதோ என் இதயத்தில் இருக்கிறார்" என்றாள். மௌனமாகத் தன் அறைக்குச் சென்றுவிட்டாள்.

இந்த இடத்தில் கிழவி கதையை நிறுத்தி விட்டாள். அவளால் உட்கார்ந்திருக்க முடியவில்லை. மெதுவாக எழுந்தாள். குறுக்கும் நெடுக்குமாக நாங்கள் உட்கார்ந்திருந்த பாழடைந்த கோயிலின் தாழ்வாரத்தில் இரண்டு மூன்று முறை உலாவினாள். திரும்பவும் என் எதிரில் வந்து பரிதாபமாக உட்கார்ந்தாள். அவள் கண்களில் கண்ணீர் நிறைந்திருந்தது.

என்னுடைய மனமும் ஒரு நிலையில் இல்லை. என்னால் கிழவியின் முகத்தையே பார்க்க முடியவில்லை. வானத்தை அண்ணாந்து பார்த்தேன்.

கருத்து அடர்ந்திருந்த மேகம் ஒன்று வான வெளியில் மிதந்து சென்றது. அது கலைந்தபோது அதிலிருந்து சிறு சிறு துண்டுகள் கலைந்து தனித் தனியே முன்னே ஓடின. கிழவியின் பெருமூச்சும் ஏதோ முனகும் சத்தமும் கேட்டது. வெகு தூரத்தில் நாய் ஒன்று அழும் குரல் கேட்டது. மூக்கைத் துளைக்கும் ஒரு வாசனையைத் தாங்கி வந்தது காற்று. மேகங்கள் மேலே மிதந்து சென்றபோது கீழே விதம் விதமான நிழல்களை உண்டாக்கின. அந்த நிழல்களைப் பார்க்கவே எனக்குப் பயமாக இருந்தது. (தொடரும்)

# அவர் நல்லவர்!

வெங்கு

பிரம்மா சிருஷ்டிக்கும்போதே அடுத்த வீட்டு அருணாசலத்தின் தொண்டையை வெண்கலத்தால் செய்து இவ்வுலகுக்கு அனுப்பி யிருக்க வேண்டும்! இல்லையென்றால், அவர் அடுத்த வீட்டில் அமைதியுடன் பேசினால் கூட 'கணீர், கணீர்' என்று என் காதில் விழுவானேன்! என்னை ஒரு காரியமும் செய்ய விடாமல் சங்கடப் படுத்துவானேன்!

அமைதியாகப் பேசும்போதே இந்த நிலையென்றால், ஆங்காரமும் ஆத்திரமும் பொங்கும்போது, அவர் குரல் எப்படியிருக்கும் என்று சொல்ல வேண்டியதில்லையென நினைக்கிறேன்! ஒரு நாளில் பெரும்பாலான நாழிகைகள் பின் குறிப்பிட்ட நிலையில் தான் ஸ்ரீமான் அருணாசலம் இருப்பார். பெரிய குடும்பி, குஞ்சும் குட்டியுமாக நான்கைந்து குழந்தைகள்—மைத்துனன், மைத்துனி, தம்பி, தங்கை என்று வேறு அவருடைய சம்ரக்ஷணையில் அண்டியவர்கள் அநேகம் பேர். இவ்வளவு பெரிய குடும்பத்தை வைத்துக் கொண்டு இந்தக் காலத்தில் காலட்சேபம் செய்வதே கஷ்டமான காரியம். இதில் அவ்வப்பொழுது குழந்தைகளும் மற்றவர்களும் ஒன்றில்லா விட்டால் ஒன்றுக்குப் பிய்த்துப் பிடுங்குவார்கள். மைத்துனன், "பள்ளிக்கூடத்தில் டிராமாவாம், இரண்டு ரூபாய் வேண்டும்" என்பான். பெண், "ரிப்பன் வேண்டும்" என்பாள். மைத்துனி "சிற்றாடை வேண்டும்" என்பாள். இப்படி நூறு பிடுங்கல் இருந்தால், மனுஷன் என்னதான் செய்வான். பாவம்! ஒரு சமயம் இல்லாவிட்டால் ஒரு சமயம் எரிந்து விழத்தான் தோன்றும். ஓ. வென்று இரைச்சலாக இருக்கும்! போதாத குறைக்கு பிரமன் வேறு குரலை வெண்கல நாதமாக வைத்துவிட்டான். இங்கே, என் வீட்டில் எனக்குக் கை கால் ஓடாது இந்த இரைச்சலைக் கேட்டுவிட்டால். கையிலிருக்கும் வேலையை அப்படியே போட்டு வெளியே வந்து விடுவேன்.



அன்றைக்குக் காலையிலும் அப்படித்தான் ஆகிவிட்டது. கம்பராமாயணத்தில் குகப் படலத்தை மிகச் சுவாரஸ்யமாக வாசித்துக் கொண்டிருந்தேன். குகனைப் பற்றிய வர்ணனை: அதாவது குகனுடைய உருவத்தைப் பார்த்தால் மலைபோல், திண்மையாக இருக்கும். ஆனால் அவன் உள்ளமோ அன்பு நிறைந்ததாக இருந்ததாம்!

கற்காணும் திண்மையான்
கரைகாணாக் காதலான்.

திண்மைக்குள் ஒரு கனிவு—இதைக் கண்டு வியந்து கொண்டிருந்தேன். அப்போதுதான் அருணாசலய்யரின் வெண்கல நாதம், கண் கண் கண் என்று ஒலித்தது. என் படிப்பு தடைப்பட்டது. நான் ராமாயண புஸ்தகத்தை அப்படியே மூடி வைத்துவிட்டு வெளியே வந்தேன்.

அந்தச் சமயம் அருணாசலத்தின் மருமான் சோமு வீட்டை விட்டு வெளியே வந்துகொண்டிருந்தான். நான் சோமுவைக் கூப்பிட்டேன். "டேய் சோமு' உன் மாமா ஏன் இப்படி இரைச்சல் போடுகிறார்! யாரோடு சண்டை!" என்று கேட்டேன்.

"ஒன்றுமில்லை, ஸார்! சூடாகத் தினம் இட்டிலி கொண்டு வந்து ஒருவர் போடுவார், பாருங்கள், அந்த மனுஷரோடே சண்டை!" என்றான்.

"அந்த மனுஷர் என்ன பாவம், பண்ணினார்!"

"தினம் அவர் வந்து வாசற்படி ஏறி 'இட்டிலி வேணுமா!' என்று கேட்டு விட்டுப் போகிறது தான் அவர் செய்த பாவம். மாமாவினுடைய வாதம் என்ன தெரியுமோ! இப்படி இந்த மனுஷன் தினம் கேட்பதனாலேதான் கடைக் குட்டி நாகராஜன் இட்டிலி வேணும் என்று பிடிவாதம் பிடிக்கிறானாம். தினம் இரண்டணா இதற்காக அழ வேண்டி யிருக்கிறதாம். இந்த மனுஷன் வரவில்லை என்றால் நாகராஜன் காலையில் இட்டிலி சாப்பிடும் வழக்கமும், ஒரு நாளைப் போல இரண்டணா அழவேண்டிய கஷ்டமும் தமக்கு ஏற்பட்டிருக்கா தல்லவா! ஆகவே, இந்த மனுஷர் ஏன் வருகிறார் என்று மாமா சத்தம் போடுகிறார். இவையெல்லாவற்றிற்கும் காரணம் அவர் கையில் இன்று காலணா கூட இல்லாதது தான் என்று நினைக்கிறேன்" என்று சொல்லிச் சிரித்துக் கொண்டே போனான் சோமு.

இதைக் கேட்டதும் எனக்கு அருணாசலத்தின் மீது கோபமும், அந்த இட்டிலிக்காரர்மீது அளவு கடந்த அநுதாபமும் ஏற்பட்டது.

எனக்கு அந்த இட்டிலிக் காரர் நன்கு அறிமுகமானவர்; நல்ல மனிதர். தினம் காலையில் பொழுது விடிந்தவுடன் யார் இவ்வளவு சிரத்தையுடன் இட்டிலி வேண்டுமா என்று கேட்பார்கள். என் வரைக்கும் அவர் பெரிய உபகாரியாகத்தான் தோன்றினார். அப்படிப்பட்ட மனிதரை ஸ்ரீமான் அருணாசலம் கோபித்துக் கொண்டதுபற்றி நான் ரொம்பவும் வருத்தப்பட்டேன். அருணாசலத்தினால் வாங்கச் சௌகரியப்படவில்லையென்றால், 'வேண்டாம், அப்பா' என்று நல்லபடியாகச் சொல்லி யனுப்புவது தானே! இவர் குழந்தை பிடிவாதம் பிடிக்கிறது என்றால் அதற்கு இட்டிலிக் காரரைக் கோபிப்பானேன்! தன் குழந்தையை அடக்குவதுதானே!

இப்படியெல்லாம் எண்ணினேன். ஸ்ரீமான் அருணாசலத்தை இன்றிரவு சற்று அமைதியாக இருக்கும் சமயமாகப் பார்த்து 'உம் குழந்தையை அடக்க முடியவில்லையென்றால் இட்டிலிக்காரரைக் கோபிப்பானேன் ஐயா!' என்று கேட்பது என்று தீர்மானித்துக் கொண்டேன். அச்சமயத்தில், இட்டிலிக்காரர், அடுத்த வீட்டை விட்டு வெளியே வந்து கொண்டிருந்தார்.

"என்ன ஐயா, இட்டிலிக்காரரே, அடுத்த வீட்டுக்காரர் ரொம்ப கோபித்துக் கொண்டார் போலிருக்கிறதே! அசட்டு மனிதர்! வயசு ஆகியிருக்கிறதே! யாரை எதற்குக் கோபித்துக் கொள்ள வேண்டும் என்று தெரியவில்லை!" என்று அனுதாபம் தெரிவிக்கும் முறையில், அருணாசலத்தைக் கோபித்துக் கொண்டேன்.

அந்த இட்டிலிக்காரர், "பாவம், அவரை ஒன்றும் சொல்லாதீர்கள், ஸார்! ரொம்ப நல்லவர்!" என்று சொன்னார்.

"என்ன!"

"அவர் என்றைக்கும் விட இன்றைக்குத்தான் அதிகமாக இட்டிலி வாங்கி யிருக்கிறார்.—ஒரு ரூபாய் இட்டிலி வாங்கியிருக்கிறார்" என்றார்.

எனக்கு என்ன சொல்வது என்றே தெரியவில்லை!

Edited, Printed and Published by R. Krishnamurthy at the "Kalki" Press
No. 20, Dr. Guruswamy Mudaliar Road, Kilpauk, Madras-10

# டால்டா வனஸ்பதி எல்லா சமையல்களுக்கும் மிகச்சிறந்தது

★ டால்டா உணவின் சுவையை வெளிக்கொண்டு வருகிறது.

★ டால்டா சக்தியளிக்கும் கொழுப்பு.

★ டால்டா சிக்கனமானது.

★ டால்டா சீல் செய்த டின்னில் எப்பொழுதும் சுத்தமாகவும், புதிதாகவும் இருக்கிறது.

## டால்டா செய்முறை குறிப்பை பின்பற்றி நிம்கி தயாரியுங்கள் . . . இதை எப்பொழுதும் விரும்புவீர்கள்!

இரண்டு கப் சலித்த மைதா மாவுடன் உப்பு, ½ தேக்கரண்டி பொடித்த மிளகு இவைகளைச் சேர்க்கவும். ½ கப் டால்டாவை மாவுடன் தேய்த்து மிருதுவான பிசைந்தமாவு தயாரித்துக்கொள்ளவும். சிறிய பந்துகளாக உருட்டி இரண்டங்குலம் குறுக்களவுள்ள தட்டைகளாக பரத்தி நடுவில் துவாரம் செய்யவும். ஆழமான வாணலியில் சூடான டால்டாவில் சிறிது சிவக்கும் வரை பொரிக்கவும்.




முக்கிய அறிவிப்பு—டால்டா சமையல் புத்தகம் தமிழ், வங்காளி, ஹிந்தி, ஆங்கிலம் என்ற பாஷைகளில் கிடைக்கிறது. 300 செய்முறை குறிப்புகள் அடங்கியது. விலை ரூ. 1/- தபால் செலவு அணா 10 தனி. உங்கள் பிரதிக்கு இன்றே எழுதுங்கள்:

தி டால்டா அட்வைஸரி ஸர்வீஸ் தபால் பெட்டி நெ. 353, பம்பாய் 1

# டால்டா

தேவைக்குத் தகுந்தவாறு பல சைஸ்களில் கிடைக்கிறது

HVM. 187A-50 TM

**REGD. NO. M. 4392**

*Registered as a newspaper in Ceylon*



# ஏன் கிப்ஸ் உபயோகிக்கும் குழந்தைகள் அதிருஷ்டமுடையவர்கள்?

அதிருஷ்டமுடை-
யவர்கள்
ஏனென்றால்

அவர்களுடைய
பெற்றோர்கள் கிப்ஸ்
டென்டிபிரீஸ் வாங்குகிறார்கள்!



அதிருஷ்டமுடை-
யவர்கள்
ஏனென்றால்

அவர்கள் அதன்
சுவையை
அனுபவிக்கிறார்கள்!



அதிருஷ்டமுடையவர்கள்
ஏனென்றால்
கிப்ஸ் டென்டிபிரீஸ்
பற்களை வெண்மை
யாகவும் ஈறுகளை
ஆரோக்கியமாகவும்
இருக்கச்செய்கிறது!





நீலம்,
சிவப்பு,
பச்சை
டப்பிகளில்




## கிப்ஸ் டென்டிபிரீஸ்

**பற்களுக்கு சீரிய குணமளிக்கிறது—குறைந்த செலவில்!**

GD. 33-50 TM

ஜி. அன்ட் டபிள்யூ. கிப்ஸ் லிட்., லண்டனுக்காக இந்தியாவில் தயாரித்தது